சுலபமான, சுகாதாரமான

## தண்ணீர் சப்ளைக்கு..

# டெமிங் டீப்ளே




### தானாக இயங்கும் தண்ணீர்க் குழாய்

கிராமத் தண்ணீர் சப்ளைத் திட்டங்களுக்கும் தொழில் ஸ்தாபன தண்ணீர் வசதிக்கும் மிகவும் சிறந்தது. மின்சாரத்தால் இயங்குவது. மேல் மட்டத் தொட்டி அவசியமில்லை. கட்டடத்தின் எல்லா இடங்களிலுமுள்ள குழாய்களுக்கும் அழுத்த சக்தி மூலம் எப்பொழுதும் தண்ணீர் சப்ளை செய்யும். ஆழமான கிணறுகளிலிருந்தும் தண்ணீர் எடுக்க வசதியானது.



## தண்ணீரை சுத்தப்படுத்த..

# SURECLOR

### ஆட்டோமாடிக் வாட்டர் - குளோரினேடிங் யூனிட்

நிறுவுவதும் இயக்குவதும் சுலபம். நம்பகமான 'ஸுர்குளோர்' கிராம தண்ணீர் சப்ளை, முனிசிபல் வாட்டர் ஒர்க்ஸ், தோட்ட எஸ்டேட்கள், தொழிற்சாலை, தண்ணீர் வசதித் திட்டங்களுக்கு மிகவும் சிறந்த வகையில் உதவுவது.

விவரங்களுக்கு :

# ஈசன் இன்ஜினியரிங் கம்பெனி லிட்

5/7, செகண்ட் லேன் பீச் - - மதராஸ்-1

மற்றும்

## தி பயனீர் சைக்கிள் ஹவுஸ்

மேலக் கோபுர வீதி - - - - மதுரை

# கல்கி

## பொருளடக்கம்

### தமிழ்ப் புத்தாண்டு மலர்



---

*"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.*

---



## வாழ்வின் ஒளி!

விளக்கிலே திரிநன்கு சமைந்தது
மேவுவீர் இங்குதீக் கொண்டு தோழரே!
களக்க முற்றஇருள் கடந்தேகுவார்
காலைச்சோதி கதிரவன் கோயிற்கே!

— பாரதியார்



மலர் 16
இதழ் 37

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

ஹேவிளம்பி
சித்திரை 2உ

# புத்தாண்டுப் பிரார்த்தனை

தமிழ்ப் பெருமக்களுக்கும் தமிழ் கூறும் நல்லுலகம் வாழ் சகோதர சகோதரிகள் அனைவருக்கும் புத்தாண்டு வாழ்த்துக் கூறுகிறோம்.

துன்முகி தேய்ந்து மறைந்து விட்டது; ஹேவிளம்பி பிறந்திருக்கிறது.

இந்தப் புது வருஷத்தில் சர்க்காரின் சாதனைகளைப் பற்றியோ, சோதனைகளைப் பற்றியோ ஜோசியம் கூறுவது முடியாத காரியம். எனினும், மக்களுக்குச் சகல நலன்களும் வழங்கி அருள் புரியுமாறு இந்த நன்னாளில் எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்போம். பழைய ஆண்டுக்கு விடை கொடுத்து, புதிய ஆண்டுக்கு நல்வரவு கூறும் இந்தப் புனித நாளில், பழைய கஷ்டங்களை மறந்து, மனச் சோர்வை அகற்றிப் புதிய நம்பிக்கை கொள்ள வேண்டும். நம்பிக்கைதான் சமுதாயத்தின் சிறந்த அஸ்திவாரம் என்று மகான்களும் அறிஞர்களும் கூறியுள்ளனர்.

ஆகையால், மக்களிடையே பல்வளம் பெருகவும், நற்றமிழ் வளரவும், கலைகள் ஓங்கவும் நம்பிக்கையுடன் ஆண்டவன் அருளை நாட வேண்டும். மாதம் மும்மாரி பொழிந்து பூமி குளிர வேண்டும். நெல்லும், நவதானியங்களும், கதலியும், தென்னையும் புன்னகை பூத்துக் குலுங்குவதைக் கண்டு மக்களின் அகம் குளிர வேண்டும். நாட்டில் போலிப் பிரசாரங்கள் மறைந்து உண்மையான ஜனநாயகம் மலர வேண்டும்; பொருளாதார நிலை முன்னேற வேண்டும்; விஞ்ஞானமும் விவேகமும் வளர வேண்டும்; எல்லாவற்றுக்கும் மேலாக மக்களிடையே தெய்வ நம்பிக்கையும் கடமை உணர்ச்சியும் வலுப்பெற்று விளங்க வேண்டும்.

இலங்கை, பர்மா, மலேயா, தென்னாப்பிரிக்கா முதலிய பல தேசங்களையும் பொன்னாடுகளாகச் செய்த தென்னாட்டு மக்கள் இன்று அந்த நாடுகளில் பலவித இன்னல்களுக்கு இலக்காகி யிருக்கிறார்கள். அவர்களை எதிர்த்து நிற்கும் பிரச்னைகள் இந்த ஆண்டு முடிவதற்குள் திருப்திகரமாகத் தீர்ந்து, அவர்களுக்கு அமைதியும் ஆனந்தமும் ஏற்பட வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

சுதந்திர பாரதத்தை ஆட்சி புரியும் மதிமந்திரிகள் விசித்திரமான புத்தாண்டுப் பரிசு வழங்கி யிருக்கிறார்கள்.

நயா பைசா என்ற பெயரில் புழக்கத்துக்கு வந்துள்ள புதிய நாணயங்களையே குறிப்பிடுகிறோம். பொது மக்கள் பெருமகிழ்ச்சியுடன் வரவேற்க வேண்டிய இந்தத் தசாம்ச நாணய முறையில், சர்க்கார் அர்த்தமின்றி ஆயிரம் சிக்கல்களைச் சிருஷ்டித்துக் குழப்பிக் குட்டிச்சுவராக்கி யிருக்கிறார்கள்.

பொதுத் தேர்தல்களில் நிலவிய அநீதிகளால் ஏற்பட்ட மன வேதனை தீருமுன், இந்தப் புதிய நாணயங்கள் மக்களிடையே புதிய மன வேதனைக்கும் குழப்பத்துக்கும் காரணமாக அமைந்துள்ளன. நமது பாரத சர்க்கார் ஒரு கணக்கிலும் அகப்படாத புதிய நாணயமுறையை அமுலுக்குக் கொண்டுவந்துவிட்டார்கள். அதையொட்டி அபத்தக் களஞ்சியமான, நகைப்புக்கிடமான ஒரு புதிய வாய்பாட்டையும் சிருஷ்டித்திருக்கிறார்கள்.

இந்த வாய்பாட்டைக் கையில் வைத்துக் கொள்ளாமல் எந்தக் காரியமும் நடைபெற முடியாது என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த வேதனைக்கு நிரபராதிகளான முப்பத்தாறு கோடி மக்கள் மூன்று வருஷ காலம் உட்பட்டுத் தீர வேண்டும் என்று வேறு முடிவு கட்டி யிருக்கிறார்கள்.

மக்களின் இந்த மன வேதனை வெகு விரைவில் தீர வேண்டும்; நாடு செழிக்க வேண்டும்; அறம் தழைக்க வேண்டும்; எல்லோரும் இன்புற்று நல்வாழ்வு வாழ வேண்டும் என்பதே நமது புத்தாண்டுப் பிரார்த்தனையாகும்.

# கேரளம் கற்பிக்கும் பாடம்

“மத்திய சர்க்கார் எங்கள் காரியங்களில் குறுக்கிட்டுத் தடை செய்தால், நாங்கள் பலாத்காரத்தில் இறங்குவோம்” என்று ஒரு கம்யூனிஸ்ட் தலைவர் சமீபத்தில் பேசியிருக்கிறார். இது பொறுப்பற்ற பேச்சாகும்.

கேரளத்தில் அமையப்போகும் கம்யூனிஸ்ட் ஆட்சியினர் செய்யும் முறையான காரியங்கள் எதிலும் மத்திய சர்க்கார் தலையிடப் போவதில்லை என்று சந்தேகத்துக்கு இடமின்றிக் கூறியிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல; கம்யூனிஸ்ட் ஆட்சிக்கு உதவி செய்யவும் தயாராக இருப்பதாகவே சொல்லியிருக்கிறார்கள். அப்படியிருக்க மேற்படி தலைவர் கூற்றின் பொருள் என்ன? ஒரு பிசாசைத் தானே எழுப்பி விட்டுக் கொண்டு அதற்கு மந்திரம் போடுவது போல் அல்லவா இருக்கிறது? இது எவ்வளவு பொறுப்பற்ற காரியம்.

கேரளத்தில் முதன் மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டிருக்கும் திரு சங்கரன் நம்பூதிரி அவர்களே இந்தப் பேச்சை விரும்ப மாட்டார் என்று நம்புகிறோம். ஏனெனில் பலாத்காரத்தில் இறங்கினால் கேரளத்தில் கம்யூனிஸ்ட் ஆட்சியின் கதை அத்துடன் முடிந்து போகும். ஆகவே, இத்தகைய எண்ணங்களுக்குக் கொஞ்சமும் கேரள ஆட்சியினர் இடம் தரக் கூடாது. மிக சாமர்த்தியமாக நடந்து கொண்டு மற்ற ராஜ்யங்களில் நடக்கும் மந்திரி சபைகளுக்கு ஒரு வழிகாட்டியாகத் துலங்க வேண்டும்.

ஜனநாயகம் என்றால் ஒரு ஆளும் கட்சி, அதற்கு ஒரு எதிர்க்கட்சி என்று இரண்டு கட்சிகள் இயங்க வேண்டும். ஆனால் நம் நாட்டில் ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு ஒரு நல்ல எதிர்க்கட்சி இல்லை. இது ஒரு பெருங் குறைதான். இந்தக் குறையைப் பெருமளவு கேரளத்தில் தோன்றியிருக்கும் கம்யூனிஸ்ட் ஆட்சி நிவர்த்தி செய்திருக்கிறது.

சட்டசபைகளில் நேருக்கு நேர் நின்று வாதாடும் எதிர்க்கட்சியாக இல்லா விட்டாலும், பாரத நாட்டின் ஒரு பகுதியில் கம்யூனிஸ்ட் ஆட்சி தோன்றி யிருப்பது, மற்ற ராஜ்யங்களில் ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு அச்சத்தை உண்டாக்கி யிருக்கிறது. அந்த அளவுக்குக் கேரள ஆட்சி ஒரு நல்ல எதிர்க்கட்சியாக இயங்குகிறது.

இன்றையச் சூழ்நிலையில் நம் நாட்டில் எதிர்க்கட்சி தோன்றுவதற்குப் பல காரணங்கள் உண்டு. காங்கிரஸில் சேராமல் அரசியலில் ஈடுபடுகிறவர்கள் பல கட்சிகளாகப் பிரிந்திருக்கிறார்கள்.

காங்கிரஸ் கட்சியில் சேராதவர்கள் தேர்தல்களில் வெற்றி பெறுவதற்கு ஒரு பெருந்தடையாக இருந்தது, அரசாட்சி நடத்தும் கட்சியினுடைய செல்வாக்கு என்பதைச் சமீபத்தில் மக்கள் கண்டார்கள்.

ஆட்சி அதிகாரத்தைக் கையில் வைத்துக் கொண்டு, அதாவது மந்திரி பதவிகளை வகித்துக் கொண்டே தேர்தல்களில் நிற்பது நம்முடைய நாட்டின் சூழ்நிலையில் பிற கட்சிகளுக்குப் பெருந் தடையாக இருக்கிறது. இது பொருளற்ற வாதம் அல்ல என்பதற்குச் சான்று, கேரளத்தில் நடந்த தேர்தலே. அங்கே காங்கிரஸ் கட்சி பதவியில் இல்லாமல் ஜனாதிபதியின் ஆட்சி நடைபெற்று வந்ததால் கம்யூனிஸ்ட் அபேட்சகர்கள் பெரும்பான்மை கணக்கில் தேர்தலில் வெற்றி பெற்றார்கள். காங்கிரஸ் கட்சியல்லாத ஒரு கட்சி பொறுப்பு ஏற்றுக் கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டது. அந்த ராஜ்யத்தில் காங்கிரஸ் ஆட்சியே நடைபெற்று வந்திருந்தால் பெரும்பான்மை ஸ்தானங்கள் கம்யூனிஸ்ட் கட்சி பெற்றிருக்க முடியாது. இதனின்று ஒரு பாடம் பெறலாம். எல்லா ராஜ்யங்களிலுமே பதவியிலிருக்கும் கட்சி ராஜினாமாச் செய்துவிட்டு கவர்னரிடம் நிர்வாகத்தை ஒப்புவித்து, தேர்தல் நடத்தினால் நியாய முறையில் எல்லாக் கட்சிகளுக்கும் சம வாய்ப்பு ஏற்படும். உண்மை ஜனநாயகத்துக்கும் வாய்ப்பு உண்டாகும்.

அவ்வாறின்றி, மந்திரிகள் பதவிகளிலிருந்து கொண்டே தேர்தலில் நிற்பதும், வியாபாரிகள் முதலியவர்களுடைய துணையும் செல்வாக்கும் பணமும் எல்லாவற்றையும் பெற்றுத் தேர்தல் நடத்துவதும், மற்றக் கட்சிகளைத் தோல்வியுறச் செய்வதும், பிறகு தாங்களே ஆட்சியில் மறுபடியும் அமர்ந்து தேர்தலில் துணைபுரிந்தவர்களுக்குச் சலுகைகள் தருவதுமாக நடைபெற்றால் ராஜ்ய நிர்வாகம் ஒரு கட்சிக்குச் சர்வமான்யமாகக் கொடுத்து விட்டதாக முடியும்.

## ராஜாஜியின் வாழ்த்து

தேர்தல்கள் தீர்ந்தன. மக்களைக் காப்பது தருமம் ஒன்றே. அறம் குன்றிப் போனால் அனைவருக்கும் தீமையே. ஆனபடியால் இன்று ஒரு லாபத்துக்காக அறநெறியை விட்டுப் பிழையில் இறங்கினோமானால் நாம் செய்த அதருமம் நின்று வளர்ந்து, நாளை நமக்கே தீமை உண்டாக்கும். இன்று நண்பர்கள் என்று நாம் எண்ணியவர்கள் நாளை பகைவர்கள் ஆகி விடுகிறார்கள். இன்று பகைவர்கள் என்று கருதியவர்கள் நாளை நம்முடைய நண்பர்களாகிறார்கள். அறியாமையாலேதான் பகைமை யெல்லாம் தோன்றுகிறது. புது வருஷத்தில் ஆண்டவன் தமிழ்நாட்டுக்கு நல்ல அருள்பாலிப்பானாக. அறிவும் ஆற்றலும் அன்பும் அமைதியும் ஓங்குக!

# விநாயகர் பேட்டி

[நமது அரசியல் நிருபர் அளப்பு]

“தமிழ்ப் புது வருஷத்துக்கு என்ன பரிசு தரப் போகிறீர்கள்?'' என்று விநாயகரைப் பார்த்துக் கேட்டது அவரது வாகனம்.

''நான் என்னத்தைக் கொடுப்பது உனக்கு? நான் ஒரு ராஜ்ய முதன் மந்திரியாயிருந்தால், உனக்கு ஒரு மந்திரி வேலை கொடுப்பேன். சதாகாலமும் என்னைப் புகழ்ந்து கொண்டேயிருக்கிறாய்!'' என்றார் விநாயகர்.

'அப்போது எனக்கென்னத்துக்கு இந்த மந்திரி வேலை?' என்ற குரல் கேட்டு, மூஞ்சூறு ஒரு கணம் திடுக்கிட்டது.

''சுவாமி! இப்பேர்ப்பட்ட அதிசயமான வார்த்தைகள் எங்கிருந்துவருகின்றன? இந்தக் காலத்தில் பதவி வேண்டாம் என்று கூறக் கூடிய தீர புருஷர் யார்?'' என்று கேட்டது.

''வேறு யாராக இருக்க முடியும்; தேசப் பிரதமர் நேருதான். கிளம்பு புது டில்லிக்கு!'' என்று உத்தரவிட்டார் விநாயகர்.

மறு விநாடியே புது டில்லியில் நேருஜிமுன் விநாயகர் தமது வாகனத்துடன் தோன்றி, ''பதவியில் வெறுப்புக் காட்டுவதென்பது ஒரு தைரியமான செயல்தான். ஆனால், நிர்வாகத்துக்கு உங்களுடைய சேவை மிகத் தேவை! நாட்டின் நல்லகாலம்தான், நீங்கள் பதவி ஏற்க ஒப்புக்கொண்டது!'' என்றார்.

''அதெல்லாம் சரிதான் சுவாமி! வெளி நாடுகளிலெல்லாம் பாருங்கள்! பிரதம மந்திரிப் பதவியில் புது முகங்களை அடிக்கடி காண்கிறோம். இந்தியாவிலும் மாறுதல்வேண்டாமா? அதனால்தான், வேறு யாரையாவது இந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கக் கூடாதா என்று பார்லிமெண்டு காங்கிரஸ் அங்கத்தினர்களிடம் கூறினேன். பதவி எனக்கு அலுத்து விட்டது. கல்லுப் பிள்ளையாரைப் போல் எவ்வளவு காலம் பிரதமர் பீடத்தில் உட்கார்ந்திருப்பது என்று கடிந்து கொண்டேன். ஆனால் காங்கிரஸ் மேலிடம் என்னைக் கட்டாயப்படுத்திப் பதவி வகிக்க இணங்கும்படி செய்து விட்டது!'' என்றார் நேருஜி.

''காங்கிரஸ் மேலிடத்தை இவ் விஷயத்தில், மிகவும் பாராட்டுகிறேன். மற்றப்படி ஏதோ கல்லுப் பிள்ளையார் என்றீர்களே அதைப் பற்றி ஒரு வார்த்தை!'' என்றார் விநாயகர்.

''என்ன அது?'' என்று கேட்டார் நேருஜி.

''கல்லுப்பிள்ளையாரைப் போல் பதவியில் விடாப்பிடியாக உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டும் என்ற மனோபாவம் ராஜ்ய அடிப்படையில் காங்கிரஸ் வட்டாரங்களில் ரொம்பவும் மலிந்திருக்கிறது. பதவிக்காகக் கொள்கை கிள்கை எல்லாவற்றையும் உதறி விட்டு இந்தத் தேர்தலில் அவர்கள் புரிந்துள்ள திருவிளையாடல்களை....!'' என்று விநாயகர் கூறி முடிப்பதற்கு முன், ''தெரியும் எனக்கு? நாட்டில் எங்கெங்கே என்னென்ன பதவி வேட்டை முயற்சிகள் இந்தத் தேர்தலில் நடந்ததென்பது எனக்கு நன்றாகத் தெரியும்...! என்றார் ஜவாஹர்லால் நேரு.

''அப்படித் தெரிந்திருக்கும்போது, நிர்வாகப் பொறுப்பிலிருந்து விடுபடுவதைப் பற்றி நீங்கள் எவ்வாறு சிந்திக்கலாம்?''

இதற்குள் 'க்ரீச்' என்று வாகனம் சத்தமிட்டது. அதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட நேருஜி, ''தமிழ்ப் புத்தாண்டுக்கு இதோ என்னுடைய பரிசு!'' என்று கூறி விட்டு ஒரு தட்டு நிறையத் தின்பண்டங்களை விநாயகரிடம் அளித்தார். அதில் ஒரு பகுதியை மூஞ்சூறுக்கு அளித்து விட்டு, ''புறப்படு, தெற்கு நோக்கி!'' என்று கட்டளையிட்டார் விநாயகர். வாகனமும் புறப்பட்டது. ஒரு குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும் பிரேக் போட்டது போல் நின்று, ''சுவாமி, மன்னிக்க வேண்டும்! இந்தியாவை விட்டு வேறு எங்கோ திசை தவறி வந்து விட்டேன் போலிருக்கிறது! எங்கு பார்த்தாலும் ஒரே செங்கொடிகள் பறக்கின்றன. சுத்தியும் அரிவாளும் காட்சி தருகின்றன. இது என்ன மாஸ்கோ நகரை அடைந்து விட்டேனூ தெரியவில்லையே!'' என்றது மூஞ்சூறு.

அந்த இடத்திலிருந்து சற்றுத் தொலைவில் ஒரு மனிதர் பெரிய மரம் ஒன்றை அறுத்துக் கொண்டிருந்தார். அவரை அணுகி, ''இது எந்த தேசம்? ரஷ்யாவா? ரஷ்யாவானாலும் எந்த ஊர்?'' என்று மூஞ்சூறு வினவிற்று.

''ஓ! இவடே கேரள தேசமாண! நோக்கியல்லோ....நிங்ஙள்....'' என்றார் மரம் அறுத்துக் கொண்டிருந்த அந்த மனிதர்.

''சரியாகப் போச்சு போ! கேரளத்துக்கு வந்து விட்டோம்! இதுவும் ஒரு நல்லதுக்குத்தான். கம்யூனிஸ்டு முதலமைச்சரைப் பார்த்து விட்டுப் போகலாம்!'' என்றார் விநாயகர்.

''வரவேண்டும், வரவேண்டும்!'' என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தபோது முதலமைச்சர் திரு ஈ. எம். எஸ். நம்பூதிரிபாட் எதிரே வந்து கொண்டிருந்தார்.

''நல்ல சகுனம்தான்! உங்களைப் பார்க்க வந்தேன். நீங்களே எதிரில் வந்து விட்டீர்கள்!'' என்றார் விநாயகர்.

''எங்கள் சாதனை எப்படி? ராஜ்ய நிர்வாகத்தில் எங்கள் கொடியை உயர்த்தி விட்டோம் பார்த்தீர்களா?'' என்று பெருமிதத்துடன் கேட்டார் நம்பூதிரி பாட்.

''பொதுஜன ஆதரவு இருந்தால் எதைச் சாதிக்க முடியாது? நல்லது, போகட்டும். அழிப்பு வேலையிலேயே ஈடுபட்டு வந்த நீங்கள் இப்போது ஆக்க வேலையில் ஈடுபட முன் வந்தது பற்றிச் சந்தோஷம்தான். ஜனநாயக முறையில் உங்களுக்கு நம்பிக்கை பிறந்ததையும் பாராட்டத்தான் வேண்டும். மத்திய சர்க்காரும் ஜனநாயக அடிப்படையில் அமைந்ததுதான் என்பதை மறந்து விடாமல், அதற்கு வீண் தொல்லைகள் கொடுக்காமல் நடந்து கொள்ளும்வரை உங்களுடைய நிர்வாகம் சிறப்பாக ஓங்கும். இந்திய சர்க்காரும் உங்கள் நிர்வாகத்துக்குப் பட்சபாதம் செய்யப் போவதில்லை என்று அறிவித்து விட்டது. ஆகையால், பேஷாக முன்னேறுங்கள்!'' என்று கூறிவிட்டு, விநாயகர் கிளம்பினார்.

சென்னை நெருங்கியதும், ''சுவாமி! நமஸ்காரம்! நமஸ்காரம்! புதுடில்லிக்குத் தாங்கள்

போனதாகத் தெரிந்தது!'' என்று கூறியவாறு எதிரே தமது பிரம்மாண்டமான உல்லாச மோட்டார் வண்டியை நிறுத்திவிட்டு இறங்கி வந்தார் ஒரு காங்கிரஸ் எம். எல். ஏ.

''நான் டில்லிக்குப் போனது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?''

''அரசமரத்தடியில் பார்த்தேன். உங்களைக் காணவில்லை. அதனால் டில்லிக்குத்தான் தாங்கள் போயிருக்க வேண்டும் என்று நீர் மானித்து விட்டேன்.''

''அப்படிக் காணவிட்டால் டில்லிக்குத் தான் நான் போயிருப்பேன் என்று எவ்வாறு ஊகித்தீர் ஐயா?''

''இதுவும் ஒரு பிரமாதமா எனக்கு? மாகாணங்களின் மந்திரிசபை பெயர்கள் ஜாபிதா புது டில்லியில் ஆராயப்படும்போது யாருக்குத்தான் அங்கு போக வேண்டுமென்று ஆவல் இருக்காது?'' என்றார் எம். எல். ஏ.

''நான் யாருக்காகவும் அங்கு செல்லவில்லை!'' என்றார் விநாயகர்.

''இருக்கலாம். ஆனால், எனக்காகத் தாங்கள் அப்படி 'ஒரு வார்த்தை' இலேசாகப் போட்டு 'வைக்கக் கூடாதா? தேர்தலில் ஏராளமாகப் பணம் போட்டு விட்டேன். போட்ட பணத்துக்கு ஒரு மந்திரி பதவிகூடக் கிடைக்காவிட்டால் என்ன லாபம், சொல்லுங்கள். வெறும் எம். எல். ஏ. பட்டம் எனக்கென்னத்துக்கு? நீங்கள் எனக்காகக் கொஞ்சம் ஏதாவது செய்யத்தான் வேண்டும். உங்களை நான் அதற்குத் தகுந்தபடி கவனித்துக் கொள்கிறேன். நமக்குள் இருக்கட்டும். யாருக்கும் தெரிய வேண்டாம். பத்தாயிரம் மோதகம் தந்து விடுகிறேன். காரியத்தை முடித்துக் கொடுங்கள்!'' என்றார். அவரைத் தட்டிக் கழித்துக் கொண்டு விநாயகர் சற்றுத் தூரம் சென்றதும் இன்னொரு பிரமுகர் குறுக்கிட்டார். ''என்னைத் தெரிகிறதா சுவாமிக்கு? நான்தான்....'' என்று தம்மை அறிமுகப் படுத்திக் கொண்டார் ஒரு பத்திரிகையாளர்.

''என்ன சமாசாரம்?''

''காங்கிரசை ஆதரித்து எழுதினால், ஏதாவது ஒரு நியமனப் பதவியாவது வாங்கித் தருவதாகக் கூறினார்கள். காரியம் ஆனபிறகு என்னைத் திரும்பிக்கூடப் பார்ப்பார்களா என்று சந்தேகமாயிருக்கிறது. என்னையே இந்தக் காங்கிரஸ்காரர்கள் ஏமாற்றி விடுவார்கள் போலிருக்கிறதே? இந்தச் சமயத்தில் நீங்கள் ஏதாவது உதவி செய்யக் கூடாதா? உங்களைத்தான் நான் ரொம்பவும் நம்பியிருக்கிறேன். கைவிடாதீர்கள் நீங்களும்...!'' என்று வழிமறித்துக் கொண்டார்.

ஆனால், மூஞ்சுறு குறுக்கிட்டு ''க்ரீச்'' என்று சத்தமிடவே, வழிமறித்த பிரமுகர் ''நேரமாகி விட்டதா? ரொம்ப சரி! இதோ வழி விடுகிறேன். ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள், பதவிக்கு ஒரு உதவி!'' என்று சொல்லிக் கொண்டு அப்பால் நகர்ந்தார். விநாயகரும் அரசமரத்தடி வந்து சேர்ந்தார்.

# வலம்புரி முத்தே!

**ப**ண்டை நாட்களிலே சித்திரை மாதத்தில் வரும் பௌர்ணமியன்று, காவிரியும் கடலும் கூடுமிடத்திலே அதாவது காவிரிப் பூம்பட்டினத்திலே ஆடவரும் பெண்டிரும், யுவர்களும் யுவதிகளும் கூடிக் குலாவி மகிழ்ந்தார்கள். இந்திரனுக்கு விழாக் கொண்டாடிப் பேருவகை அடைந்தார்கள். அத்தகைய புனித நாளிலே இந்த இதழ் வெளியாகிறது.

தமிழ் மக்கள் இந்திர விழாக் கொண்டாடிய செய்திகள் எல்லாம் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்திலே காண்கிறோம். இளங்கோ அடிகள் தந்த அருஞ் செல்வத்திலே அந்தப் பகுதி மிக மிகச் சுவையுடையது. கோவலனும் மாதவியும் கொஞ்சிக் குலாவிய காட்சிகள் மிக மிக அருமையானவை!

ஆனால் இளங்கோ சிருஷ்டித்த கண்ணகி 'இத்தகைய இன்பத்தை எங்கே, கண்டாள் பாவம்!' என்று சிலர் நினைக்கலாம். அந்த ஐயத்தைப் போக்குவதற்காகவே இவ் விதழ் அட்டைப் படத்திலே கற்புக்கரசி கண்ணகியும் கோவலனும் சரச சல்லாபம் புரிந்த ஒரு காட்சியை நல்குகிறார் நமது ஓவியர் வினு.

கடிமணம் ஆனதும், கோவலன் கண்ணகியின் இருப்பிடத்துக்கு வருகிறான். அங்கு அவள் அழகிலே மயங்கி, காதல் உணர்ச்சி பொங்கக் கூறிய மொழிகள் தமிழின் இன் சுவைக்கு, இளங்கோ அடிகளின் இன் சொல் ஆட்சிக்கு ஒரு அற்புத எடுத்துக்காட்டாகும். கோவலன் கூறுவதைக் கேளுங்கள் :

**மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!**
**காசறு விரையே! கரும்பே! தேனே!**
**அரும்பெறல் பாவாய்! ஆருயிர் மருந்தே!**
**பெருங்குடி வணிகன் பெருமட மகளே!**
**மலையிடைப் பிறவா மணியே என்கோ!**
**அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ!**
**யாழிடைப் பிறவா இசையே என்கோ!**

இளங்கோ அடிகள் சிருஷ்டித்த கோவலனும் கண்ணகியும் சித்திரா பௌர்ணமியன்று உல்லாசமாகப் பொழுதைக் கழித்ததாகப் பாடவில்லை. ஆனால் அந்த அருமையான காட்சியை நமது ஓவியர் கற்பனை செய்து பார்த்து இந்தச் சித்திரா பௌர்ணமியன்று வழங்குகிறார்.

இந்தச் சித்திரா பௌர்ணமியை யொட்டித் தமிழ் கூறும் நல்லுலக மெங்கும் இளங்கோ அடிகளின் திருநாள் கொண்டாடப்படுகிறது.

பத்தினித் தெய்வமான கண்ணகியின் வழி வந்த தமிழ்நாட்டுத் தாய்க்குலம் வாழ்க!

**கல்கி மாதச் சிறு கதைப் போட்டி**

**மார்ச்சு மாதச் சிறுகதைப் போட்டியின் முடிவும் குறிப்பும் அடுத்த இதழில் வெளியாகும்.**


JASMINE

## நிகழ்ச்சிச் சித்திரம்



- விஜி




பழைய மந்திரி ஸ்ரீ சேதுபதி
ஸ்ரீ காமராஜரைச் சந்தித்து
அளவளாவினார். - செய்தி
சேதுபதி
காமராஜ்


ஒரிஸ்ஸா கவர்னர்
அந்த ராஜ்யத்தில்
கூட்டு மந்திரி சபை
அமைக்கும்படி காங்கிரஸ்
சர்க்காரைக் கேட்டுள்ளார்.
ஒரிஸ்ஸா சர்க்கார்


இந்தப் பரிசோதனையின்
முடிவை ஆராய்ச்சி
செய்வோம்.
வெள்ளையர்கள்


அணுகுண்டு
பரிசோதனை
ஆசியா

# காலசக்கரம்

ராஜாஜி

வக்கீல் சாம்பசிவய்யருடைய மாட்டு வண்டி பிரசித்தம். மற்ற வக்கீல்கள் எல்லாரும் குதிரை வண்டியும், நார்ட்டன் ராமசுப்பய்யர் ஒரு மோட்டாருமே வைத்திருந்தார்கள். கட்சிக்காரர்கள் போட்டி யிட்டுக்கொண்டு போய் வைத்து வந்த வக்கீல் சாம்பசிவய்யர் மட்டும் ஏன் கர்னாடக ஒற்றை மாட்டு வண்டியிலேயே சமாளித்து வருகிறார் என்பது ஊரில் பெரிய பிரச்னை. பலர் பல வேறு சமாதானம் சொல்லுவார்கள். ஜமீன்தார் நமசிவாய கவுண்டர் வீட்டில், சீட்டுக் கச்சேரியில் இந்தச் சம்பாஷணை நடக்கும்.

''பிசுனாறித்தனம்தான் இதற்குக் காரணம். வேறு ஒன்றுமில்லை'' என்பார் சுப்பிரமணியம் செட்டி.

''அதுவல்ல'' என்பார் ஜமீன்தார். ''மனைவி, பெண் குழந்தைகளைப் பார், பட்டும் தங்கமும் வைரமும் டணீர் டணீர் என்று. சிக்கனம் ஒன்றுமில்லை. ஆய்வந்த வண்டி, ஏழையாகச் சின்ன வக்கீலாக இருந்தபோது வைத்திருந்த வண்டியே இப்போதும் இருந்தால் வந்திருக்கும் பாக்கியத்துக்கு நன்றிச் சின்னமாகவும் துஷ்டப் பார்வைக்குக் காப்பாகவும் இருக்கும் என்று வைத்திருக்கிறார்'' என்பார்.

''அப்படியெல்லாம் மூட நம்பிக்கைக்காரர் அல்ல சாம்பசிவய்யர். உங்களுக்குத் தெரியாதா?'' என்பார் குப்பாண்டி, மளிகைக் கடைச் சங்கத்துக் காரியதரிசி. இவர் எப்போதும் வக்கீல்கள் கூட்டத்திலேயே இருப்பவர்.

''அவர் மனைவியுடைய நிர்ப்பந்தமே இதற்குக் காரணம்'' என்பார் சுப்புராயர். ''அந்த வீட்டில் மகாராணியார் ஆட்சிதான் எல்லாம்.''

''இல்லை; இல்லை அந்த வண்டியை ஓட்டும் ராமன்தான் இதற்குக் காரணம்'' என்றார் வக்கீல் குமாஸ்தா சின்னசாமி பிள்ளை.



''அதெப்படி?'' என்று வக்கில் குப்புராயர் கேட்டுவிட்டு ஒரு தரம் கண்ணைச் சிமிட்டினார். இவருக்குச் சேலம் வக்கீல்களுக்குள் குறும்புக்காரர் என்று பெயர்.

''அது இங்கே சொல்லப்படாது'' என்றார் சின்னசாமி பிள்ளை

''சின்னசாமி பிள்ளை எமகாதகன். அவனுக்கு எல்லார் வீட்டுச் சமாசாரமும் தெரியும்'' என்றார் குப்புராயர்.

* * *

''சாமி! நான் திருப்பதி போக வேண்டும். வேண்டுதல் இருக்கிறது. வீட்டில் சொஸ்தமாச்சு. நேற்று கனவு கண்டேன், வேங்கடரமண சுவாமி கோபித்துக்கொண்டு 'ஏண்டா வரவில்லை' என்று கேட்டார். எனக்கு உடம்பெல்லாம் வியர்த்து விட்டது. கட்டாயம் இந்தச் சனிக்கிழமை நான் புறப்பட்டுப் போக வேண்டும்'' என்றான் வண்டிக்கார ராமன்.

''நீ பிடிவாதக்காரன். போக வேண்டும் என்றால் போ. நான் கோர்ட்டுக்குப் போக வாடகை ஜட்கா வண்டி வைத்துக் கொள்கிறேன். எத்தனை நாட்களாகும் திரும்பி வர?'' என்று கேட்டார்.

''ஒரு மாதமாகும். கால் நடையாக நடந்து போவதாக இருக்கிறேன். அதுதான் சாமி உத்தரவு'' என்றான் ராமன்.

''பைத்தியக்காரா! கால் நடையாவது கில் நடையாவது! இந்தக் காலத்தில் எல்லாரும் ரயிலில் சுகமாகப் போகிறார்கள், நீயும் ரயில் ஏறிப் போ, செலவுக்கு நான் தருகிறேன்'' என்றார்.

''இல்லேங்கோ. நடந்தே போக வேண்டும்'' என்றான்.

''உன் இஷ்டம்'' என்றார் சாம்பசிவய்யர்.

''மாட்டை விற்றுவிட்டுத் திருப்பதியில் சாமி உண்டியில் போட வேண்டும்'' என்றான். ''அப்படி உத்தரவாச்சு. திருப்பதி சாமி பேச்சுக்குத் தடை செய்ய முடியாது. வீட்டுக்காரியும் அப்படியே செய்துவிட வேண்டும் என்கிறாள்'' என்று ராமன் சொல்ல, ''உன் இஷ்டம்!'' என்றார் சாம்பசிவய்யர்.

வண்டி ஓட்டும் ராமனுக்குச் சொந்தம் அந்த மாடு. வண்டி மட்டும் சாம்பசிவய்யருடையது. மாதா மாதம் ராமனுக்குக் கொடுக்கும் சம்பளத்தோடு மாட்டின் கணக்குக்காகவும் இரண்டு ரூபாய் சேர்த்துக் கொடுத்து வந்தார் வக்கீல் சாம்பசிவ ஐயர்.

மாட்டை விற்று விட்டான். ஐம்பது ரூபாய்க்கு வாங்கியிருந்ததைத் தன் மச்சானுக்கே பத்து ரூபாய் சேர்த்து அறுபது ரூபாய்க்கு விற்று விட்டான். அந்தக் காலத்தில் அவ்வளவுதான் விலை. இந்தக் காலத்தைப் போலல்ல.

ரூபாயைப் பையில் போட்டு மடியில் செருகிக்கொண்டு ராமன் திருப்பதிக்குக் கால் நடையாகச் சென்றான்.

''வழியில் ஜாக்கிரதை! கெட்ட பாதை'' என்று எச்சரித்துச் சாம்பசிவய்யர் ராமனை ஆசீர்வதித்து அனுப்பிக் கொடுத்தார்.

* * *

காட்டு வழி. மேடு ஏறி மூலை திரும்பி இறங்கும் இடம். திமர் என்று புதரிலிருந்து பாய்ந்துவந்த இருவர் ''நில்!'' என்றார்கள். ஒருவனுக்குப் பயங்கரமான மீசை இருவரும் முகம் முழுவதும் கரி பூசியிருந்தார்கள் கண்கள் சுற்றிக் காவி வண்ணம் தீட்டியிருந்தார்கள்.

ஐயா சொன்னது நிச்சயமாகி விட்டது. உயிருக்கே ஆபத்து என்று பயந்தான் ராமன்.

''நான் ஏழை. என்னிடம் ஒன்றும் இல்லை'' என்றான்.

''அப்படியா? பொய் சொல்லாதே, பயலே'' என்று ஒரு அறை அறைந்தான் மீசைத் திருடன்.



''ஐயோ செத்தேன்'' என்று கதறினான் ராமன்.

திருடன் காலில் விழுந்து விம்மி விம்மி அழுதான்.

''மாட்டை விற்று அறுபது ரூபாய் திருப்பதி சாமி உண்டிகைப் பையில் போட எடுத்துக்கொண்டு போகிறேன். என் பணம் அல்ல. நான் என்ன செய்வேன்!'' என்று அழுதான்.

''அயோக்கியப் பயலே! பொய் பேசலாகாது'' என்று இரண்டாவது திருடன் கையில் தடியோடு கிட்ட வந்தான்.

''அடிக்காதேங்கோ! பொய் இல்லை. சத்தியம்'' என்றான் ராமன்.

மடியில் செருகியிருந்த பையை எடுத்துக் காண்பித்தான்.

''மாட்டை விற்று சாமிக்குக்கொடுக்க எடுத்துக் கொண்டு போகிறான்; இந்த ரூபாய் நமக்கு ஆகாது அண்ணா!'' என்றான் மெதுவாக மீசைக்காரத் திருடன் தன் சகாவிடம்.

''அப்படியானால் சும்மா விட்டு விடுவதா?'' என்றான் அவன்.

''நீ என்ன சொல்லுகிறாய்?''

''பகுதி எடுத்துக் கொள்வோம். மற்றப்பகுதியை இவன் கொண்டுபோய் சாமிக்குப் போடட்டும்'' என்றான் மீசைக்காரன்.

''சரி,அப்படியே'' என்றான்மற்றவன்.

''சாமி இட்டவழி. அப்படியே செய்யுங்கள்'' என்றான் ராமன்.

* * *

கோயிலில் உண்டிப்பையில் முப்பது ரூபாயையும் போட்டான் ராமன்.

''அடே நீ யோக்கியன், பொய்யனல்ல'' என்றான் பக்கத்தில் நின்ற ஒருவன்.

''இந்தா! இதையும் உண்டியில் போட்டுவிடு'' என்று சொல்லி அவன் முப்பது வெள்ளி ரூபாய்கள் தந்தான்.

ராமன் கண்ணை விரித்துப் பார்த்து. ''நீயா வழிமறித்துத் திருடியவன்?'' என்று கேட்டான்.

''பேசாதே!'' என்று அவன் சொல்லி விட்டுக் கூட்டத்தில் மறைந்துபோனான்.

* * *

''உன்னை வழி மறித்தது வெங்கடரமணசாமியே'' என்றாள் ராமன் மனைவி. தொடர்ந்து,''உன்னைப் பரீட்சை செய்யவே இப்படிச் செய்தார்'' என்றாள்.

''எல்லோருமே வெங்கடரமண சாமிதான்: திருடனும் சாமிதான்: சாமியும் திருடன் தான்'' என்றான் ராமன்.

அடுத்த மாதம் ராமன் மனைவிக்கு சுகப் பிரசவம் ஆகி, ஒரு ஆண் மகனைப் பெற்றாள். வெங்கடராமன் என்று குழந்தைக்குப் பெயர் வைத்தார்கள்.

* * *

வண்டிக்கார ராமன் மகன் வெங்கடராம வர்மா இப்போது ராசிபுரம் தாசில்தார்.

சாம்பசிவய்யர் இறந்து விட்டார். அவர் மூன்றாவது மகன் கிருஷ்ணய்யன் ராசிபுரம் தாலூகா ஆபீசில் குமாஸ்தா. இரண்டு அண்ணன்மார்கள் தகப்பனார் விட்டுப்போன சொத்தை யெல்லாம் குடியிலும் வேறுவிதத்திலும் பாழ் செய்து விட்டார்கள்.

மூன்றாவது மகன் தாசில்தார் வெங்கடராம வர்மாவின் தயவால் ஒரு குமாஸ்தா வேலை சம்பாதித்தான். அடக்கத்துடன் வேலைசெய்து வருகிறான்.

காலசக்கரம் இப்படிச் சுழல்கிறது.

வெங்கடராம வர்மாவுக்குப் புது வருஷத்தில் டிபுடி கலெக்டர் வேலையும் ஆகும் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

** ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் பீடாரோஹண ஐம்பதாவது வருஷ பூர்த்தி சமயத்தில் கலவையில் கூடியிருந்த திருப்பாவை—திருவெம்பாவைக் குழுவினருக்கும் மற்றெல்லா அடியார்களுக்கும் ஸ்ரீ சுவாமிகள் செய்த உபதேசத்தின் சுருக்கத்தைத் தமிழ்ப் புத்தாண்டுத் திருநாளில் நமது நேயர்களும் படித்துப் பயன்பெற வேண்டும் என்று வெளியிடுகிறோம். —ஆசிரியர்

# வார வழிபாட்டுத் தொண்டு

## ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள்

நம் நாட்டில் கோவில்களைக் கேந்திர ஸ்தானங்களாகக் கொண்டே ஒவ்வொரு ஊரும் நகரமும் எல்லாத் துறைகளிலும் முன்னேறியிருக்கின்றன. நம் நாட்டு மக்கள் பல்வேறு கலைகளையும் ஈசனுக்கு அர்ப்பணம் செய்யும் வகையில் வளர்த்துக் கொண்டும், நாட்டில் பொது நலனுக்கும் பண்பாட்டுக்கும் தொண்டாற்றியும் வந்திருக்கின்றனர். பண்டைய காலத்து எல்லாப் பண்பாடுகளையும்விட நமது பாரதப் பண்பாடு நீடூழிகாலம் நிலை பெற்றிருப்பதின் ரகசியம் இதுவே. இப்பொழுது நம் தென்னாட்டில் ஒவ்வொரு சிற்றூரிலும், அநேக கோயில்கள், தற்காலத்தில் அமைக்க முடியாத சிற்பக் கலைச் சிறப்புகளுடன் காணப்படுகின்றன. அநேக ஊர்களில் கோயில்கள் சிதைந்தும், இருக்குமிடம் தெரியாமலும் போய், மரத் தடிகளிலும் களத்து மேடுகளிலும் எண்ணிறந்த சிவலிங்கங்களும், பெருமாள் விக்கிரகங்களும், முருகன் விக்கிரகங்களும் பூஜையின்றி விளக்கின்றிக் காணக் கிடக்கின்றன. திருநீறும், திருமண் காப்பும் தரித்து பஞ்சாக்ஷரமும், அஷ்டாக்ஷரமும் ஜபித்துவரும் வம்சத்தில் பிறந்த நாம் எவ்வளவு எளியவர்களாயிருந்தாலும், நமது வழிபாட்டு மூர்த்திகளை இப்படிக் கேட்பாரின்றி விட்டு வைத்திருப்பதே நமக்கு நலக் குறைவு. அதுவே நமக்கு தூர்பலம். பண்டைய காலத்தில் ஏன் இவ்வளவு அதிகமான கோவில்களைக் கட்டுவித்தார்கள் என்று சந்தேகம் நமக்குச் சில சமயங்களில் தோன்றுகிறது. இப்பொழுதும் ஊரிலுள்ள எல்லா மக்களுடைய எல்லாப் பொது நலன்களும் தெய்விகமான கோவில்களை ஒட்டியே நிகழ்வதாயிருந்தால் இவ்வளவு கோயில்களும் போதா.

இன்னும் எவ்வளவு கோயில்கள்கட்டினாலும் போதாமலேயிருக்கும். சுமார் ஐம்பது வருஷங்களாக, அதாவது கோயிலை நடுநிலையாகக் கொண்டே எல்லாத் தொழிற் பணிகளையும் கலைப் பணிகளையும் ஆற்றும் மரபு குலைந்து போனதிலிருந்து, குளங்கள் தூர்ந்து போயின. நன்றாக இருக்கும் குளங்களிலும் நல்ல தண்ணீர் கிடைப்பது அரிதாகி விட்டது. பசுக்களுக்கு மேய்ச்சல் புல் தரைகள் கிடையாது. நந்தவனங்கள் பாழாய்ப் போயின. நமது சமயத்தில் பிறந்த குழந்தைகளுக்குச் சமயக் கல்வியே அற்றுப் போய் விட்டது. இது போன்ற பல துறைகளிலும் நலம் பயக்கும் முறைகள் சிதிலமடைந்து நமது பண்பாடே தளர்ச்சியடைந்திருக்கிறது.

இதர சமயத்தினர்கள் அவரவர்க்குரிய காலங்களில் அதிலும் விசேஷமாக அந்திப் பொழுதில், கட்டுப்பாடாக ஆண்டவனைத் தொழுவதைக் காண்கிறோம். நாமோ அதே அந்திப் பொழுதில் ஈசனுடைய நினைவேயின்றிச் சீட்டாடுவது, பந்தாடுவது, கண்ட பானங்களை யருந்துவது, சினிமா பார்ப்பது, முதலிய வீண் செயல்களிலும் பாபச் செயல்களிலும் கழிக்க முனைந்து விட்டோம். நம்மைப் படைத்த ஈசனுடைய அருளைப் பெற வேண்டிய அந்திப் பொழுதில் அபசாரங்களைச் செய்து வருகிறோம். இதன் பயனையும் நேர்முகமாய்க் காண்கிறோம். நமது ஒற்றுமையும் வலிமையும் குறைந்ததற்கு உதாரணமாக நம் பாரத நாட்டிலேயே வட மேற்கு மூலையிலும் வட கிழக்கு மூலையிலும் உள்ள நான்கைந்து மாகாணங்களில் நமது சமயத்தினர் அடியெடுத்து வைக்கக் கூட முடியாத நிலைமையை அடைந்து விட்டோம். அந்திப் பொழுதில் ஆண்டவனைத் தொழும் இதர சமயத்தினர்கள் கனவிலும் கிடைத்தற்கரிய ஒரு தனி ராஜ்யத்தை அடைந்தனர்.

ஈசனுடைய அருளைப் பெறாவிடினும் அவருக்குரிய காலத்தில் அபசாரத்தையேனும் செய்யாமலிருந்தால் நமக்கு இவ்விழி நிலை ஏற்பட்டிராது. காந்திஜி வாழ்ந்திருக்கும் காலம் வரையில் ராம நாமம் ஒன்றையாவது சொல்லிக் கொண்டு அரசியல் பணியாற்றி நாட்டுக்குச் சுதந்திரத்தைச் சம்பாதித்தார். தற்கால அரசியல் பிரமுகர்கள் பகவானுடைய நாமத்தை உச்சரிப்பதில்லை. இதர சமயக் குழந்தைகளுக்குச் சமயக் கல்விக்கு நிச்சயமான ஏற்பாடுகள் இருக்க நமது சமயத்தில் பிறந்த குழந்தைகளுக்கு மாத்திரம் கடவுளின் நினைவே வருவதற்கு இடமில்லாத சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. இதர சமயங்களின் வளர்ச்சிக்கோ வெளி ராஜ்யங்களிலிருந்து ஏராளமான பண உதவி கிடைத்து, கட்டுப்பாடான முறையில் விநியோகிக்கப்பட்டு வருகிறது. ஏற்கனவே ஆண்டவன் வழிபாட்டை மறந்து நிற்கும் நம் சமயங்களை மட்டும் சீர்குலைக்க வழிகோலப்படுகிறது.

இந்த நிலையில் எவ்வித அரசாங்க ஆதரவுமில்லாத நமக்கு இந் நோய்களையெல்லாம் அகற்ற ஒரே ஒரு மருந்துதான் உளது. அம் மருந்தே குறையாத ஒற்றுமையைத் தரும்; குன்றாத வலிமையையும் கொடுக்கும். வரும் இடுக்கண்களையெல்லாம் தகர்க்கும். அம் மருந்து அவனருளே. 'அவனருளாம், அவ்வமுதமாம் மருந்தை நாம் அருந்த, சேர்ந்துண்ண வாரும் ஜகத்தீரே!' என்று எல்லா மாந்தர்களையும் அன்புடன் அழைக்க வேண்டும். நாம் வசிக்கும் ஊரிலோ தெருவிலோ ஒரு வார வழிபாட்டுச் சங்கம் அமைத்துக் கொண்டு ஏதேனும் ஒரு கிழமையில் அங்கத்தினர்கள் எல்லோரும் கூடி பகவானின் புகழைப் பாடிக் கொண்டு, ஏதேனும் ஒரு திருக்கோயிலை வலம் வந்து கோபுர சன்னிதானத்தில் நமஸ்கரித்துச் சிறிது மௌனம், தியானம், நாமஜபம், கூட்டுப் பஜனை, அடியார்களின் சரித்திரப் பிரசங்கம் முதலிய பக்தி மார்க்க முறைகளில் ஈடுபட வேண்டும்.

# ஈழ நாட்டுப் பிரயாணம் (14)

இலங்கைத் தீவிலே இப்பொழுது தமிழ் மக்களை இருக்க முடியாமல் செய்து வருகிறார்கள். அவர்கள் வோட்டு உரிமையைப் பிடுங்கிக் கொண்டு அவர்களை அரசியல் அநாதைகளாக்கி நாடற்றவர்களாகச் செய்து இலங்கையை விட்டே அனுப்பி விடுவதற்கான வழிகளில் இலங்கை சர்க்கார் தீவிரமாக ஈடுபட்டிருப்பது உலகறிந்த விஷயம். ஆனால் இதே இலங்கையில் உலகிலிருந்து வருபவர்களையெல்லாம் "வா! வா!" என்று வரவேற்று இருக்க இடம் அளித்து உண்ண உணவளித்து உபசரிக்கும் இடம் ஒன்று இருக்கிறது என்றால் ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா? உண்மையிலேயே அப்படி ஒரு இடம் இருக்கிறது. அப்படிப்பட்ட அதிசயமான இடத்துக்குத்தான் இப்பொழுது போகப் போகிறோம்.

திசைமாறுமை என்னும் ஊரிலிருந்து நுவரேலியாவுக்குச் செல்லும் பாதையில் கொஞ்ச தூரம் சென்றவுடன் சாலையின் இருபுறமும் தண்ணீர் தேங்கி நிற்கிறது. கண்ணுக்கு எட்டிய தூரம் ஒரே தண்ணீர் மயம்தான்! இந்தத் தண்ணீருக்கு மத்தியில் ஒரு சிறு தீவு இருக்கிறது. இந்தத் தீவைச் சுட்டிக் காட்டி, 'இந்தச் சின்னஞ்சிறு தீவில்தான் உலகத்தின் பல பாகத்திலுள்ள பல இனத்தவர்கள் ஒன்றாகச் சேர்ந்து வாழ்ந்து வருகிறார்கள்' என்றார் உடன் வந்த ஆராய்ச்சி நிபுணர்.

அந்தத் தீவுக்குச் செல்லச் சாலை வசதி இல்லை. தண்ணீரில் நீந்தியோ, படகு மூலமாகவோதான் செல்ல வேண்டும். அப்படிச் சென்றால் அந்தத் தீவில் பார்ப்பதற்கென்று விசேஷமாக ஒன்றுமில்லை. கேவலம், ஒரு கட்டடம் கூட இல்லை. வெறும் காடு மண்டிக் கிடக்கும் கோலத்தைத்தான் பார்க்க முடிகிறது.

"இதிலேயா உலகின் பல பாகத்திலுள்ள பல இனத்தவர்களும் குடியேறி ஒற்றுமையாக இருக்கிறார்கள்?" என்றேன்.

அவர் ஒருகணம் காட்டைப் பார்த்துவிட்டுக் 'களுக்'கென்று சிரித்தார். "இன்னும் புரியவில்லையா உங்களுக்கு? தயவு செய்து நன்றாய்ப் பாருங்கள் தெரியும்!" என்று பதில் சொன்னார்.

காட்டுக்குள் ஒரு முறை கூர்ந்து பார்த்தேன். காடாக இருந்தாலும் இடத்துக்கு இடம் எவ்வளவோ வித்தியாசமாக இருந்தது. அதைக் கூர்ந்து பார்க்கப் பார்க்க அதன் சிறப்புக்கள் தெரிய வந்தன. அதோடு வேதாந்தக் கருத்துக்கள் கூடத் தோன்ற ஆரம்பித்தன. காடு ஒவ்வொரு இடத்திலும் மாறுபட்டுத் தோன்றியது. ஒரு இடத்தில் முட்கள் அடர்ந்து காடும் முரடுமாக இருந்தது. வேறொரு இடத்தில் சுகமான சூழ்நிலையுடன் கூடிய மரக் கூட்டங்களுடன் விளங்கியது. இவ்வாறு மனத்தினால் கற்பனை செய்து பார்க்க முடியாத பலவிதத் தோற்றங்களிலும் சூழ்நிலைகளிலும் காடு விசித்திரமாகக் காட்சி அளித்தது. 'இந்தப் பரந்த உலகத்தின் இயல்பை மனித சஞ்சாரமற்ற காட்டிலே கூட அல்லவா காண முடிகிறது' என்று எண்ணி வியந்து போனேன்.

"என்ன, புரிந்து கொண்டீர்களா?" என்றார் உடன் வந்த ஆராய்ச்சி நிபுணர்.

"உலகத்தின் இயல்பை இக் காட்டுக்குள் வந்து உணர்ந்து கொண்டேன்" என்றேன்.

"என்ன வேதாந்தம் பேசுகிறீர்களே! இந்தப் பறவைக் கூட்டத்தைப் பார்க்கவில்லையா?" என்று கேட்டார்.

"பறவைகளையா! இதைத்தான் பார்த்துக் கொண்டே இருக்கிறேனே!" என்றேன்.

"இங்கு உலகில் உள்ள எல்லாவிதமான பறவை இனங்களும் இருக்கின்றன. இத்தீவுக்கே 'பறவைத் தீவு' என்றுதான் பெயர். 'பாஸ்போர்ட்' 'விஸா' அம்மை, காலரா, பிளேக் ஊசி முதலிய தொந்தரவுகள் ஒன்றுமில்லாமல் இந்தத் தீவுக்கு உலகின் பல பாகங்களில் இருந்தும் பறவைகள் வந்து கொண்டும் போய்க்கொண்டும் இருப்பதுடன் நிம்மதியாக வாழ்ந்தும் வருகின்றன" என்றார் ஆராய்ச்சியாளர்.

# பறவைத் தீவு



இந்த விசித்திரக் கதையைக் கூறுகின்ற நண்பரை நேயர்களுக்கு அறிமுகப்படுத்த வில்லையே! இவர் ஒரு ஐரோப்பிய இளைஞர். தம் இளம் மனைவியுடன் உலகின் பல்வேறு காட்டுப் பகுதிகளையும் சுற்றிப் பார்த்து வருகிறார். ஈழ நாட்டின் காட்டுப் பகுதிகளைச் 'சுற்றிப் பார்த்து அங்கு வாழும் பறவைகளின் வாழ்க்கை முறைகளை ஆராய்ந்து வருவதாகச் சொன்னார். ''மனிதன் உலகத்தில் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன. பறவைகளைத் தினம் தினம் பார்க்கிறோம். அவைகளைப் பற்றிய சிந்தனை நமக்குத் தோன்றுவதில்லை. அப்படித் தோன்றினாலும் 'பறவைகள் ஏதோ கூடு கட்டுகிறது. சாப்பிடுகிறது. முட்டையிடுகிறது. குஞ்சு பொரிக்கிறது. கடைசியில் செத்துப் போகிறது!' என்று தான் தோன்றியிருக்கும். ஆனால் பறவைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன'' என்று சொல்லி என்னைப் பறவைத் தீவுக்குள் அழைத்துச் சென்றார் அந்தப் பறவை ஆராய்ச்சி நிபுணர். அப்படிச் செல்லும் போதே பறவைகளின் அதிசய வாழ்க்கை முறைகளைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்.

***   ***   ***

மனிதர்களைப் போலவே உலகம் முழுதும் பறவைகள் வாழ்கின்றன. பனி மூடிய வட துருவங்களிலும் தென் துருவங்களிலும் கூட வசிக்கின்றன. அடர்த்தியான காடுகளிலும், விரிந்து பரந்து கிடக்கும் சம வெளிகளிலும் இருக்கின்றன. சின்னஞ் சிறு தேனீ அளவு உள்ள மிகச் சிறிய பறவையிலிருந்து ஆறடி உயரம் உள்ள மிகப் பெரிய பறவைகள் வரை இருக்கின்றன். ஆறடி உயரமுள்ள பறவைதான் நெருப்புக்கோழி. இதற்கு இறகு உண்டு. ஆனால் பறக்க முடியாது.

பறவைகளிலேதான் எத்தனை நிறங்கள்! பச்சைக்கிளி, பஞ்சவர்ணக் கிளி, சாம்பல் வர்ணக் கிளி, மஞ்சள்வர்ணக் கிளி, நீலக் கிளி, ஊதாக் கிளி என்று ஆயிரக்கணக்கான நிறங்களை உடைய பட்சி ஜாலங்கள் இருக்கின்றன. அதன் இறகுகளில்தான் எத்தனை விதங்கள்! மயில் தோகையைப் பார்த்திருக்கிறோம். இது போல விதம் விதமான தோகைகளும் வர்ண ஜால விந்தைகளை உடைய இறகுகளும் கொண்ட எண்ணற்ற பட்சி ஜாலங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பறவையும் ஒரு விதமான வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டிருக்கிறது. கடலில் நீந்தியும், கடல் நீரில் மூழ்கியும் வாழ்ந்து வரும் விசித்திரமான பறவைகளும் இருக்கின்றன. பல நாட்கள் எங்குமே தங்காமல் ஆகாயத்திலேயே பறக்கும் பறவைகளும் இருக்கின்றன.

காடுகளில் வாசம் செய்யும் பறவைகளும், வயல் வெளியில் வசிக்கும் பறவைகளும், நகர்ப் புறத்தில் வாழும் பறவைகளும், கிராமத்தில் உலவும் பறவைகளும் என்று தனித்தனியே சில பறவை இனங்கள் இருக்கின்றன.

மனிதர்கள் பல நூறு ஆண்டுகளாகப் பறவைகளைப் பார்த்துப் பார்த்துப் பரமானந்தம் அடைந்து வந்திருக்கின்றனர். அவற்றின் நிறமும், அழகும், அவற்றின் இறகுகளின் அமைப்பும் மனிதனின் மனத்தைக் கவர்ந்து அவனுக்கு உற்சாகத்தை ஊட்டி வந்திருக்கின்றன. சித்திரக்காரர்கள் பறவைகளைச் சித்திரத்தில் தீட்டி மகிழ்ந்திருக்கிறார்கள்; சிற்பிகள் கல்லிலே செதுக்கிக் களிப்படைந்திருக்கிறார்கள், கவிகள் பறவைகளை வாழ்த்திப் பாடிப் பாடி ஆனந்தித்திருக்கிறார்கள். இதோ நமது கவிமணி அவர்கள் பச்சைக் கிளியைப் பார்த்துப்பரவசப்பட்டிருப்பதைப்பாருங்கள்.

**'' மாணிக்கச் செப்பினிலே—அமுதை**
**வடித்துச் சுவைபெருக்கி**
**பேணி யுனக்களித்த—பிரமன்**
**பெரியன் பெரியனம்மா!''**

என்று பாடிக் களித்திருக்கிறார். இன்னும் காதலர்கள் பறவைகளைத் தங்கள் காதல் தூதுவ



ளுக்கிக் களித்திருக்கிறார்கள். வெறி பிடித்த மனிதர்கள் வேட்டையாடி மகிழ்வதற்கு என்றே சில பறவை இனங்களும் இருக்கின்றன. அவை மனிதனின் வேட்டை வெறியைத் தணிப்பதுடன் அவர்களுக்கு நல்ல உணவாகவும் இருக்கின்றன.

பறவைகள் மனித இனத்துக்குப் பல வழிகளில் உதவி செய்து வருகின்றன. உணவுத் தானியப் பயிர்களுக்கு இடையில் முளைத்து, அதை வளர விடாமல் தடை செய்யும் புல் பூண்டுகளை மட்டும் தின்று ஜீவிக்கும் பறவைகள் இருக்கின்றன. உணவுப் பயிரை அழிக்கும் பூச்சி புழுக்களை மட்டும் கொத்தித் தின்று வாழும் குருவிக் கூட்டங்களும் இருக்கின்றன. இதனால் மனித இனம் அடையும் பயன் கொஞ்ச நஞ்சமல்ல. பயிர்களுக்குக் களையெடுத்து அதை அழிக்கும் புழுக்களைத் தின்று பயிர்களைக் காப்பாற்றி மனித இனத்துக்குத் தொண்டாற்றும் இந்தப் பறவைகளின் ஒப்பற்ற தொண்டை மனிதர்கள் தெரிந்து அதற்கு நன்றி செலுத்த வேண்டாமா? சில பறவைகள் பழங்களையும் தானியங்களையும் தின்றாலும் அவைகள் மனித இனத்துக்கு வேறு வகையில் அளிக்கும் உதவியுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அதை ஒரு கெடுதலாகவே எண்ண முடியாது.

பல நூறு வகைப் பறவை இனங்கள் இருந்தாலும், உருவத்திலும் நிறத்திலும் பேதப்பட்டிருந்தாலும் அவற்றின் உடல் அமைப்பு என்னவோ ஒன்றுதான். எல்லாப் பறவைகளுக்கும் இறக்கைகள் உண்டு; இரண்டு கால்கள் உண்டு; இறகுகள் உண்டு; அலகும் உண்டு. எல்லாப் பறவைகளும் முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பவைதான்.

இந்த விவரங்களைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அங்கு வந்த பறவையைக் காண்பித்து, "இதைப் பார்த்தீர்களா?" என்று கேட்டார் பறவை ஆராய்ச்சி நிபுணர்.

"பார்த்தேன்" என்றேன்.

"இந்த சாதிப் பறவை அடிக்கடி இடத்தை மாற்றிக் கொண்டே இருக்கும். தான் வசிக்கும் இடத்துக்கும் சீதோஷ்ண நிலைமைக்கும் ஏற்றவாறு தன்னைச் சீர்படுத்திக் கொண்டு வசிக்கும் திறமை உடையது" என்றார்.

"ஏன் இவ்வாறு தான் வசிக்கும் இடத்தை அடிக்கடி மாற்றிக் கொள்கின்றது?"

"பறவைகள் ஏன் ஒரு இடத்தை விட்டு மற்றொரு இடத்துக்குச் செல்கின்றன என்பதற்குச் சரியான காரணம் கூற முடியவில்லை. ஆனாலும் சீதோஷ்ண மாற்றத்தினாலோ ஆகாரங்களின் வசதிக் குறைவினாலோ அடிக்கடி இடத்தை மாற்றிக் கொள்கின்றன. பறக்கும் வசதி அதற்கு இருப்பதால் இஷ்டம் போல் இடத்தை மாற்றிக் கொள்ள முடிகிறது. இதோ பாருங்கள். இந்தக் காட்டிலே உலகத்தில் உள்ள பல்வேறு சாதிப் பறவைகளும் இருக்கின்றன. ரஷ்யா, ஆஸ்திரேலியா, சீனா, ஜப்பான் முதலிய தேசத்துப் பறவைகள்கூட இங்கு வந்து வசிக்கின்றன. குளிர்காலத்தில் சற்று உஷ்ணமான இடத்துக்கும், அதிக உஷ்ணமான காலத்தில் சற்றுக் குளிர்ச்சியான இடத்துக்குமாகத் தங்கள் இடத்தை வெகு சுலபமாக மாற்றிக் கொண்டு விடுகின்றன."

"என்ன ஆச்சரியம்! பெரிய மனிதர்கள் கோடை காலத்தில் மலைப் பிரதேசங்களுக்குச் செல்வதுபோல் அல்லவா இருக்கிறது!"

"மனிதர்களில் வசதி உள்ளவர்கள்தானே செல்கிறார்கள்? பறவைகள் அப்படி இல்லையே! எல்லாமே அல்லவா கிளம்பி விடுகின்றன."

"பறவைகள் தாங்கள் எங்கு போகிறோம் என்பதை நிச்சயித்துக் கொள்ளுமோ?"

"ஆமாம். நிச்சயித்துக் கொள்கின்றன. ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குக் குறிப்பிட்ட நேரத்தில்தான் செல்கின்றன. ஏதோ மனம் போனபடியெல்லாம் அவைகள் செல்வதில்லை. தாம் போக வேண்டிய இடத்துக்குச் சென்று ஒழுங்காகத் திரும்பி, வர வேண்டிய இடத்துக்கு வந்து விடுகின்றன."

"இந்த விவரங்கள் எல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தன?"

"எனக்கு இந்தப் பறவைகளின் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நீண்ட நாட்களாகவே ஆசை. அதனால் பறவைகளின் வாழ்க்கை முறைகளைப் பற்றிப் பல ஆண்டுகள் ஆராய்ச்சி செய்து சில உண்மைகளைத் தெரிந்து கொண்டேன். எனக்கு முன் பறவைகளின் வாழ்க்கையை ஆராய்ச்சி செய்த நிபுணர்களின் நூல்களைப் படித்தும் பயன் பெற்றேன். 'பனிக் காலத்தில் பறவைகள் பூமிக்குள் தவளை, தேரை முதலிய பிராணிகளைப் போல் வசிக்கும். பிறகு வெய்யில் காலத்தில் வெளியில் வரும்' என்றுதான் கொஞ்ச காலத்துக்குமுன் வரையில் கூட மனிதர்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். அது பொய், பறவைகள் பல ஆயிரக்கணக்கான மைல்கள் தங்கள் சீதோஷ்ணத்துக்கு ஏற்ற வண்ணம் இடத்தை மாற்றிக் கொள்வதற்காக எல்லையற்ற வான வீதியில் பறந்து செல்கின்றன என்ற உண்மையை இப்பொழுது கண்டு பிடித்திருக்கிறார்கள்."

"பறவைகள் பல ஆயிரம்மைல்பறக்குமா?"

"ஆமாம். 'தங்கக் குஞ்சம்' என்று ஒரு வகைப் பறவை இருக்கிறது. இது பார்ப்பதற்குத் தங்கத்தால் செய்த குஞ்சம் போலவே தோற்றமளிப்பதால் இதற்குத் தங்கக் குஞ்சம் என்றே பெயர். இது குளிர்ப் பிரதேசங்களில் பனிக்கட்டிப் பகுதிகளில்தான் வசிக்கும். பனி உருகிவிட்டால் பனிப் பிரதேசத்தைத் தேடிப் போகும். அப்படிப் போகும் போது சில சமயம் சமுத்திரத்தின் மேலே வந்து விடும். இந்தக் குருவியால் தண்ணீரில் உட்கார முடியாது. அதனால் சமுத்திரத்தில் பல ஆயிரம் மைல் எங்குமே தங்காமல் பறந்து செல்லும்."

"நீங்கள் கூறுவது ஏதோ கற்பனைக் கதையைப் போலல்லவா இருக்கிறது."

"இதைக்கேட்டே இப்படி வியந்து போகிறீர்களே! 'துருவப் பறவை' என்று ஒரு பறவை இருக்கிறது. சாதாரண சிட்டுக் குருவியை விடச் சற்றுப் பெரிதாக இருக்கும். சாம்பல் கலந்த வெள்ளை நிறம் கொண்டது. செக்கச் செவேல் என்ற சிறிய அலகுடையது. வட துருவத்திலும் தென் துருவத்திலும் வசிப்பதால் இதற்குத் துருவப் பறவை என்று பெயர். இதற்கு இருட்டே பிடிக்காது. இருபத்தி நாலு மணி நேரமும் சூரிய வெளிச்சம் உள்ள பிரதேசத்தில்தான் வாழும். ஆண்டுக்கு ஒரு முறை சூரியன் திசை மாறும்போது நடு இர



# காலம் ஒருவருக்கும் காத்திராது

இந்த வார்த்தைகளை படிக்கும் பொழுதே வினாடிகள் பறந்து கொண்டிருக்கின்றன. "வருங்காலத்திற்குப் போதிய பாதுகாப்பு நான் வகுத்துள்ளேனா?" என்ற கேள்வியை உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள்.

இந்த கேள்விக்கு "ஆமாம்" என்று உண்மையில் விடையளிக்க முடியாவிட்டால், இனி சற்றேனும் தாமதியாதீர்கள். இப்பொழுதே ஒரு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி எடுத்து, உங்களுக்கும் உங்கள் குடும்பத்தினருக்கும், நிர்ணயிக்க முடியாத வருங்காலத்திற்கு பாதுகாப்புத் தேடிக் கொள்ளுங்கள்.

ஒவ்வொரு நாள் தாமதமும் உங்களுக்கு பாதகமாக முடியலாம். தேக அசௌகரியம் உங்களை இன்ஷ்யூரன்ஸ் செய்துகொள்ள தகுதியில்லாமல் செய்யலாம். வயது அதிகரிக்க, ப்ரீமியமும் அதிகரிக்கிறது. தாமதம் செய்யச் செய்ய ஆபத்து உங்களை நெருங்கிக் கொண்டே இருக்கிறது. இந்த நிலைக்கு ஏன் ஆளாகவேண்டும்?

இன்றே ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் செய்து கொண்டு எல்லா கவலைகளையும் போக்குங்கள்.

லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

சென்ட்ரல் ஆபீஸ்: ஓரியண்டல் பில்டிங்ஸ், போர்ட், பம்பாய் 1.



**Life Insurance Corporation of India**

ஜோனல் ஆபீசுகள்: பம்பாய் · புதுடில்லி · கல்கத்தா · மதராஸ் · கான்பூர்.

டிவிஷனல் மற்றும் பிராஞ்ச் ஆபீசுகள் இந்தியாவில் எல்லா இடங்களிலும் இருக்கின்றன.

ASP/LIC-31

வில் துருவப் பிரதேசங்களில் சூரிய அஸ்தமனம் தெரியும். இந்தக் காலங்களில் துருவப் பறவை தன் பிரயாணத்தைத் தொடங்கி விடும். ஒரு துருவத்தில் இருந்து இன்னொரு துருவத்துக்கே சென்று விடும். அதாவது உலகின் பாதி தூரத்தை ஒரு சில மாதங்களில் கடந்து விடும். மைல் கணக்கில் சொன்னால் இருபத்திரண்டாயிரம் மைல்கள் பறந்து விடும். இவ்வளவு நீண்ட நெடுந் தூரம் பறந்து பிரயாணம் செய்து இன்னொரு துருவத்தை அடைந்து அங்கு இருபத்து நாலு மணி நேரமும் சூரிய ஒளியைப் பார்த்துக் கொண்டே ஆனந்தமாகத் தன்னுடைய வாழ்க்கையை நடத்தும்.''

''இந்தப் பறவைகள் எப்படி வானவெளியில் வழி வகுத்துக் கொள்கின்றனவோ ?''

''விஞ்ஞானிகள் எல்லாம் பறவைகளுக்கு ஆறாவது அறிவு கிடையாது என்கிறார்கள். ஆனால் எல்லையற்ற கடல் நீர்மீதும், வான வெளியிலும் எப்படியோ வழியைத் தெரிந்து கொண்டுதான் இந்தப் பறவைகள் போகின்றன. சுமார் இரண்டாயிரம் அடி உயரத்தில் பறவைகள் பறக்கின்றன. அங்கிருந்து பார்த்தால் அறுபத்தைந்து மைல் சுற்றளவு நிலப் பரப்போ நீர்ப் பரப்போ தெரியும். மலையின் சிகரங்களாக இருந்தால் இன்னும் கொஞ்சம் அதிக மைல்களுக்கு அப்பால் உள்ளவைகள் கூடத் தெரியும். ஆனால் பூமியின் வட்ட வடிவமான அமைப்பில் மலைச் சிகரம் தெரிந்தாலும் அதன் அடிப்பாகம் நிலப் பரப்பா நீர்ப்பரப்பா என்பதை எப்படி அறிந்து கொள்ள முடியும்? ஆனாலும் பறவைகளுக்கு இருக்கும் உணர்ச்சி அதிசயமானது. மழை காலம், கோடை காலம், புழுக்கம் உள்ள காலம், இப்படிப் பல்வேறு சீதோஷ்ணங்களை எப்படியோ தெரிந்துகொள்கின்றன. வெகு வேகமாகப் பறந்தாலும் மிக ஜாக்கிரதையாகவே பறக்கின்றன. இதனையெல்லாம் தன்னுடைய பாதையைத் தெரிந்து கொள்கின்றனவோ என்னவோ! இருந்தாலும் இதைப் பற்றி இன்னும் பல நிபுணர்கள் ஆராய்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள். இவ்வாறு பறவைகள்வாழ்க்கையை ஆராய்ச்சி செய்பவர்களுக்கு இத் தீவு ஒரு சொர்க்கம் என்றே சொல்லலாம்'' என்று சொன்னார்.

இந்தப் பறவைத் தீவில் சற்று நேரம் உல்லாசமாகச் சுற்றிப் பார்த்தோம். எத்தனை எத்தனையோ விதம் விதமான பறவைகள் இங்கு இருக்கின்றன. பவழம் போன்ற மூக்கும், குண்டுமணி போன்ற கண்களும், சின்னத் தலையும், சிறு சிறு இறக்கைகளும், துளித் துளி கால்களும் கொண்ட பலப் பல பறவைகளைப் பார்க்கும்போது மனத்தில் ஏதோ இனந்தெரியாத ஒரு இன்ப உணர்ச்சி ஏற்படத்தான் செய்கிறது.

பறவைகளிலும் ஆண்,பெண் இருக்கின்றன. கூடு கட்டிக் கொள்ளுகின்றன. கொஞ்சிக் குலாவுகின்றன. குலம் தழைக்கக் குஞ்சு பொரிக்கின்றன. அவைகள் உல்லாசமாகப் பறந்து செல்வதைப் பார்க்கும்போது நமக்கும் இறக்கை முளைத்து இப்படிப் பறக்க மாட்டோமா என்றே எண்ணத் தோன்றுகிறது. அந்தப்பறவைகளின் கண்களில் காணும் தெளி

வும், அதன் முகத்தில் தோன்றும் குதூகலமும் நம்மை எங்கோ கொண்டு செல்கின்றன.

இதைப் பார்த்தபோது எனக்குப் பாரதியார் சிட்டுக் குருவியைப் பார்த்துச் சொன்ன வாசகம் நினைவுக்கு வந்தது. அடாடா! அவர் அல்லவா கவிஞர்! இந்த உலகை எப்படி எப்படியெல்லாம் அநுபவித்திருக்கிறார் என்று எண்ணத் தோன்றியது. பாரதி குருவியைப் பார்த்துவிட்டுச் சொல்லுவதைக் கேளுங்கள்:

"தெய்வமே! எனக்கு இரண்டு இறகுகள் கொடுக்க மாட்டாயா? பாழ்பட்ட மனிதர் கூட்டத்தையும், அதன் கட்டுகளையும், நோய்களையும், துன்பங்களையும், உதறி எறிந்து விட்டு நான் இச்சைப்படி வானத்திலே பறந்து செல்ல மாட்டேனா? ஆகா! எத்தனை தேசங்கள் பார்க்கலாம்! எத்தனை பூக்கள்! எத்தனை மலைகள், எத்தனை சுனைகள், எத்தனை அருவிகள், எத்தனை நதிகள், எத்தனை கடல் வெளிகள்! வெயில், பனி, மழை, காற்று இவை எல்லாம் எனக்கு நன்றாய்ப் பழக்கப்பட்டு, இவற்றால் எனக்கு நோய்கள் உண்டாகாமல், எப்போதும் இன்ப உணர்ச்சிகளே உண்டாகும் நிலை ஏற்பட அருளலாகாதா?

"குருவிக்குப் பேசத் தெரியும்; பொய் சொல்லத் தெரியாது. குருவியில் ஆண் பெண் உண்டு; தீராத கொடுமைகள் இல்லை. குருவிக்கு வீடு உண்டு; தீர்வை கிடையாது. குருவிக்கு உணர்வுண்டு; உழைப்புண்டு; நாயகரில்லை; சேவகரில்லை."

ஆகா! எவ்வளவு அருமையான மொழி. இந்த அமர மொழியை ஒருதரம் எண்ணிவிட்டு, பறவைகளின் வாழ்க்கையை நேரில் பார்த்ததும் எனக்கும் தெய்வத்திடம் ஒரு பிரார்த்தனை செய்யத் தோன்றியது.

"தெய்வமே! குருவிகளின் இந்த வாழ்க்கை முறையைப் பார்த்தாவது இலங்கை சர்க்கார் புரிந்து கொள்ளும்படி அவர்களுக்கு அறிவூட்டக் கூடாதா? மனிதர்கள் எல்லாரும் சமம். சிங்களவரும் தமிழரும் ஒன்று. தமிழர்கள் சிங்களவர்களுடன் எல்லாவித உரிமைகளையும் பெற்றுச் சுகமாக இருக்கலாம் என்று ஒரு அவசரச் சட்டம் இயற்றும்படி ஆட்சியாளர்கள் மனத்தை மாற்றி விடக் கூடாதா?" என்று ஆண்டவனிடம் இறைஞ்சத் தோன்றியது.

மனித இனத்தை விட்டு விலகி வந்து பறவைகளின் வாழ்க்கை முறையைப் பார்த்த போதுதான் சமதர்மத்தின் உயர்வை நன்றாக உணர்ந்து கொள்ள முடிந்தது. பறவைகள் வாழ்ந்து வரும் இந்த அருமையான சமதர்ம வாழ்க்கை முறையை மனிதர்கள் என்று கடைப்பிடித்து உயரப் போகிறார்களோ?

"என்ன ஐயா இது. இந்த ஐரோப்பிய இளைஞருடன் காட்டில் சுற்றிக் கொண்டு? வாருங்கள், நுவரேலியாவுக்குப் போகலாம்" என்று உடன் வந்த நண்பர் சற்றுக் கடுமையாகச் சொன்னதும்தான் எனக்கு இந்த உலக நினைவு வந்தது. அந்த ஐரோப்பியப் பறவை ஆராய்ச்சி நிபுணரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு பறவைத் தீவிலிருந்து மனமில்லாமல் கிளம்பினேன். கார் நுவரேலியாவை நோக்கிச் சென்றது. (தொடரும்)

# பிரஜா உரிமையும் புதிய யுக்தியும்

கொழும்பு, ஏப்ரல் 5உ

திருகோண மலையில் இருக்கும் பிரிட்டிஷ் கடற்படை இவ்வருட முடிவுக்குள் தளத்தைக் காலி செய்துவிட்டு வெளியேறுவதென்பது தீர்மானமாகி விட்டது. அதன் பிறகு திருகோணமலைத் துறைமுகத்தை, கொழும்புதுறைமுகத்தைப்போல ஒரு பெரிய வர்த்தகத் துறைமுகமாக அபிவிருத்தி செய்வதென்று உத்தேசித்திருக்கிறார்கள். ஜெர்மனியிலிருந்து தருவிக்கப்பட்ட துறைமுக எஞ்ஜினியர்களும் ஒரு பெரிய வர்த்தகத் துறைமுகமாக்க அது மிகவும் பொருத்தமானதென்று சிபார்சு செய்திருக்கின்றனர். ஒரு காலத்தில் தமிழ்ப் பிரதேசங்களில் பல வர்த்தகத் துறைகள் இருந்தன. அவை ஒவ்வொன்றாக மூடப்பட்டுத் தமிழ்ப் பிரதேசங்களின் பொருளாதாரம் கடுமையாகப் பாதிக்கப்பட்டது. இப்பொழுது அரசாங்கம் கிழக்கு மாகாணத்தில் திருகோணமலையை வர்த்தகத் துறைமுகமாக்குவதோடு வட இலங்கையிலும் ஒரு துறைமுகத்தை வர்த்தகப் போக்குவரத்துக்குத் திறந்து விடுமானால் தமிழர்களின் பொருளாதார நிலைமை உயரும்.

இலங்கையில் தலைமுறை தத்துவமாக வசித்தும் பிரஜாவுரிமை வழங்க மறுத்து நாடற்றவர்களாக்கப் பட்டிருக்கும் லட்சக்கணக்கான இந்திய வம்சாவளியினர்களை இந்தியாவுக்குப் போகுமாறு கட்டாயப்படுத்த ஒரு மறைமுகமான நிர்ப்பந்தத்தை ஏற்படுத்த அரசாங்கம் திட்டமிட்டு வருகிறது. தொழில் மந்திரி ஆரம்பிக்கவிருக்கும் தேசிய க்ஷேமலாப நிதியில் விரும்பத்தகாத சில ஷரத்துகளைச் சேர்க்க உத்தேசித்திருக்கிறார்கள். ஒரு இலங்கையர் வேலையிலிருந்து ஓய்வு பெறும் பொழுது க்ஷேமலாப நிதியில் அவரும் அவருக்காக அவருடைய முதலாளியும் செலுத்திய தொகை தடையின்றி உடனே கொடுக்கப் பட்டுவிடும். ஒரு இந்தியர் ஓய்வு பெறுவதானால், அவர் இலங்கைக்கு மறுபடியும் திரும்பி வராமல் ஒரேயடியாக இந்தியாவுக்குத் திரும்பினால் மட்டுமே, அவருக்காக க்ஷேமலாப நிதியில் அவருடைய முதலாளி செலுத்திய தொகை திரும்பக் கொடுக்கப்படும். நாடற்றவராக்கப்பட்ட ஒரு இந்திய வம்சாவளியினர் ஓய்வு பெற்றால் முதலில் இலங்கைப் பிரஜாவுரிமை கோரும் பாத்தியதையை அவர் துறக்கவேண்டும். இரண்டாவதாக அவர் இந்தியப் பிரஜையாகத் தன்னைப் பதிவுசெய்து கொள்ள வேண்டும். மூன்றாவதாக இந்தியாவுக்கு அடியோடு திரும்பிவிட அவர் சம்மதிக்கவேண்டும். இப்படிச்செய்தால் மட்டுமே அவர் சார்பாக க்ஷேமலாப நிதிக்கு அவருடைய முதலாளி செலுத்திய தொகை அவருக்குக் கொடுக்கப்படும். இவ்வித ஷரத்துக்களை க்ஷேமலாப நிதியில் ஏற்படுத்தத் தொழில் மந்திரி சிபார்சு செய்திருக்கிறார். இந்த ஷரத்துகள் சர்வதேச தொழில் ஸ்தாபனச் சட்ட திட்டங்களையும் தர்ம நியாயங்களையும் மீறியவைகளென்று இந்தியத் தலைவர்கள் அழுத்தமாகக் கண்டித்துள்ளனர். —ரஜனி

எல்லா சோதனைகளிலும்
தேர்ச்சி பெற்ற
ஆதர்ச டூத் பிரஷ்
இன்றே வாங்குங்கள்-
அதன் குணங்
களை தெரிந்து
கொள்ளுங்கள்



எல்லா
கடைகளிலும்
கிடைக்கும்

Aryan

இந்தியாவிலேயே மிக்க
அனுபவம் வாய்ந்த டூத் பிரஷ்
தயாரிப்பவர்கள்

---



சகிக்க முடியாத
உபாதை: தூக்க
மும் கிடையாது:
சுகமான நித்தி
ரைக்கும் உபாதை
நிவர்த்திக்கும்

## எப்ரிலைம்

# EPHRILIME




நீண்ட நாள்பட்டதும்,
மிக்க உபாதை தரக்கூடி
யதுமான மார்ச்சளி,
**ஆஸ்த்மா** முதலிய நோய்
களுக்கு ஓர் சிறந்த
ஹானியற்ற மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி லிட்.**

மதராஸ் டிப்போ:
2, ஜோன்ஸ் லேன் :: மதராஸ்-1

---

குணத்திலும்
மணத்திலும்
சிறந்தது




# ஜி.ஜி

மிஸ்கி பட்டணம்
பெருங்காயம்

**கோபால்ஜி & கோ.**
பம்பாய் - 3

தென் இந்திய டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

**M/s. கோபால்ஜி & கோ.**

203, கோவிந்தப்ப நாய்க் தெரு, சென்னை - 1

மற்றும்

சூடம், மெந்தால், ஓம உப்பு
பெப்பர்மிண்ட் எண்ணை
முதலியவைகளையும்
விற்பனை செய்கிறோம்

டில்லிக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

**M/s. மதராஸ் ஸ்டோர்ஸ்**

96, பேயர்டு ரோடு : புது டில்லி

# கால்கேட் குளோரோபில் ஈறுகளை பலப்படுத்துகிறது



*வைத்திய சோதனை நிரூபிக்கிறது!*

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை முறை தவறாமல் தேய்த்தால் குளோரோபிலின் நற்பலன்கள் உங்களுக்கு கிட்டுகின்றன. ஒவ்வொரு முறை கால்கேட் குளோரோபில் உபயோகிக்கும் போதும்,

- ஈறுகளைப் பலப்படுத்துகிறது!
- வாய்நாற்றத்தை அதி தீவிரமாக ஒழிக்கிறது!
- சொத்தையாக்கும் கிருமிகளை வாயினின்று ஒழிக்கிறது!

குழந்தைகள் அதன் அதி மதுரமான சுவையை விரும்புகின்றன!




இதோ! பெரிய எகானமி சைஸில் கிடைக்கிறது!

• நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

CTPA/G/6

---

## எமது புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்

எமது பாலிஸிதாரர்கள், நண்பர்கள், ஆதரவாளர்கள், ஏஜண்டுகள் அனைவருக்கும் புத்தாண்டு நல்வாழ்வு அளிக்கட்டும்

★

# இந்தியன் மியூச்சுவல் ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் சொஸைட்டி லிட்.

**தலைமை ஆபீஸ் : 35, மவுண்ட் ரோடு, மதராஸ் - 2**

(நெருப்பு, மோட்டார் கார் மற்றும் பலவித விபத்து இன்ஷ்யூரன்ஸ் செய்பவர்கள்)

ரூ. 5000/- விபத்து இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்ள வருடாந்தர பிரீமியம் ரூ. 12-8-0

விவரங்களுக்கு எழுதவும்

# மாதர்குல திலகங்கள்



நற்றமிழ் மதுரை தந்த மாதர் குல திலகங்களில் திருமதி ருக்மிணி தேவி அவர்களும் ஒருவர். திருமதி ருக்மிணி தேவி அவர்கள், மதுரையில் பிறந்தவர்; பிரசித்திபெற்ற கல்வியாளரும், பொறி இயல் விற்பன்னருமான திரு ஏ. நீலகண்ட சாஸ்திரியாரின் புதல்வியாவர். அடையாறு பிரம்மஞான சபையின் அக்கிராசனராக விளங்கிய தத்துவஞானி டாக்டர் ஜி. எஸ். அருண்டேல் அவர்களை மணந்து, கணவருடன் உலகில் முக்கியமான நாடுகளுக்கெல்லாம் சென்று வந்தார். உலக முன்னணியில் இந்தியா பெருமையுடன் விளங்க வேண்டுமானால், கலைகள் மூலமாகவே அது சாத்தியமாகும் என்று உணர்ந்தார். அதுமுதல் அருங் கலைகள் வளர்ச்சிப் பணியில் தம்மை அர்ப்பணம் செய்து கொண்டார்.

அருங்கலைகளில் பரத நாட்டியக் கலைக்கு ஒரு முக்கிய ஸ்தானம் உண்டு. பரத நாட்டியம் வேத காலந் தொட்டு நம் நாட்டில் விளங்கி வரும் கலைகளில் ஒன்று. ருக் வேதத்தில் பரத நாட்டியத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. எனினும் பரத நாட்டியக் கலை தென்னிந்தியாவில்தான், கலை யார்வமிக்க மன்னர்கள் காலத்தில் பூரண வளர்ச்சியடைய முடிந்ததெனலாம். எனினும் காலப் போக்கில், இந்த அருமையான கலை பலவித காரணங்களினால் மெள்ள மெள்ள மதிப்பு இழந்து அடியோடு மறைந்தே போய்விடும் நிலைக்கு வந்து விட்டது. அப்போதுதான், திருமதி ருக்மிணி தேவி அவர்கள் இந்தக் கலையைச் சாஸ்திரோக்த முறையில் கற்றுத் தேர்ந்து இந்தக் கலைக்குப் புத்துயிர் அளித்தார். இந்தக் கலை வளர்ச்சியை முக்கியமான குறிக்கோளாகக் கொண்டு 1936-ல் தோன்றியதுதான் கலாக்ஷேத்திரம்.

திருமதி ருக்மிணி தேவியார் தந்தையைப் போலவே சிறந்த கல்வியாளர். மேற்கு, கிழக்கு வல்லரசு நாடுகளிலெல்லாம் பாரத நாட்டின் சார்பாகக் கலைத் தூதுகள் சென்று, பிற நாடுகளுடன் நமது கலாசார உறவை ஸ்தாபிப்பதில் பணி புரிந்துள்ளார். இன்னமும் அவ்விதப் பணிகள் பல ஆற்றி வருகிறார். பார்லிமெண்டு மேல்சபைக்கு, திருமதி ருக்மிணி தேவி அருங்கலைகளின் பிரதிநிதியாக நியமனம் செய்யப்பட்டிருக்கிறார். இதைத் தமிழ்நாட்டு மாதர் குலத்துக்கே பெருமை தரும் நியமனம் என்று கூறவேண்டும்.

பரத நாட்டியக் கலை வளர்ச்சிக்கு ஸ்ரீமதி ருக்மிணிதேவி ஓர் மறுமலர்ச்சி அளித்ததைப் பாராட்டி அவருக்குச் சென்ற ஆண்டு இந்திய சர்க்கார் ''பத்மபூஷணம்'' பட்டம் அளித்ததும், இதைத் தொடர்ந்து சில தினங்களுக்கு முன் புது தில்லியில் ஆரம்பமான தேசியக் கலையரங்கில் ஸ்ரீமதி ருக்மிணி தேவி அவர்களுக்கு இந்திய சர்க்காரின் விருதுகள் அளிக்கப்பட்டதும் யாவரும் அறிந்தவையே.

கலா க்ஷேத்திரத்தின் கலைத் தொண்டு எப்படிப் பிரசித்தமானதோ, அதைப்போல் கல்வித் தொண்டும் பிரசித்தமானதாகும். மாண்டிஸோரி கல்வி முறை அங்கிருந்துதான் ஜீவ ஊற்றாகப் பெருகிப் பாய்ந்து வருகிறது.

இவை தவிர, தமிழ் வளர்ச்சிக்காகக் கலா க்ஷேத்திரம் நடத்திவரும் பல ஆராய்ச்சிகளையும், தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் பெயரால் விளங்கி வரும், புத்தக சாலையையும், அரிய தமிழ் நூல்கள், வெளியீடுகளையும், பழந் தமிழ் ஏட்டுச் சுவடிகளைப் பாதுகாத்து அவற்றை அழகாக அச்சிட்டு வரும் சாதனைகளையும், எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

அங்கு தயாராகும் கைத்தறி ஆடைகளின் விசேஷம் எங்கும் இன்று பிரபலமாகி விட்டது. ''அடையாறு பார்டர், அடையாறு கலைப்பு'' என்று இன்று பிரசித்தி பெற்று விளங்குகிறது.

இவ்வாறெல்லாம் அநேக சிறப்புகளுடன் தேசத்துக்கே ஒரு கலாக்ஷேத்திரமாக விளங்கும் ஒரு ஸ்தாபனத்தை எவ்வளவோ திறம் பட நிர்வகித்து வரும் திருமதி ருக்மிணி தேவி அவர்களுக்கு இந்த ஹேவிளம்பி தமிழ்ப் புத்தாண்டுத் திருநாளில், தமிழ்ப் பெருமக்களின் பாராட்டுதல்கள் உரித்தாகின்றன.



## பாரி

ஈகையிலுள்ள இன்பத்தைக் கண்டவர்கள் தமிழ்ப் பேரரசர்கள். அவர்களில் எழு வரை ''கடை எழு வள்ளல்கள்'' என்று வெகுவாகப் பாராட்டி தமிழ் இலக்கியங்கள் பேசுகின்றன. அந்த எழுவரில் மூவரை ஓவியர் ராஜம் இப் பக்கங்களில் வழங்குகிறார்.

பறம்பு நாட்டை ஆண்டு வந்த பாரி அரசன், ஒரு முல்லைக் கொடியைப் பார்த்தான். அது ஏறிப் படர்வதற்குக் கொழு கம்பின்றி அலைந்தது. தான் ஏறி வந்த தேரையே அந்தக் கொடிக்கு ஈந்துவிட்டு, அகன்றான். இப்பண்பைக் கபிலர் பாடுகிறார்.

பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்து ஓங்கு சிறப்பின் பாரி! (புறம்)



## பேகன்

பேகன் என்ற சிற்றரசன் ஒருநாள் காட்டு வழியே போய்க்கொண்டிருந்தான். வானத்தில் இருந்திருந்தாற்போல் கரு மேகங்கள் திரண்டன! குளிர்ந்த காற்று வீசிற்று. மழை பொழிவதற்கான அறிகுறிகள் தென்பட்டன. அந்தச் சமயம் திடீர் என்று மயில் கத்தும் சத்தம் கேட்டது. தன் வழியே போய்க்கொண்டிருந்த பேகன் குளிர் தாங்க மாட்டாமல்தான் கத்துகிறது என்று நினைத்துவிட்டான். தன்னைப் பார்த்து உதவி கேட்கத்தான் கத்துகிறது என்று நினைத்துவிட்டான். அவ்வளவுதான்! தன் மேலாடையைக் கழற்றி மயிலுக்குப் போர்த்திவிட்டான்!

"கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்"

— சிறுபாணாற்றுப் படை



# ஆய்

ஆய் அண்டிரன் என்ற அரசன் மலைநாட்டை ஆண்டு வந்தவன். வீரர்களுள் வீரனாக விளங்கினான். தன்னை நாடி வந்தவர்களுக்குப் பொன்னும் மணியும் யானையும் தேரும் ஈந்தான்! ஏன் அப்படிக் கொடுத்தான்? பொருளைக் கொடுத்துப் புண்ணியத்தைச் சம்பாதிக்கும் நோக்கத்தின் காரணமாகவா கொடுத்தான்? அதற்கு வணிகன் அல்ல அவன். பின் ஏன் கொடுத்தான்? தன் முன்னோர் காட்டிய வழியே தனக்கும் சிறந்தது என்று கருதியமையால் அவன் அப்படி ஈந்தான்!

இம்மைச் செய்தது மறுமைக்(கு) ஆம் எனும்
அறவிலை வணிகன் ஆய்அலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறிஎன
ஆங்குப் பட்டன்(று) அவன்கை வண்மையே!

# பரம ரகசியம்

உங்களுடைய பிலிப்ஸ் ரேடியோ பல ரகசியங்களைக் கொண்டது. அது புதிய விதிகளின்படி தயாரிக்கப்பட்டிருக்கிறது. மேலும் அதில் எங்களால் தயாரிக்கப்பட்ட விசேஷ தனிப்பாகங்கள் இருக்கின்றன. அது எல்லோராலும் பழுதுபார்க்கப்படக் கூடிய ரேடியோவல்ல. உங்களுடைய ரேடியோவைப் பழுதுபார்ப்பதற்கு வேண்டிய எல்லா வசதிகளும் பிலிப்ஸ் வியாபாரியிடம் இருக்கின்றன. அவரிடம் உண்மையான தனி உறுப்புக்களும், சரியான பழுதுபார்க்கும் கருவிகளும், உங்களுடைய ரேடியோவைப்பற்றி எல்லா விதிகளும் அடங்கிய 'பிலிப்ஸ் ஸர்வீஸ் மான்யுவல்' என்ற புத்தகமும் இருக்கின்றன.

எனவே உங்கள் ரேடியோவுக்கு மேற்பார்வை தேவைப்பட்டால் . . .

. . . அதை உங்கள் பிலிப்ஸ் வியாபாரியிடம் ஒப்படைத்து விடுங்கள்





பிலிப்ஸின் விற்பனையும் சேவையும் ஒருங்கே கைகோர்த்துச் செல்கின்றன. பிலிப்ஸ் ரேடியோ தொடர்ந்து சேவையை அளிக்கிறது. அதன் தயாரிப்பின் ஒவ்வொரு நிலையிலும் அது கண்டு பரிசோதிக்கப்படுகிறது. பிலிப்ஸ் ரேடியோ எங்கு விற்கப்பட்டாலும், அதை எல்லா இடத்திலும் பழுதுபார்த்துக் கொள்ளலாம்.

PHILIPS **பிலிப்ஸ்** ரேடியோ

பிலிப்ஸ் இந்தியா (பிரைவேட்) லிமிடெட்

PLPH 307

# அது "கௌ & கேட்" பார்வை

குறுகுறுப்பான கண்கள், உறுதியான தேக அமைப்பு, நன்கு வளர்ச்சி பெற்ற எலும்புகளின்மேல் உள்ள வலுவான சதைப்பற்றுகளின் மூலம், நீங்கள் அது ஒரு "கௌ அண்ட் கேட்" குழந்தை என எப்பொழுதும் நிச்சயமாக சொல்லலாம். எலும்புகளுக்கும் சதைகளுக்கும் நன்கு ஊட்டமளிக்கக்கூடிய ஓர் இயற்கையான உணவு "கௌ அண்ட் கேட்" மிக எளிதில் ஜீரணம் ஆகக்கூடியது. எப்பொழுதும் குழந்தை குதூகலமாகவும், திருப்தியுடன் காணப்படும்.

உங்கள் குழந்தைக்கு "கௌ அண்ட் கேட்"டை வற்புறுத்திக் கேளுங்கள்.

**COW & GATE MILK FOOD**

The FOOD of ROYAL BABIES



# ஹாஸ்யக் களஞ்சியம்


மனைவி:- பசங்களுக்கெல்லாம் நாளைக்கு
எண்ணெய் தேய்க்கணும்!....
புருஷன்:- இப்போ வேண்டாம்.... இந்த
வாரம் திருப்பதி போயிட்டு
வந்தப்புறம் ஒரு வழியா
எண்ணெய் தேய்க்கலாம்!


"எனக்கும் பள்ளிக்கூடத்துக்கும்
ரொம்ப தூரம்னு எங்க வாத்தியாரு
சொல்றாரப்பா!..."
"அப்போ நாளையிலேருந்து நீ
நடந்து போக வேண்டாம்... நம்ம
வீட்டு வண்டியிலே போகலாம்!.."


"நேற்று இரவு டாக்டர் பத்து லக்ஷம்
பெனிஸிலின் ஊசி போட்டாருங்க!"
"உங்களுக்கென்னங்க...
நீங்க லக்ஷாதிபிரபு!...."


ஜோசியர்:- நீங்க பின்னாலே ஓடித்
திருடனைப் பிடிக்க மாட்டீங்க!...
அவனாக உங்க கையிலே வந்து
மாட்டிக்கிட்டாத்தான் உண்டு!


ஹாவ்.....
ஹாவ்...




அன்பு மிக்க சுஜாதா,

தோட்டங்களில் அழகான சிலைகள் வைப்பதைப் பற்றிக் கேட்டிருந்தாய். அதைப் பற்றி எழுதியிருப்பதை நீயும் ஒத்துக் கொள்வாயென்று நம்புகிறேன்.

பொதுவாக, வீட்டை அலங்காரம் செய்வதில் நல்ல கலை உணர்ச்சி வேண்டும். அதை ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். ஆனல் அதன் போக்கு விபரீதமாக ஆகக் கூடாது அல்லவா? தோட்டங்களில் தெய்வ உருவச் சிலைகளை வைப்பதை நான் விரும்பவில்லை.

ஒரு பிரபல டாக்டருடைய உருவச்சிலை நகரத்தின் ஜன நெருக்கமுள்ள இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. ஆனல் நான் அந்தப் பக்கம் போகும் பொழுதெல்லாம் வருத்தப் படுவேன். தெய்வமாக இருந்த அவருடைய சிலை உருவம் வெய்யிலில் காய்ந்து, மழையில் நனைந்து, பனியில் வெடித்து இப்படி இருக்க வேண்டுமா? தெருவில் போகிறவர்கள் சுண்ணும்பை அந்தச் சிலையில் பூசி விடுகிருர்களே, இதுவா இம்மகானுபவருக்குச் செய்யப்படும் அஞ்சலி என்றெல்லாம் வருந்துவேன். கூடிய வரையில் சிலைகள் வேண்டாம். தங்கமான மனிதர்களைக் கல்லுச் சிலைகளாக உருப்படுத்திக் கானலில் நிறுத்த வேண்டாம். ராமர் - சீதையைத் தங்கத்தில் உருவமாகச் செய்ததைப் போல் நம்மால் செய்ய முடியாது. அப்படியே சிலைகள் அமைக்க விரும்பினுல் மழைக்கும், வெய்யிலுக்கும், மேலே ஒரு பாதுகாப்பு இருப்பது சிறந்ததல்லவா?

நாம் வழிபடும் தெய்வச் சிலைகளைத் தோட்டங்களில் அமைப்பதும் இப்படிப்பட்ட செய்கைதான். அத்துடன் பறவைகள் சிலையில் அசுத்தம் செய்கின்றன. அதனல் கண்கள் வழியாகச் சிந்தும் நீர் சில சிலைகள் அழுவதாகக் காண்கிறது. சிறுவர்கள் கல்லாலும் குச்சியாலும் கோடு இழுத்து அலங்கோலம் செய்கிருர்கள். இன்னும் சில வீடுகளில் சிலைகளின் கைகால்கள் ஒடிந்தால் அப்புறப் படுத்தக் கைவராமல் இருந்து விடுகிருர்கள். இவைகளெல்லாம் தோட்டங்களை அழகு படுத்தாதது மட்டுமல்ல; விகாரப் படுத்துவதுமாகும். இத்துடன் தெய்வ உருவத்துக்கு நாம் செய்யும் அபசாரமாகக்கூட ஆகலாம்.

தோட்டங்களில் அழகான செடிகள் வைக்கிறோம். பச்சைப் பசேல் என்று புல்லாந்தரையும், பூத்துக் குலுங்கும் மலர்ச் செடிகளும் இருப்பது கண்ணுக்கு இனிய காட்சிதானே. பச்சைக் கொடிகளால் பந்தல்கள், அறைகள் அமைக்கிறோம். சின்னச் சின்ன நீர் ஓடைகள் கட்டுகிறோம். மலர்க் கொடிகளைத் தோரணங்களாகப் படர விடுகிறோம். இம்மாதிரியான அலங்காரங்களுடன் திருப்தி அடைவோம். இவைகளினுல் பெருத அழகு, சிலைகளினுல் உண்டாகவே உண்டாகாது.

நம்முடைய முன்னேர்களின் பொருள் என ஒன்றை மிகுந்த அக்கறையுடன் போற்றிக் காப்பாற்றுகிறோம். அதை எவ்வளவோ ஜாக்கிரதையுடன், அன்புடன் பீரோவில் வைக்கிறோம். அந்தப் பொருளை வாசற் பக்கம் செருப்புகள் கழற்றும் இடத்திலா வைக்கிறோம்? நாம் வழிபடும் மூர்த்திகள் நம்முடைய பூஜை அறையிலும், நம்முடைய இதயத்திலும், புராதன அருமையான ஆலயங்களிலும் தான் இருக்கத் தகுந்தவை யென்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

தேசியக் கொடியையும் நாம் மரியாதைக்குரிய பொருளாகவும், வணக்கத்துக்குரிய பொருளாகவும் கருதுகிறோம். கொடியை அச்சிட்ட புடவை, கைக்குட்டை, கொடியைப் போல் கற்கள் பதித்த மோதிரம், காதணிகள் இவைகளை உபயோகிப்பது கொடிக்குச் செய்யும் மரியாதையைக் குறைப்பதாகும். நம் பாரத நாட்டின் பெருமையைப் பட்டொளி வீசிப் பரப்பும் தேசியக் கொடியைப் போற்ற வேண்டியது நம் கடமையாகும்.

ஒரு சிநேகிதி வீட்டுக்குப் போயிருந்தேன். அதற்கு இரண்டு நாட்களுக்கு முன் கிருஷ்ண ஜெயந்திப் பண்டிகை ஆகியிருந்தது. எனவே தோழி முறுக்கு கொண்டு வந்து கொடுத்தாள். கிருஷ்ணனுடைய திருவடிகள், சங்கம், சக்கரம், எல்லா உருவிலும் முறுக்கு சுற்றி இருந்தாள். பார்க்க அழகாக இருந்தது. ஆனல் சந்தோஷமாக இல்லை. நான் சாப்பிட மறுத்து விட்டேன். எனக்கு முறுக்கு மிகவும் பிடித்த பண்டம்தான். தோழி வற்புறுத்திக் கேட்டதால் சொல்ல வேண்டி நேர்ந்தது. "'தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது' பூஜிக்கும் பாதங்களை மாவினுல் செய்து கொதிக்கும் எண்ணெயில் இட்டு அதை விண்டு சாப்பிட மனம் வரவில்லை" என்றேன். கலை உணர்ச்சி வரம்புகளும் எல்லை மீறி விடுகின்றன. உற்சாக மிகுதியினுல் நாம் போற்றிப் பாதுகாக்க வேண்டியதையும் மறந்து விடுகிறோம்.

கிறிஸ்துவ சகோதரிகள் அவர்களுடைய சிலுவைகளை மிகவும் பவித்திரமாகப் பாதுகாப்பார்கள். சிலுவைச் சின்னத்தைச் சாதாரணமாக உபயோகிக்கும் பொருள்களில் அமைக்க மாட்டார்கள். இதயத்தின் மேல் இருக்கும்படி கழுத்தில் அணிந்துகொள்வார்கள். இச்சிறந்த பண்பை நாமும் பின்பற்ற வேண்டியதுதானே.

— இப்படிக்கு,

**பூமாதேவி**

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 16

## அதிசய உறவு!

பூதுகன் அவன் சொல்லிய அறையில் கதவுக்குச் சமீபமாக ஒதுங்கி மறைந்து நின்றானே தவிர, அந்த இடத்திலிருந்த வண்ணமே வெளித் தாழ்வாரத்தில் என்ன நடக்கிறது என்பதைப் பார்க்கக் கூடிய வசதி அவனுக்கு இருந்தது. அங்கே மெதுவான குரலில் பேசினாலும் கூட அவன் காதில் விழக்கூடிய நிலையில்தான் இருந்தது. அவன் மறைவிலிருந்தபடியே அங்கு என்ன நடக்கிறது என்பதை எட்டிப் பார்த்த வண்ணம், அங்கு வந்தவன் யார், அவன் எப்படி இருக்கிறான், அவன் எதற்காக வந்தான் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்தோடு இருந்தான்.

தேனார்மொழியாள் உபசாரத்தோடு ஒரு மனிதரை உள்ளே அழைத்து வந்தாள். அந்த மனிதனுக்கு முப்பத்தைந்து வயது இருக்கலாம். மிகவும் கம்பீரமான முறையில் உடை அணிந்திருந்தான். அவன் இடையில் அணிந்திருந்த பட்டு உடையும், தோளில் போட்டிருந்த பீதாம்பரமும், கழுத்தில்மின்னும் இரத்தின மாலைகளும் காதில் தொங்கிய குண்டலங்களும் அவன் ராஜ வம்சத்தைச் சேர்ந்தவன் என்பதை எடுத்துக் காட்டின. அவர் இடையில் தங்க உறையில் இடப்பட்டிருந்த வாள் ஒன்று தொங்கியது. மிகவும் கம்பீரமான உருவம், ஆனால் கண்களில் மாத்திரம் கொடூரமும் வஞ்சலையும்தான் மிதந்தன. அவன் தம்முடைய அடர்ந்த மீசையைத் தன் கைகளால் அடிக்கடி தடவியபடி இருந்தான். அவன் அலட்சியமாகப் பார்த்துக் கொண்டே ஆடம்பரமாக அங்கிருக்கும் ஆசனத்தில் அமர்ந்து ஒரு தடவை கனைத்துக் கொண்டான்.

தேனார்மொழியாள் மிகவும் அடக்கமும் பயமும் கொண்டவள்போல அவன் எதிரில் நின்று கொண்டிருந்தாள்.



“ஹூம்! தேனார்மொழி! இந்த வீட்டுக்குச் சிறிது நேரத்துக்கு முன்னால் யாரோ ஒரு புதிய மனிதன் வந்தானாமே? அவன் எங்கே? அவன் யார்?” என்றான் அந்த மனிதன், கம்பீரமாகவும் அதிகாரத் தொனியோடும்.

“ஆமாம், எங்கள் ஊரிலிருந்து வந்தார். எனக்கு ஒரு விதத்தில் அத்தை மகனாக வேண்டும். நாட்டியக் கலையில் நன்கு தேர்ந்த மனிதர். நட்டுவாங்கத்தில் மிகவும் தேர்ச்சியுள்ளவர். சங்கீதத்திலும் அப்படியே-ரொம்ப மோகம். என்னுடைய பாட்டைக் கேட்க வேண்டுமென்று அவருக்கு அளவற்ற ஆசை. அதற்காகவே குடந்தையிலிருந்து இங்கு வந்தார். இப்பொழுதுதான் வெளியே சென்றார்..” என்றாள்.

“சரிதான்! எல்லாம் உண்மைதான். அவருக்கு நாட்டியத்தில் உள்ள தேர்ச்சியையும், சங்கீதத்தில் உள்ள பற்றையும் எடுத்துச் சொன்னாயே தவிர, அவருக்கு மறுபடியும் இந்த நாட்டில் எப்படியா

கி. ரா. கோபாலன்

வது சோழ மன்னர்களின் ஆதிக்கத்தை ஏற்படுத்திவிட வேண்டுமென்ற துடிப்பு இருக்கிறது என்பதைச் சொல்ல மறந்து விட்டாயே..?'' என்றான் அம்மனிதன்.

உடனே ஒளிந்திருந்த பூதுகனுக்கு அந்த மனிதன் தேனார்மொழியாளைக் கேட்ட கேள்வி மிகுந்த ஆச்சர்யத்தை அளித்தது. அந்த மனிதன் யாரென்று பார்த்தவுடனேயே தெரிந்து கொண்டான். அவன்தான் சிம்மவர்மன்-பல்லவ மன்னரின் ஒன்று விட்ட சகோதரன். அவனுக்குத் தான் காஞ்சி வந்திருப்பதும் தேனார்மொழியாளின் வீட்டுக்கு வந்திருப்பதும் எப்படித் தெரிந்தது என்பதுதான் பூதுகனுக்கு வியப்பாயிருந்தது. ஆனால் தேனார்மொழியாளின் வீட்டுக்கு வரும்போது எதிரில் சந்தித்த அந்த மனிதனின் ஞாபகம் வரவே அந்த மனிதன்தான் தன்னைப்பற்றித் தெரிந்து கொண்டு சிம்மவர்மனிடம் சொல்லியிருக்க வேண்டும் என்று எண்ணினான். எப்படியோ தான் அங்கு வந்திருக்கும் விஷயத்தையும், தான் யார் என்பதையும் அறிந்து கொண்டதிலிருந்து தன்னுடைய விவகாரங்கள் அவ்வளவையும் அந்த மனிதன் அறிந்திருக்கிறான் என்று பூதுகன் ஒருவாறு உணர்ந்து கொண்டான்.

பூம்புகார் புத்த சேதியத்தில் நடந்த கொலைக்கும் அந்த மனிதனுக்கும் சம்பந்தம் இருக்கத்தான் வேண்டும் என்பதை அவன் உணர்ந்து கொண்டான். அச்சமயத்தில் தேனார்மொழி தன்னைக் காட்டிக் கொடுத்தால் நிச்சயம் தனக்கு ஆபத்து ஏற்படும் என்பதையும் அவனால் உணர்ந்து கொள்ள முடிந்தது. ஆனால் அந்த ஆபத்திலிருந்து மெதுவாகத் தப்பிப் பல்லவமன்னருக்கு எதிரிடையாகச் சூழ்ச்சிகள் செய்து வரும் அந்த மனிதனிடம் எப்படியாவது நட்பு காட்டி அவனுடைய உதவியைக் கொண்டே தன்னுடைய லட்சியத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்று அவன் திட்டமிட்டான். இதற்குத் தேனார்மொழியாளும் சேர்ந்து தனக்கு உதவி புரிந்தால் சிம்மவர்மனின் நட்பு கிடைப்பதோ, அவனைப் பயன்படுத்திக் கொள்வதோ சிரமமான காரியம் ஆகாது என்று அவனுக்குத் தோன்றியது. அவன் மனம் பலவிதமாகத் திட்டமிட்டுக் கொண்டிருந்தாலும் வெளியே தாழ்வாரத்தில் அவர்கள் என்ன பேசிக்கொள்ளுகிறார்கள் என்பதிலேயே அவன் மிகவும் கவனமாக இருந்தான்.

சிம்மவர்மனின் வார்த்தைகள் தேனார்மொழியாளைத் திகைக்க வைத்தன. சிம்மவர்மன் 'பூதுகன் யார்? அவன் எண்ணங்கள் என்ன' என்பது பற்றித் தெரிந்து கொண்டிருப்பது அவளுக்கு மிகவும் வியப்பை அளித்தது.

மறுபடியும் சோழமன்னர்களின் ஆதிக்கத்தை நிலைநிறுத்த வேண்டும் என்பதற்காகப் பாடுபடும் ஒருவன் அந்தச் சமயத்தில் பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகராகிய காஞ்சியில் வந்து சிக்கிக் கொண்டது எத்தகைய அபாயம்? சிம்மவர்மனின் கவனத்துக்கு இலக்காகிய பூதுகனின் கதி என்ன ஆகுமோ என்று பயந்



தாள், தேனார்மொழியாள். அதோடு மட்டுமல்ல, அந்தப் பூதுகனுக்குத் தன் வீட்டிலேயே இடம் அளித்திருப்பது எத்தகைய ராஜத் துரோகம்? இதற்கு எத்தகைய ராஜதண்டனை தனக்குக் கிடைக்கும் என்பதை அவள் யோசித்த போது அவள் உள்ளம் நடுங்கியது. நெருக்கடியான அந்தச் சமயத்தில் எப்படியாவது சிம்மவர்மனின் கண்களில் பூதுகன் படாதவண்ணம் செய்து அவனை அனுப்பிவிட்டால் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணினாள். அவள் கொஞ்சம் நடிப்பில் கைதேர்ந்தவள். தேன்போல் இனிக்கும் அவள் கொஞ்சும் வார்த்தைகளிலும் விழிகளிலும் சாம்ராஜ்யத்தையே கலக்கிவிடும் சக்தி கூட இருந்தன.

அவள் தன் அகன்ற கண்களை உருட்டி விழித்து பரபரப்பும் திகிலும் அடைந்தவள் போல நடித்தாள். பிறகு நடுக்கத்தோடு கூடிய இனிய குரலில், "அவர் அத்தகைய மனிதரா? அது எனக்குத் தெரியாதே..? அசட்டு மனிதர்! இத்தகைய மகத்தான பல்லவ சாம்ராஜ்யம் உலகில் திகழும்போது எதற்காக அழிந்து மடிந்து போன சோழர் ஆதிக்கத்தை மறுபடியும் உலகில் நிறுவலாம் என்று கனவு காணவேணும்? இதெல்லாம் எனக்குத் தெரியாது. இதிலெல்லாம் எனக்கு என்ன சம்பந்தம்? அதற்கு நான் ஏன் கவலைப்படப் போகிறேன்? அவர் என்னுடைய அத்தை மகன் என்ற காரணத்தாலும் இசையில் மிகுந்த பற்று உள்ளவர் என்பதாலும் அவரை வரவேற்று உபசரித்தேன். அவரும் தமக்குப் பிடித்தமான தேவாரப் பண்ணைப் பாடும்படி சொன்னார். பாடினேன். அதைக் கேட்டு விட்டுத் தமக்கு ஏதோ அவசர வேலை இருப்பதாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டார். ஒரு வேளை நாளை அல்லது மறுதினம் வந்தாலும் வரலாம்" என்றாள்.



சிம்மவர்மன் இடி இடித்து ஒய்வது போல் பரிகாசச் சிரிப்புச் சிரித்தான். பிறகு, "நல்ல வேடிக்கை. பூதுகன் உன்னிடம்தேவாரப் பண் கேட்டானா? இதை இவ்வுலகம் கேட்டால் சிரிக்கும். தேனார்மொழி! என்னிடம் நடிக்காதே. அவனுக்குச் சங்கீதத்தில் பிரியம் இருக்கலாம். ஆனால் அவன் 'தேவாரப் பண் பாடு' என்று கேட்டான் என்கிறாயே, அதுதான் வேடிக்கை. பரம நாஸ்திகனா தேவாரப் பண் பாடு என்று சொல்லுவான்? இந்த இடத்தில்தான் உன் நடிப்பின் மெருகு கொஞ்சம் அழிந்து பல் இளிக்க ஆரம்பித்துவிட்டது. பாவம், என்ன செய்வாய்? பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் ஒரு சைவப் பித்தன். பித்தனை வணங்கும் அப் பித்தனிடம் தேவாரப் பண் பாடி உனக்கு

அதே நினைவாகி விட்டது. இந்த நிலையில் பரம நாஸ்திகனான பூதுகனும் ஏதோ தேவாரம் பாடச் சொன்னான் என்று பிதற்றுகிறாய். தேனார்மொழி! அவன் மறுபடியும் பல்லவ மன்னனுக்கு விரோதமாகச் சோழ ஆதிக்கத்தை நிலைநிறுத்தக் கனவு காண்கிறான் என்பது உனக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் அவன் ஒரு நாஸ்திகன் என்பதையும்கூட நீ மறந்து விட்டதுதான் விநோதம். அவன் சாதாரண நாஸ்திகன் இல்லை. கொலை பாதகச் செயல்களைக் கூடத் துணிந்து செய்யக் கூடியவன். ஒரு புத்த சேதியத்தில் துறவு மார்க்கத்தைக் கைக் கொண்ட ஒரு புத்தபிக்ஷுவைக் கத்தியால் கூசாமல் கொலைபுரியும் துணிவு ஒரு நாஸ்திகனுக்குத்தானே ஏற்படும்? அவன் இன்னொரு புத்தபிக்ஷுவையும் கடலில் தள்ளிக் கொல்ல நினைத்தான். அவனுடைய கை வரிசை பலிக்கவில்லை. கடைசியில் தர்ம சிந்தனையும் சாத்விக குணமும் கொண்ட ஒரு புத்தபிக்ஷுவை யாவது கொன்றால்தான் மனம் நிம்மதி யடையும் என்று ஏதுமறியாத ஒரு புத்த பிக்ஷுவைக் கொன்றிருக்கிறான். இப்படி யெல்லாம் செய்ததால் சோழ ஆதிக்கத்தை ஏற்படுத்திவிட முடியுமா? தஞ்சை சிற்றரசர் மாறன் முத்தரையர் சாதாரண மனிதர் அல்ல. பல்லவ சாம் ராஜ்யத்தின் மீது பேரன்பு கொண்ட மகாவீரர். அங்குமிங்குமாகச் சோழ வம்சத்தினர் தலையெடுக்காத வண்ணம் செய்து வருவதிலேயே மிகக் கவனமாக இருக்கிறார். அவருடைய சேனாதிபதி கலங்கமாலரையரும் பெரிய வீரர். சோழ வம்சப்பூண்டு எங்கு இளம்புலதா யிருந்தாலும் அதைத் தம் கால்கட்டை விரலால் தேய்த்துவிடச் சித்தமாயிருக் கிறார். பழையாறை நகரிலிருந்து நம் முடைய சாம்ராஜ்யத்துக்குத் தலை வணங்கிப் பணிந்து செலுத்தும் ஒரு பல வீனமான சோழப் பரம்பரையைப் பேர் அரசாக்கி விடலாம் என்று கனவு கொண்டு திரிகிறான் அந்தப் பூதுகன். நமக்கு நல்லவன் போல் நடந்து கொள் ளும் கொடும்பாளூர் அரசன் சோழப் பரம்பரையில் பெண் கொடுத்து, பெண் எடுத்த விஷயத்தில் அவர்களுக்கு ஆதரவு காட்டுவது போல் நடந்து கொள்கிறான். இதெல்லாம் எதற்குச் சொல்கிறேன் என்றால் நீ ஏதும் அறி யாத பெண். ராஜ சபையில் சிறந்த பாடகி என்று பெருமதிப்பு பெற்றவள். உனக்கு இப்படிப்பட்ட ராஜத் துரோக சிந்தை உள்ளவர்களின் நட்பு கூடாது என்பதற்காகத்தான்'' என்றான்.

சிம்மவர்மனின் பேச்சுக்கள் தேனார் மொழியாளுக்கு வியப்பையும் திகிலை யும்தான் அதிகப்படுத்தின. அங்கு வந்திருக்கும் பூதுகனைப் பற்றிச் சிறிது கேள்வியுற்றிருந்தாளே தவிர, அதிகம் ஒன்றும் தெரியாது. பூதுகனைப் பார்த் ததுமே அவள் மனத்தை அவன் கவரும் உருவமாகிவிட்டான், காரணம் இல்லா மலேயே அவன்மீது அவளுக்கு ஒருவித அன்பும், மதிப்பும், மரியாதையும் ஏற் பட்டுவிட்டன. சிம்மவர்மனின் குணம் அவளுக்கு நன்றாகத் தெரியும். அவன் எவ்வளவுதான் பூதுகனிடம் பழி சுமத்தி னாலும் அவன் வார்த்தைகளை அவள் நம்பத் தயாராக இல்லை. பூதுகன் பூம்புகார் புத்த விஹாரத்தில் புத்த பிக்ஷுவாக நடித்த ரவிதாசனைக் கொன் றிருப்பான் என்பதையும் நம்பத் தயா ராக இல்லை. அப்படி அவனே ரவிதாச னைக் கொன்றிருந்தாலும் நாட்டில் சுற்றிக் கொண்டிருந்த ஒரு துரோகி

குஞ்சுவும்! பஞ்சுவும் நண்பர்கள். குஞ்சு அதிர்ஷ்டக்காரர். ஆனால் பஞ்சு அதற்கு நேர்மாறானவர்.



குஞ்சுவும்






யைக் கொன்று நல்ல காரியத்தைச் செய்தான் என்ற திருப்திதான் அவளுக்கு. தவிர, பல்லவ அரச சபையில் பெருமதிப்போடும் கௌரவத்தோடும் அவள் இருந்தாலும் தன் பிறந்த நாட்டின்மீது அவளுக்கு இயற்கையாகப் பற்றுதல் ஏற்படுவது குற்றமா? சோழ நாட்டைச் சேர்ந்த அவள் மனம் பழைய சோழ மன்னர்களின் வீரப் பிரதாபங்களைக் கதை கதையாகக் கேட்டிருக்கிறது. அத்தகைய மன்னர்களின் ஆட்சி மறுபடியும் எப்பொழுது ஏற்படும், என்று சோழநாடு உலகிலேயே தலைசிறந்த நாடாகப் போகிறது என்ற கலவரமும் ஆசையும் அவள் மனத்தில் அடிக்கடி எழுவதுண்டு. பூதுகனைப் போன்ற ஒரு வீர வாலிபன் பாண்டிய, பல்லவ சாம்ராஜ்யங்களுக்கு எதிராக நின்று சோழ மன்னர்களின் பேரரசை நிலைநிறுத்த விரும்புவதற்கு ஆசாவாசத்தாலும் இருக்க வேண்டும் என்றுதான் அப்பொழுது அவளுக்குத் தோன்றியது. பல்லவ சாம்ராஜ்யத்தில் உயர்ந்த பதவியில் மதிப்போடு வாழ்ந்து வரும் அவள் இதைஒரு இராஜத்துரோக நடத்தையாகவே கருதவில்லை. இந்தச் சமயத்தில் அவள் மிகுந்த புத்தி சாதுர்யத்தோடு நடித்துச் சிம்மவர்மனைச் சீக்கிரம் வெளியேற்ற நினைத்தாள்.

"பூதுகன் காவிரிப்பூம் பட்டினத்தில் ஒரு புத்த பிக்ஷுவைக் கொன்று விட்டாரா? பாவம்! மகா பாவம். எந்த மதத்தினராக இருந்தாலும், மதத்துவேஷம் கொண்டவராயிருந்தாலும் கூட ஒரு துறவியைக் கொல்லுவது மகா கொடுமை. அது மிகவும் கோழைத்தனம். இத்தகைய கொடிய செய்கையில் ஈடுபடுகிறவர் தேசத்துரோகி மாத்திரம் அல்ல; கொடிய மதத்துரோகியுங் கூட. எந்த மதமும் கொலையை ஆதரிக்கவில்லை. எந்த மதத்தினனாவது எந்தக் காரியத்துக்காகவாவது பிறரைக் கொல்லும்காரியத்தில் ஈடுபடுவானானால் அவன் தன்னுடைய மதத்துக்கே துரோகிதான்" என்றாள் கணத்துக்குக் கணம் மாறுதலான உணர்ச்சியைக் காட்டும் இனியகுரலில்.

சிம்மவர்மன் சிரித்தான். "பூதுகன் புத்திசாலிதான். அதோடு மட்டுமல்ல. அஞ்சாத வீர நெஞ்சு கொண்டவனென்றும் தெரிகிறது. எதற்கும் கலங்காத கலங்கமாலரையரைக்கூடச் சிறிது கலக்கம் காண வைத்து விட்டவன் அல்லவா? என்ன இருந்தாலும் அவனிடம் எனக்குச் சிறிது பயம் இருக்கத்தான் செய்கிறது. சாதுர்யமும் ஆண்மையும் இருக்குமானால் ஒரு தனி வீரன் மட்டுமே பெரிய சாம்ராஜ்யத்தை அழிக்கவோ, படைக்கவோ முடியும் என்பதை நான் நம்புகிறேன். அதனால்தான் அவனிடம் எனக்குச் சிறிது அச்சம் எழுகிறது. இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு எத்தகைய இடுக்கண்ணும் ஏற்படாத வண்ணம் காப்பாற்றுவதற்காக அந்தத் துரோகியான பூதுகனை ஒழித்துக் கட்ட வேண்டுமென நினைக்கிறேனே தவிர, எனக்கு அவனைப் பழி வாங்க வேண்டுமென்ற எண்ணம் இல்லை. அதோடு அவன் உனக்கு உறவினன் என்பதை இப்பொழுது அறிந்ததும் அவனிடம் எனக்குச் சிறிது இரக்கங்கூட ஏற்படுகிறது" என்றான் சிம்மவர்மன்.

சிம்மவர்மன் சிறிது மன இரக்கம் கொண்டவன் போல் பேசும் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தாள் தேனார் மொழி. அவள் ஒரு மயக்குச் சிரிப்பு சிரித்தாள். அத்தகைய சிரிப்பை அவள் மிகவும் முக்

பஞ்சவும் 2








சென்ற ஐந்து ஆண்டுகளாகக் கலைவிற்பன்னர்களுக்கு பாரத சர்க்கார் பாராட்டுப் பத்திரங்களும் விருதுகளும் வழங்கிக் கௌரவித்து வருகிறார்கள். இந்த ஆண்டு மேற்படி பாராட்டும் விருதும் சேர்ந்து கர்நாடக சங்கீதம், வாத்தியம், நாட்டியம் ஆகிய மூன்று கலைகளிலும் சிறந்து விளங்கும் முசிரி ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர், ஸ்ரீ சௌடய்யா, ஸ்ரீமதி ருக்மிணிதேவி ஆகியோருக்குக் கிடைத்துள்ளன. புது தில்லியில் நிகழ்ந்த இந்தப் பரிசளிப்பு விழாவில் ஜனாதிபதியிடமிருந்து மூன்று கலைஞர்களும் பரிசு பெறும் காட்சியைப் படத்தில் காணலாம்.

கியமான சந்தர்ப்பங்களில்தான் உபயோகப்படுத்துவது வழக்கம். பூதுகனைச் சிம்மவர்மனிடமிருந்து காப்பாற்றுவது ஒரு கோடிப் பொன்னைவிடச் சிறந்ததாக அவள் நினைத்திருந்தால் தானே இத்தகைய சிரிப்பு சிரித்திருக்க முடியும்? வீர நெஞ்சமும், உறுதியும் படைத்து அசந்தையோடு உயரத்தில் பறக்கும் சிம்மவர்மனின் மனமும் அந்தச் சிரிப்பில் எவ்வளவு எளிதாக வழுக்கிக் கீழே விழுந்து விட்டது என்பது அவனுடைய முகத்திலிருந்து தெரிந்தது.

தேனார் மொழியாள் பேச ஆரம்பித்தாள். "பூதுகனை மன்னித்து விடுங்கள். ஆம்! என்னுடைய அத்தை மகன் என்பதற்காக நான் எப்படியேனும் அவருடைய பிசகை அவருக்கு எடுத்துக் காட்டி, அவர் மனத்தை மாற்றப் பிரயத்தனம் செய்கிறேன். அவரை இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தைப் போற்றிக் காக்கும் பணியில் ஈடுபடுத்த முயலுகிறேன். சிறந்த புத்தி நுட்பம் மிகுந்த அவர் உங்களுக்கு அனுகூலமுள்ளவராக இருக்கவேண்டுமென்பது தான் என் ஆவல். பெருந் தன்மையுள்ள நீங்கள் அவரிடம் சிறிது கருணை காட்டுங்கள். நாளைய தினம் அவர் வருவார். அவரிடம் எல்லாவற்றையும் சொல்லுகிறேன்" என்றாள்.

தேனார்மொழியாளின் சிரிப்பில் வழுக்கி விழுந்த சிம்மவர்மனின் மனம் அவளுடைய இனிய வார்த்தைகளின் கிளுகிளுப்புக்குள்ளாகிச் சுழன்றது.

'தேனார்மொழி! உன்னைப்பற்றி எனக்குத் தெரியாதா? உன்னுடைய சிரிப்பிலோ வார்த்தையிலோ மயங்காத மனிதர் என்று யாரையாவது காட்டினால் அவர்களுக்கு அடிமையாகிவிட நான் சித்தமாயிருக்கிறேன். அப்படி இருக்கும் போது இந்தப் பூதுகன் எம்மாத்திரம்? நீ எப்படியேனும் அவன் மனத்தை மாற்றி அவனை என் வார்த்தைகளுக்கு இணங்கக் கூடியவனாகச் செய்து விட வேண்டும். அப்படி நடக்குமானால் அரச சபையில் அவனை ஒரு உயர்ந்த பதவியில் அமர்த்திவிடுவது பெரிய காரியமல்ல..." என்று கூறினான் சிம்மவர்மன்.

"உங்களால் ஆகாத காரியம் ஏதேனும் உண்டா? நான் எப்படியாவது முயன்று அவரை வசப்படுத்தி விடுகிறேன்" என்றாள் தேனார்மொழியாள்.

"தேனார்மொழி! அவன் இங்கே வந்திருக்கிறான் என்பதை என்னுடைய நண்பன் குஞ்சரமாலன் மூலமாகக் கேள்விப்பட்டேன். அவனுக்குத் தீங்கு நினைப்பதை விட, அத்தகைய புத்தி நுட்பம் உடையவனை எனக்கு நண்பனாக்கிக் கொள்ள வேண்டுமென்பதில் தான் எனக்கு ஆவல் அதிகமாக இருக்கிறது. இதற்காகத்தான் உடனடியாக நான் இங்கு வந்தேன். இதில் உன்னுடைய உதவி எனக்கு மிகவும் அவசியம். உன்னுடைய முயற்சி சித்தியாகுமென்று நினைக்கிறேன்."

"ரொம்ப சந்தோஷம். உங்களுடைய அன்பும் ஆதரவும் இருக்குமானால் எதையும் நான் எளிதாக முடித்துவிட முடியும். நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் எதற்காக இருக்கிறேன்? இது என்னுடைய முக்கிய கடமை யில்லையா?" என்றாள் தேனார்மொழியாள்.

"சரி! நான் போய் வருகிறேன். நாளைய தினம் மாலை நான் இங்கு வருகிறேன், அப்பொழுது பூதுகனைச் சந்திக்க ஏற்பாடு செய். எல்லாவற்றையும் சாமர்த்தியமாக முடிப்பது உன்னுடைய சாமர்த்தியம்" என்று சொல்லித் தேனார்மொழியிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான் சிம்மவர்மன்

தேனார் மொழியாள் ஏதோ மன ஆறு தலும் நிம்மதியும் அடைந்தவளாக அவனைத் தெருவரையில் கொண்டுபோய் வழியனுப்பி விட்டு உள்ளே வந்தாள்.

அந்த அறையில் இருந்த வண்ணம் வெளித் தாழ்வாரத்தில் நடந்தவைகளை யெல்லாம் தெளிவாக அறிந்துகொண்ட பூதுகன் பலவிதமாகச் சிந்திக்கத் தொடங்கினான். அவனுக்குப் பல உண்மைகள் விளங்கின. காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த கலங்கமாலரையருக்கும் சிம்மவர்மனுக்கும் அதிக தொடர்பு இருக்கிறதென்பதை யறிந்து கொண்டான் பூதுகன். சிம்மவர்மனின் கையாளாகிய ரவிதாசன் கொலை செய்யப் பட்டதிலிருந்து இவர்களுக்கு விரோதமாக வேறு யாரோ இருந்து பல சூழ்ச்சிகள் செய்கிறார்களென்பதும் அவன் மனத்துக்குப் பட்டது. பல்லவ சாம்ராஜ்யத்தின் பாதுகாப்பாளன் போல் சிம்மவர்மன் பேசினாலும் அவன் பல்லவ சாம்ராஜ்யத்தையே கவிழ்க்க நினைக்கும் துரோகி என்பதை அவனுடைய பூடகமான பேச்சிலிருந்து நன்குணர்ந்து கொண்டான் பூதுகன். அதிலும் தன்னுடைய நட்பைச் சிம்மவர்மன் விரும்புவது எத்தகைய காரியத்துக்காக இருக்குமென்பது அவனுக்கு நன்கு விளங்கியது. எப்படி இருந்தாலென்ன? சிம்மவர்மன் தானாகவே வந்து தன் பொறியில் சிக்கிக் கொண்டான் என்று தான் பூதுகன் எண்ணினான். தன் லட்சியத்துக்கு, பல்லவ அரசருடைய துரோகியாக விளங்கும் சிம்மவர்மனின் நட்பு அத்தியாவசியமானதென்று அவன் எண்ணினான். எப்படியோ தேனார்மொழியாளின் மூலம் சிம்மவர்மனின் நட்பைச் சம்பாதித்துக் கொண்டு பல ரகசியங்களை யறிந்து கொள்ளலாமென்று பூதுகன் நினைத்தான். ஒரு சாம்ராஜ்யத்தின் துரோகியும், மற்றொரு சாம்ராஜ்யத்தில் பக்தி விசுவாசமுள்ளவனும் நண்பர்களானால் ஒரு சாம்ராஜ்யம் அழிவதற்கும் ஒரு சாம்ராஜ்யத்தை எழுப்புவதற்கும்வேறு காரணங்கள் வேண்டுமா? பல்லவ சாம்ராஜ்யத்தின் துரோகி ஒருவரின் நட்பு சோழ சாம்ராஜ்யத்தின் உதயத்துக்கு ஆரம்ப முகூர்த்தக் கால் நடுவது போன்ற சுப சூசகமல்லவா?

சிம்மவர்மனை வாசல் வரையில் கொண்டு போய் விட்டு வந்த தேனார் மொழியாள் சிரித்துக் கொண்டே வந்து பூதுகனிடம், "எல்லாவற்றையும் தெரிந்து கொண்டீர்களல்லவா? வந்த மனிதர் யாரென்று உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டுமே? நாங்கள் பேசிக் கொண்டிருந்தது உங்கள் காதில் விழுந்திருக்க வேண்டுமே?" என்றாள்.

"எல்லாம் தெரிந்து கொண்டேன். எல்லாவற்றையும்விட உன் நடிப்புத்தான் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. என்னை உன்னுடைய அத்தை மகன் என்று சொல்லி விட்டாயே? பாவம். அந்த மனிதரும் நம்பியதுதான் அதிசயம். உனக்கும் இப்படி ஒரு அத்தை மகன் இருக்கவேண்டியதுதான். ஆனால் இதை உலகம் நெடுநாள் நம்ப வேண்டுமே?....." என்றான் பூதுகன்.

"ஆமாம், நான்கூட அந்த இடத்தில் ஏதோ பொருத்தமில்லாமல்தான் சொல்லி விட்டேன். அவரும் நம்பி விட்டார். நீங்கள் குலத்தில் அந்தணரல்லவா....?" என்றாள் தேனார்மொழியாள். சட்டென்று நாணம் தோன்றி அவளைத் தலைகுனியவைத்தது (தொடரும்)

## சட்ட நிபுணர் மறைந்தார்



பல இடங்களில் ஜில்லா நீதிபதியாகவும் பிறகு சென்னை ஹைகோர்ட் நீதிபதியாகவும் சுதந்திர இந்தியாவில் சுப்ரீம் கோர்ட் நீதிபதியாகவும் பதவிகள் வகித்துப் பெரும்புகழும் பெற்று விளங்கிய ஸ்ரீ என். சந்திரசேகரய்யர் காலமான செய்தி கேட்டு மிகவும் வருந்துகிறோம். இந்தியாவில் உள்ள சிறந்த அறிவாளிகளில் ஸ்ரீ சந்திரசேகரய்யர் ஒருவராகத் திகழ்ந்தார். ஆங்கிலத்திலும் வடமொழியிலும் மிகுந்த வல்லவராக விளங்கிய ஸ்ரீ ஐயர், 1917-ம் வருஷம் ஸ்ரீமதி பெசண்டம்மை சிறைப்பட்டபோது அவரது பிரபல "நியூ இந்தியா" பத்திரிகைக்குத் தலையங்கம் எழுதும் பொறுப்பையும் ஏற்றார். சுப்ரீம் கோர்ட் நீதிபதி பதவியிலிருந்து விலகிய பிறகு அவர் தொகுதி நிர்ணயக் கமிஷன் தலைவர் பதவியேற்று, உற்ற காலத்தில் பொதுத் தேர்தல்கள் நடப்பதற்குப் பேருதவி புரிந்தார். பல மத ஸ்தாபனங்களுடனும் சமுதாய நல ஸ்தாபனங்களுடனும் தொடர்பு கொண்டு ஸ்ரீ சந்திரசேகரய்யர் செய்த அரிய தொண்டை யாரும் மறக்க முடியாது. ●●●



# இசை வாணர்களுக்கு

செவிக்கினிய இசை நாதத்திற்கு இன்றியமையாத ரஞ்சகமான நிலையை விருத்தி செய்ய விடமின்கள் அத்தியாவசியமானவை. பார்லேயின் போஷாக்கு சத்து வாய்ந்த க்ளுகோ பிஸ்கட்டுகளில் விடமின் கள் சேர்ந்துள்ளன.




* பார்லேயின்

## க்ளுகோ

## பிஸ்கோத்துகள்

விடமின்கள் சேர்ந்துள்ளன

PG. 57.4 TA

# அழகப்பர் அமரரானார்

உலகம் பல கல்விமான்களைப் பெற்றுவிடலாம்; செல்வவந்தர்களைப் பெற்று விடலாம். நாவலர்களையும் பாவலர்களையும் பெற்றுவிடலாம். ஆனால் ஒரு சில கொடை வள்ளல்களைப் பெறுதல் அரிதினும் அரிது. அத்தகைய வள்ளல்களில் ஒருவர் மறைந்து விட்டார். சென்ற ஐந்தாம் தேதி வெள்ளிக்கிழமை அன்று உண்மையான வள்ளல் ஒருவர் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார்.

அறிவு தெரிந்த நாளிலிருந்து, கடைசி மூச்சு உள்ளவரையில் 'கொடை' 'கொடை' என்று கொடுப்பதைப் பற்றியே நினைத்து, கொடுப்பதைப் பற்றியே பேசி, கொடுப்பதிலேயே இன்பங் கண்டு, கொடை வள்ளலாகவே வாழ்ந்த டாக்டர் அழகப்பர் அமரராகி விட்டார். அவருடைய கொடையால் வளர்ந்த எண்ணற்ற கல்வி ஸ்தாபனங்கள் இன்று அழகப்பரைப் பிரிந்து தாயை இழந்த சேய்போலக் கலங்கி நிற்கின்றன.

அழகப்பரின் மறைவு கல்வித் துறைக்கு மட்டுமல்லாது இன்னும் பல துறைகளிலும் நஷ்டம் விளைவித்திருக்கிறது. தொழில் ஒரு தொழிலதிபரை இழந்து விட்டது; செல்வம் ஒரு செல்வவந்தரை இழந்துவிட்டது; வண்மை ஒரு வள்ளலை இழந்து விட்டது; வீரம் ஒரு வீரரை இழந்து விட்டது; இளமை ஒரு இளைஞரை இழந்து விட்டது.

எத்தகைய பெரியாரை எவ்வயதில் நாடு இழந்தது? நாற்பத்தெட்டு வயதில் தமிழ்நாட்டுக் கல்வி வளர்ச்சியிலும் தொழில் வளர்ச்சியிலும் உயிரா யிருந்த ஒரு உத்தமரை அல்லவா தமிழ்நாடு இழந்து விட்டது?

டாக்டர் ஆர். எம். அழகப்பச் செட்டியார் 1909-ம் ஆண்டில் பிறந்தார்; லண்டனுக்குச் சென்று பாரிஸ்டர் பட்டம் பெற்றார்; பின்னர் இந்தியா திரும்பித் தொழில் துறையில் ஈடுபட்டார்; அந்தத் துறையில் பல விதமான கஷ்ட நஷ்டங்களை அடைந்து படிப்படியாக முன்னேறி மிகப் பெரிய தொழில் அதிபரானார். முடிவில் தாம் ஈட்டிய செல்வங்கள் அனைத்தையும் பல கல்வி ஸ்தாபனங்களுக்கும், ஆராய்ச்சி நிலையங்களுக்கும் அள்ளிக் கொடுத்துக் கொடை வள்ளலானார். கடைசிக் காலத்தில் தம்முடைய சொந்த ஊரான கோட்டையூருக்கு அருகில் இருக்கும் காரைக்குடியில் உள்ள அழகப்பா கல்லூரிகளின் வளர்ச்சியில் தம்மை மறந்து தொண்டாற்றி வந்தார். இதன் மூலம் செல்வவந்தர்கள், ஏழைகள், படித்தவர்கள், பாமரர்கள் அனைவருடைய அபிமானத்துக்கும் உகந்தவராக உயர்ந்திருந்தார். பிறந்த ஊரில் பிரபலமடைந்திருந்தது போலவே பரந்த உலகிலும் தம் புகழை நிலைநாட்டியிருந்தார்.

சென்ற பல மாதங்களாக நோய்வாய்ப்பட்டு நடமாட முடியாமல் படுத்த படுக்கையிலேயே இருந்தார். உடல் மோசமான நிலையிலிருந்தபோதிலும் அவர் முகத்தில் மட்டும் அறிவுக் களை வீசிக் கொண்டிருந்தது. சென்னை நகருக்கு யார் வந்தாலும் டாக்டர் அழகப்பரைப் பார்க்காமல் செல்லவே மாட்டார்கள். படுத்த படுக்கையில் இருந்து கொண்டே அவர் வந்த விருந்தினர்களை வரவேற்று உபசரித்த பண்பும், தாம் மேற்கொண்ட பணியை நிறைவேற்ற ஆற்றிய தொண்டும் தனிச் சிறப்பு வாய்ந்தவை.

காரைக்குடி கல்லூரிகளில் ஒரு வைத்தியக் கல்லூரியையும் ஏற்படுத்தி அதை ஒரு பல்கலைக் கழகமாக மாற்றிவிட வேண்டும் என்று டாக்டர் அழகப்பர் தம்முடைய இறுதிக் காலத்தில் துடிதுடித்துக்கொண்டிருந்தார். அதற்கான நல்ல சூழ்நிலையையும் உருவாக்கிக்கொண்டு வந்தார். அந்த எண்ணம் ஈடேறுவதற்குள்ளாகவே காலன் அவசரப்பட்டு விட்டான். ஆனாலும் டாக்டர் அழகப்பரின் ஆசை விரைவில் நிறைவேறும்.

அவரது வாழ்க்கை வரலாற்றை ஒவ்வொருவரும் புரிந்து கொள்ள வேண்டும். அவர் பொருள் ஈட்டியதில் காட்டிய ஆர்வமும் திறமையும் ஈடு இணையற்றது. அதைப் போல ஈட்டிய பொருளை நல்ல காரியங்களுக்கு அள்ளிக் கொடுத்த கொடைத் திறனும் நாவாரப் போற்றிப் பாராட்டுதற்குரியது. கடுமையான நோயின் கொடுமைக்கு மத்தியிலும் தளராத மன உறுதியுடன் தாம் எடுத்த காரியத்தை நிறைவேற்றி வந்ததில் அவருக்கு ஈடாக யாரையும் கூற முடியாது. இந்த உயர்ந்த குணங்கள் எல்லாம் நம்முடைய மக்களுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாயிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இந்த நாட்டில் கல்வியும் தொழிலும் உள்ள வரையில் டாக்டர் அழகப்பரின் அரிய தொண்டின் பெருமை குன்றிலிட்ட விளக்காக என்றென்றும் ஒளி வீசிச் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். ●●●



# கலைஞர்களின் திக்விஜயம்

தமிழ் நாட்டில் நாடகக் கலைக்குப் புத்துயிரும் புது மணமும் ஊட்டியவர்கள் டி.கே.எஸ். சகோதரர்கள். அவர்களுடைய இடைவிடாத தொண்டினால்தான் தமிழ் நாட்டில் நாடகக்காரர்கள் நாடகக் கலைஞர்களாகி இன்றைய தினம் சமூகத்தில் மிக உயர்ந்த நிலைக்கு வந்திருக்கிறார்கள். படித்தவரும் பாமரரும் பார்த்துக் களிக்கும் முறையில் நாடகத்தின் தரம் குறையாமல், தமிழ் நாட்டின் பண்பு கெடாமல் புதுப் புது நாடகங்களை அரங்கேற்றி வெற்றி கொண்ட ஒப்பற்ற நாடகக் கலைஞர்கள் டி. கே. எஸ். சகோதரர்கள். இன்றைய தினம் தமிழ்நாட்டில், ஏன்? பாரத நாட்டிலேயே நாடகக் கலையில் அவர்களுக்கு ஈடாக யாரையுமே ஒப்பிட்டுக்கூற முடியாது என்று துணிந்து கூறலாம்.

பணம் சம்பாதிப்பது ஒன்றையே குறியாகக் கொள்ளாமல் நாடகக் கலையை வளர்த்து வரும் டி. கே. எஸ். நாடகக் குழுவினர் சென்ற ஆண்டு ஈழ நாட்டுக்குச் சென்று நமது தமிழ்க்கொடியை ஓங்கிப் பறக்கவிட்டு வந்தனர். இந்த ஆண்டு மலேயாவுக்குச் செல்கின்றனர். புதிதாகச் சுதந்திரம் பெறப் போகும் மலேயாத் தீவில் ஔவையாரும், ராஜராஜனும் இன்னும் எண்ணற்ற தமிழ் நாட்டு வீரர்களும் பவனிவரப் போகின்றனர். தமிழ்நாட்டின் கலைத் தூதுவர்களாக மலேயாவில் மூன்று மாத காலம் சுற்றுப் பிரயாணம் செய்யச் செல்லும் டி. கே. எஸ். சகோதரர்களுக்குச் சென்ற சில வாரங்களாகச் சென்னை நகரில் வழியனுப்பு உபசாரங்கள் நடைபெற்று வருகின்றன. மார்ச் 31வ தேதி தமிழ் எழுத்தாளர் சங்கத்தாரும், கல்கி காரியாலயத்தாரும் சேர்ந்து டி. கே. எஸ். குழுவினருக்கு ஒரு வழியனுப்பு உபசார விருந்து விழா நடத்தினர். இந்த விழா கல்கி பூங்காவில் கோலாகலமாக நடைபெற்றது.

விழாவுக்கு ராஜாஜி அவர்களும், டாக்டர் சேதுப்பிள்ளை அவர்களும் வந்து சிறப்பித்ததுடன் டி. கே. எஸ். குழுவினருக்குப் பாராட்டுரையும் வழங்கினர். பாரத ரத்தினத்தின் ஆசியையும், சொல்லின் செல்வரின் வாழ்த்துரையையும் பெற்று மலேயா செல்லும் டி. கே. எஸ். குழுவினருக்கு வேறு என்ன பக்கத் துணை வேண்டும்? 'நாங்கள் மலேயா செல்வது பொருள் ஈட்டுவதற்காக அல்ல. அங்குள்ள தமிழ் மக்களுக்கு எங்களாலான தொண்டைச் செய்யும் நோக்கத்துடனேயே செல்கிறோம். இதுபோலவே உலகில் பல இடங்களிலும் சென்று வாழ்ந்து வரும் தமிழ் மக்களுக்குத் தொண்டாற்ற வேண்டும் என்பதே எங்கள் விருப்பம். இதற்காக அடுத்த ஆண்டு தென் ஆப்பிரிக்காவுக்குச் செல்லப் போகிறோம்.'—இவ்வாறு விழாவின் முடிவில் திரு டி. கே. ஷண்முகம் கூறியதைச் சபையோர் கரகோஷம் செய்து வரவேற்றனர்.

இந்த வழி அனுப்பு விழாக் காட்சிகள் சிலவற்றை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.

1-10. மலேயா செல்லும் டி. கே. எஸ். நாடகக் கலைஞர்கள் ஐம்பத்தோரு பேருக்கும் மலர் மாலைகள் சூட்டியபோது எழுந்த கரகோஷம் மலேயாவுக்கே எட்டியிருக்கும். 2. ராஜாஜி அவர்கள் ''மலேயாவில் உள்ள அரசியல் சிக்கலில் அகப்பட்டுக் கொள்ளாமல் தமிழ் மக்களுக்கு நல்ல நாடகங்களை நடித்துக் காட்டிவிட்டு வெற்றியுடன் திரும்ப வேண்டும்'' என்று கூறி டி. கே. எஸ். சகோதரர்கள் குழுவினருக்கு ஆசி வழங்குகிறார். 3. தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் காரியதரிசி அழ. வள்ளியப்பா எழுத்தாளர் சார்பாகவும், கல்கி காரியாலயத்தினர் சார்பாகவும் கலைஞர்களுக்கு நன்றி கூறுகிறார். 4. டாக்டர் சேதுப்பிள்ளை வாழ்த்துரை அளிக்கிறார். 5. முன்னாளில் நாடகமேடையில் பிரசித்திபெற்று விளங்கிய திரு எஸ். ஜி. செல்லப்பாவின் புதல்வி குமாரி கோமதி டி. கே. எஸ். குழுவினர்மீது பாமாலை சூட்டுகிறார். 6. விருந்துக்கு வந்திருந்த தமிழ் எழுத்தாளப் பெண்மணிகள். 7. டி. கே. எஸ். குழுவின் ஆஸ்தான கவிஞர் திரு ஆறுமுகனார் இயற்றிய பாமாலையைத் திரு திரிலோக சீதாராம் பாடி அரங்கேற்றுகிறார். 8. திரு சாமி சிதம்பரனார் நல்லுரை நவில்கிறார். 9. தமிழ் எழுத்தாளர் சங்கப் பொக்கிஷதாரரான திரு டி. கே. ஷண்முகத்துக்கும், அவர் குழுவினருக்கும் அவர்களுடன் செல்லும் தமிழ் எழுத்தாளர் செயற் குழு உறுப்பினரான 'புத்தனேரி' சுப்பிரமணியத்துக்கும் தமிழ் எழுத்தாளர் சங்க உப தலைவர் திரு ஏ. ஜி. வேங்கடாச்சாரி பாராட்டுரை வழங்குகிறார். 11. தமக்கும் தம் குழுவினருக்கும் அளித்த உற்சாகமான பாராட்டுதலுக்கு, திரு டி. கே. ஷண்முகம் நன்றி கூறுகிறார்.

இலக்கியச் செல்வம்-24

# அந்தி வந்தது

அந்தி வந்தது. அதில் என்ன அதிசயம், தினந்தோறுந்தான் வருகிறது. 'இல்லை, தம்பி, கொஞ்சம் நன்றாகப் பார். வழக்கம்போல, ஒவ்வொரு நாளும் வருகிற மாலைப் பொழுதாகவா இது தோன்றுகிறது? மேற்கு வானச் செந்தீ, வானத்தின் மற்றைய பகுதிகளையும், வையம் முழுவதையும் கவித்துக் கொள்ளும் இருள், புதுமலர் மணத்தைத் தாங்கி அங்கும் இங்கும் அலையும் தென்றல்... ஆனால்? இரு இது அந்தி இல்லை, பிரும்மாண்டமான கறுப்பு உடலும், நெருப்பாகச் சுடரும் செம்பட்டை மயிரும், எங்கும் சுழல்கின்ற பாசக் கயிறும் உடைய யமன் அல்லவா வருகிறான்? ஐயோ, கிளி போன்ற மென்மையான இந்தச் சீதை என்ன செய்வாளோ தெரியவில்லை. அவள் நெஞ்சிலே அனலைக் கொட்டிக் கொண்டு அல்லவா அந்தி என்னும் இந்தக் காலன் நிற்கிறான்?' இப்படியாகப் பேசுகிறார் கம்பர்.



**விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்**
**எரிசுடர்ச் செக்கரும் இருளும் காட்டலால்**
**அரியவட்கு அனல் தரும் அந்தி மாலையாம்**
**கருநிறச் செம்மயிர்க் காலன் தோன்றினான்**

[விரிமலர் - விரிகின்ற மலர்; பாசம்-கயிறு. கயிறு - யமனுடைய ஆயுதம்; எரி - தீ; செக்கர்-அந்திச் செவ்வானம்; அரியவட்கு - கிளி போன்ற பெண்ணுக்கு; அரி - கிளி; காலன் - யமன்]

'அரியவட்கு' என்று சீதையை ஒரு கிளியாகக் கண்டார் கம்பர். அருமை

பேராசிரியர்
அ. சீநிவாசராகவன்

யைப் பார்த்தீர்களா? மென்மையே உருவான இந்தப் பெண் கிளி, உலக மெங்கும் பரந்து நிற்கும் அந்தி என்னும் காலனுடைய படையெடுப்பை எப்படித் தாங்கப் போகிறது?

காலனாவது, படையெடுப்பாவது. வெறும் அந்திப் பொழுதுதானே! கொஞ்சம் இருங்கள். ரசாயனம் உங்களுக்குத் தெரிந்திருக்குமே? செம்பையும் கந்தகத்தையும் சேர்த்துச் சூடேற்றினால் இரண்டும் கலந்த புதிய பொருள் ஒன்று தோன்றும். இது ரசாயன உலகச் செய்தி. கவிதை உலகிலும் இது போல நடப்பதுண்டு. காதல் நிரம்பிய உள்ளம், பிரிவினால் வருந்தி, எப்போது காதலனை அடைவோம் என்று ஏங்கித் துடிக்கின்ற பெண் உள்ளம் — இது ஒரு பொருள். செவ்வானமும் இருளுமாய்த் தென்றல் வீச வருகின்ற மாலைப் பொழுது — இது மற்றொரு பொருள்.

இவ்விரு பொருள்களும் கவிஞனுடைய கற்பனை என்னும் தீயிலே ஒன்று சேர்கின்ற பொழுது, அந்தி காலனாக மாறுகிறது. 'அந்திமாலையாம் காலன்' என்ற புதுப் பொருள் கிடைக்கிறது. மனித உள்ளத்து உணர்ச்சிகள் இயற்கைக் காட்சியின் மேல் வீசுகின்ற பொழுது, இப்படி எத்தனையோ புதுமைகள் உதயமாகின்றன.

கம்பர் பேசிய போது, காலனாகத் தோன்றிய அந்தி, காவியப் பாத்திரமாகிய சீதை பேசும்போது, வேறொரு வடிவம் எடுக்கிறது. எங்கும் இருள் விழுந்து விட்டது வானத்தில், மேற்கே மாத்திரம், அஸ்தமன நெருப்பு இன்னும் அணையவில்லை. நட்சத்திரங்கள் ஒன்றிரண்டாக அங்கங்கே பளிச்சிடுகின்றன. அந்தியின் பெருமூச்சாகப் புறப்படுகிறது தென்றல். இதையெல்லாம் பார்த்துக் கொண்டு நிற்கிறாள் சீதை. அந்திப் பொழுது, இடத்தை முழுதும் தன் உடலால் வளைத்துக் கொண்டு நிமிரும் பயங்கரமான கரும் பாம்பாக அவளுக்குத் தோன்றுகிறது. ஆமாம், இருள்தான் பாம்பின் உடல், நட்சத்திரங்கள் பாம்பின் கோரைப் பற்கள், தென்றல் அதன் மூச்சு, செவ்வானம் அதன் விஷப்பை பொருந்திய வாய். அந்தி என்னும் இந்த நச்சரவத்தைப் பார்த்து, 'ஏன் என்னை வளைத்துக் கொண்டு வதைக்கிறாய்?' என்று கேட்கிறாள்:

மைவான் நிறத்து மீன் எயிற்று வாடை
உயிர்ப்பின் வளர் செக்கர்ப்
பைவாய் அந்திப் பட அரவே என்னை
வளைத்துப் பகைத்தியால்!

[மை-இருள்; மீன்-நட்சத்திரம்; எயிற்று-பல் உடைய; எயிறு-பல்; வாடை-காற்று; உயிர்ப்பு-மூச்சு; பைவாய்-பை உடைய வாய்; பட அரவே-படத்தோடு கூடிய பாம்பே; என்னை-என்ன காரணம்.]

ஏன் இப்படிக் கேட்க மாட்டாள்? அவள் மனநிலை, அந்தியை விஷப்பாம்பாக உருமாற்றியது. அதையும் சொல்லி விடுகிறாள்:

எய்வான் ஒருவன், கை ஓயான், உயிரும்
ஒன்றே இனி இல்லை
உய்வான் உற இப்பழி பூண என்னோடு
உனக்குப் பகை உண்டோ!

[எய்வான்-(அம்புகளை) எய்கின்றவன்; ஒருவன்-ஒப்பற்ற ஓர் வீரன், இங்கே, மன்மதன்; ஓயான்-ஓயமாட்டான்; உய்வான் உற-தப்பிப் பிழைக்கலாம் என்று (நான்) இருக்க; பூண-அணிவதற்கு, ஏற்பதற்கு.]

'மன்மதன் என்பவன் ஒப்பற்ற தனி வீரன்தான். இல்லாவிட்டால் கை ஓயாமல் ஒரு பெண்மேல் அம்புகளை ஏவிக் கொண்டிருப்பானா? என்னிடம் உள்ளது ஒரே ஒரு உயிர்தான். அதை அவன் கவர்ந்து விட்டால், உனக்குக் கவர, வேறொரு உயிர் என்னிடம் இல்லை. மன்மதனிடமிருந்து தப்பிப் பிழைக்க மன்றாடிக் கொண்டிருக்கிறேன். இந்தச் சமயத்தில், பெண் கொலையில் பங்கு கொள்ள நீயும் வந்தாயா, அந்தியே? என்மேல் உனக்கு என்ன அப்படி ஒரு பகைமை?' இப்படிப் பேசுகின்ற பெண் ஒருத்திக்குத் தன்னை விழுங்க வரும் கொடிய விஷப்பாம்பாக அந்திப் பொழுது ஏன் தோன்றாது?

சீதையைப் போலவே விரகதாபத்தில் துடிக்கும் வேறொரு பெண்ணை இளங்கோவடிகளின் காவியத்தில் சந்திக்கிறோம். அவளுக்கு மாலைப் பொழுது எப்படித் தோன்றுகிறது தெரியுமா? அப்போதுதான் கதிரவன் மறைந்தான். உடனே எங்கும் கவிந்த இருள், உலகம் முழுவதையும் தன் உடம்பால் நிறைத்துக் கொண்டு படுத்துப் புரளுகின்ற பெரிய பூதமொன்றாகத் தோன்றுகிறது. 'இந்த பூதம்தான் சூரியன் என்ற சிவந்த பழத்தை விழுங்கியது. விழுங்கி விட்டு, இதோ சந்திரன் என்ற வெண் கொட்டையைக் கீழ் வானத்தில் துப்பி விட்டது. கதிரவனையே விழுங்கி ஏப்பம் விடுகின்ற இந்த அந்தி என்ற பூதத்துக்கு நான் எந்த மூலை, கடைவாய்க்குக்கூடக் காணமாட்டேன் போலிருக்கிறதே' என்ற குறிப்பு பெண்ணின் பேச்சில் அரும்புகிறது.

அந்தப் பெண், தன் தோழியிடம் பேசிக் கொண்டிருக்கிறாள். 'சூரியன் மறைந்து விட்டானே, சூரியன் மறைந்து

# தெரியுமா உங்களுக்கு?

சிலர் உருவத்தில் மனிதர்களாக இருந்தாலும், இருதயத்தில் அரக்கர்களாக இருக்கிறார்கள் என்பது ஒரு ஜப்பானிய ஆராய்ச்சியாளரின் சித்தாந்தம். இன்று அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டுகளைப் பரிசோதனை செய்வோர் அத்தகைய கொடிய அரக்கர்கள்தான் என்று அவர் முடிவு கட்டியிருக்கிறார்.

அமெரிக்காவிலிருந்து மின்சார விசைமூலம் பிரயோகிக்கப்பட்ட பயங்கர குண்டு தெறிகெட்டும் திசை மாறியும் தன்னிச்சையாக உலகைச் சுற்றிக் கொண்டிருக்கிறது என்று செய்திகள் கூறுகின்றன அல்லவா? ஆனால், இதுவரை வல்லரசுகள் பரிசோதனை செய்யப்பட்ட அணுகுண்டிலிருந்து எழும்பிய விஷப்புகை அட்லாண்டிக் மகா சமுத்திரம், ஐரோப்பா, ருஷ்யா, சீனா முதலிய பிரதேசங்களைக் கடந்து, ஏப்ரல் 14-ந் தேதி ஜப்பான் தலைநகர் டோக்கியோவுக்குச் சென்றதாம்!

அந்தப் புகை சென்ற பிரதேசங்களில் எங்கெங்கு மழை பெய்ததோ அங்கெல்லாம் விஷக்கதிர் மழை பெய்ததை அவர் கண்டு பிடித்துக் கூறியுள்ளார். அந்தப் புகை தினசரி ஆயிரம் மைல்கள் வீதம் 16,000 மைல் தூரம் வளைந்து வளைந்து பிரயாணம் செய்து, ஏப்ரல் மாதம் 14-ந் தேதி ஜப்பானை அடைந்ததாம். அன்று ஜப்பானில் விஷக்கதிர் மழை பெய்ததிலிருந்தே அந்த உண்மை தெரிந்தது.

அந்தப் புகை ஏப்ரல் 6-ந் தேதி பிரான்ஸ் தேசத்தின் வழியாகச் சென்றபோது அங்கு கதிரியக்க மழைபெய்ததைப் பிரெஞ்சு விஞ்ஞானிகள் கண்டுபிடித்தனர். மேற்படி அணுகுண்டு விஷப்புகை சென்ற பாதையையே மேலேயுள்ள படம் காட்டுகிறது. ஜப்பானிலிருந்து அந்த விஷப்புகை இன்னும் எங்கெல்லாம் சென்றதோ! எல்லையில்லாத ஆகாயத்தையும் ஜலத்தையும் விஷமாக்கும் ராக்ஷச குண்டுகளிலிருந்து மனித வர்க்கம் காப்பாற்றப்பட வேண்டுமானால் மனிதஉருவத்தில் நடமாடும் அரக்கர்களின் மனம் மாறவேண்டும்!

ராக்ஷச குண்டுகளிலிருந்து கிளம்பிய மின்சார விஷப்புகையும் உலகைச் சுற்றிக் கொண்டிருப்பதாக டாக்டர் யாசுவோ மியாகி என்ற ஜப்பான் ஆராய்ச்சி நிபுணர் கூறுகிறார்.

1955-ம்ஆண்டில் அமெரிக்காவைச்சேர்ந்த நிவாடா மாகாணத்தில் அமெரிக்க சர்க்கார் பரிசோதனை செய்த அணுகுண்டின் விஷப்புகை எழும்பி உலகத்தைச் சுற்றிக் கொண்டு எந்தெந்தக் கண்டத்தின் வழியாகச் சென்றது என்பதை டாக்டர் மியாகி ஆராய்ச்சி பூர்வமாகக் கணக்கு எடுத்திருக்கிறார்.

அந்த வருஷம் மார்ச்சு மாதம் 29-ந் தேதி நிவாடா பாலைவனத்தில் பரிசோதனை செய்

விட்டானே, இருள் வந்து விட்டதே' என்ற வேதனைப் பரபரப்போடு அவள் பேச்சுத் தொடங்குகிறது:

**சந்திரன் மறைந்தனனே, கார் இருள்**
**பரந்ததுவே**
**எதிர் மலர் புரை உன் கண் எவ்வநீர்**
**உகுத்தனவே**

*[எதிர்மலர் - அழகுடைய மலர்; புரை - ஒக்கின்ற; உண்கண் - மை உண்டு இருண்ட கண்கள்; எவ்வநீர் - துன்பக் கண்ணீர்; உகுத்தனவே - சொரிந்தனவே.]*

'ஆமடி, அழகுடைய இருண்ட கண்தானே. அப்படித்தான் ஆயிரம் முறை அவர் சொன்னார். இப்போது இந்தக் கண் செய்கிற காரியத்தைப் பார்த்தாய் அல்லவா? வேதனைக் கண்ணீர் வடிக்கிறது. இந்தக் கண்ணின் அழகை இப்போதல்லவா அவர் பார்க்க வேண்டும்? நீ பார்த்து என்ன செய்ய? இப்போது உதயமாகிறதே அந்தச் சந்திரன்மாதிரிதான் இருக்கிறது உன் முகம். அந்தச் சந்திரனுக்குத் தெரியுமா என் வேதனை, உனக்குந்தான் தெரியுமா? தெரிந்தால் அவன் நெருப்பைச் சொரிவானா? நீயுந்தான் மலர்ந்த முகத்தோடு இருப்பாயா? நீங்கள் என்ன செய்வீர்கள்?

உங்களால் என்ன உதவி செய்துவிட முடியும்?' என்னை இப்படித் தவிக்க விட்டுப் போனாரே, அவர் இருந்தால் கதிரவனை விழுங்கி, இப்போது என்னை விழுங்க வரும் மாலைப் பொழுது என்ற இந்த பூதத்திலிருந்து தப்பலாம். வருவாரா? அந்திப் பொழுது என்பது அவர் போயிருக்கும் நாட்டில் கிடையாது போல் இருக்கிறது. ஆம், அப்படித்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்தப் பொழுதின் கொடுமையை அங்கே கண்டு, என்னைக் காப்பதற்கு ஓடோடி வந்திருக்கமாட்டாரா? இத்தனையும் அந்தப் பெண் வெளிப்படையாகச் சொல்லவில்லை. பிரிவு என்னும் நிலையில், அந்திப் பொழுது தரும் துயரத்தில், அவள் குமுறிக் குமுறித் தோழியிடம் சொல்லும் சொற்களின் அடி ஆழத்தில், இத்தனை உணர்ச்சிகளும் சுழல்கின்றன.

**கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே**
**எதிர்மலர் புரைஉண்கண் எல்லிநீர் உகுத்தனவே**
**புதுமதி புரைமுகத்தாய் போனார் நாட்டு**
**உளதாங் கொல்**
**மதி உமிழ்ந்து கதிர் விழுங்கி வந்த இம்**
**மருண்மாலை**

*[புதுமதி-புதிய சந்திரன்; நாட்டு-நாட்டில்; உளதாங்கொல்-இருக்கிறதா. இருக்கிறதோ என்னவோ; கதிர்-சூரியன்.]*

அற்புதமான பாடல் இது. இங்கே வருகின்ற பெண் அந்திப் பொழுதை ஒரு பூதமாக்கினாள் என்றால், வேறொருத்தி 'அந்திப் பொழுதாமே அந்திப் பொழுது! அப்படி ஒன்று இருக்கவா செய்கிறது?' என்று தன் விரக வேதனையால் மாலைப் பொழுதையே அழித்து விடுகிறாள். 'குறுந்தொகை' என்ற பழந்தமிழ் காதற் பாடல் தொகுப்பில், ஒரு பாட்டில் இவளை நாம் பார்க்கிறோம். அவளும் தன் தோழியிடந்தான் பேசிக்கொண்டிருக்கிறாள். 'சூரியன் மறைகிறான், மேல் வானம் சிவக்கிறது, இருள் வருகிறது, முல்லை மலர்கிறது. அதெல்லாம் சரிதான். அதற்காக இந்தப் பொழுதை மாலை என்று பெயரிட்டு, இதை மற்றையப் பொழுதோடு வேறுபடுத்தி, தனித்து நிறுத்திப் பேச வேண்டுமா? அப்படிப் பேசுகின்றவர்கள் ஏதோ மயக்கத்தில் உளறுகிறார்கள், அவ்வளவுதான்.

**கடர் செல் வானம் சேப்ப, படர்கூர்ந்து**
**எல் உறு பொழுதில் முல்லை மலரும்**
**மாலை என்மனார் மயங்கியோரே**

*[கடர் செல்வானம் - கதிரவன் விட்டுப் போகின்ற வானம்; சேப்ப-சிவப்ப; படர் கூர்ந்து - துன்பம் திரண்டு வர; எல்உறு பொழுது - இரவு வரும் பொழுது; என்மனார் - என்று சொல்கின்றவர்; மயங்கியோரே - மயக்கம் உடையவர்களே.]*

தோழி பார்த்தாள். 'இதேதடா இது, நாயகனைப் பிரிந்து இருக்கும் வருத்தத்தில் இந்தப் பெண்ணுக்கு ஏதாவது பைத்தியம் பிடித்து விட்டதா என்ன? மாலையை மாலை என்று பேசுகின்றவர்கள் பைத்தியக்காரர்களாமே! பைத்தியம் யாருக்கு, அவர்களுக்கா, இவளுக்கா?' என்று தோழி எண்ணினாளோ என்னவோ, அந்தப் பெண் தன் முடிவுக்குச் சமாதானம் கூறுகிறாள், கேட்போம்.

'நெருப்பிலே சின்ன நெருப்பு, பெரிய நெருப்பு என்று உண்டா? நாள் முழுவதுந்தான் பிரிவு என்ற தீ என் நெஞ்சை வறுத்துக் கொண்டிருக்கிறதே! கோழி கூவும் விடியற்காலத்தில் என்ன வாழ்ந்தது? அப்போதும் விரகதாபத்தில் என் உள்ளம் வேகிறது. பிறகு பகல் எல்லாம் அதே கதை. இப்போது மாலைப் பொழுது வந்த பிறகுதானா இந்த நெஞ்சம், பிரிவு நெருப்பில் விழுந்து துடிக்கிறது, இல்லையே? எப்போதும் ஓயாத வேதனைதானே நான் காண்பது? இந்த அழகிலே மாலைப் பொழுதிற்கு என்ன தனி இடம், தனிப் பெயர், தனி மகத்துவம் வேண்டிக் கிடக்கிறது? மாலைப் பொழுதாம்,

விட்டி, விடு. அது பேதைமைப் பேச்சு. துணைவனைப் பிரிந்து துடிப்பவர்க்கு நாள் எல்லாம் மாலைப் பொழுதுதான். மாலைப் பொழுது என்ற ஒன்று தனியாகக் கிடையாது. நிலையெல்லாம் ஒரே துன்பந்தான்.

கடர் செல் வானம் சேப்பப் படர்கூர்ந்து
எல் உறு பொழுதில் முல்லை மலரும்
மாலை என்மனார் மயங்கியோரே.
குடுமிக் கோழி நெடுநகர் இயம்பும்
பெரும்புலர் விடியலும் மாலை
பகலும் மாலை துணையிலோர்க்கே

*[குடுமிக் கோழி-கொண்டையை உடைய சேவல்; இயம்பும்-கூவி அறிவிக்கும்; பெரும் புலர் விடியல்-நீண்ட இரவு கழியும் விடியற் காலம். அதிகாலை; நெடுநகர்-பரந்த நகரத்தில்.]*

பெண் உள்ளத்தை எரிக்கும் விரக நெருப்பு, இங்கே மாலைப் பொழுது என்ற தனிப் பொழுதை எரித்து விடுகிறது; இல்லை, பொழுதை யெல்லாம் மாலைப் பொழுதாகவே விடுகிறது. இதுவே, அந்தியைக் காலனாகவும், பாம்பாகவும், பூதமாகவும் மாற்றுகிறது. மனித உணர்ச்சி இயற்கைப் பொருளில் படிகின்ற போது, கவிதை ரசாயனம் நிகழும் போது, என்ன அதிசயந்தான் நடைபெறுது! (தொடரும்)




CAUVERY
SUPER
SOAP

# மியாவ்! மியாவ்! பூனையார்

பாலர் மலர்

மியாவ் மியாவ் பூனையார்
மீசைக் காரப் பூனையார்.

ஆள் இல்லாத வேளையில்
அடுக்களைக்குள் செல்லுவார்.
பால் இருக்கும் சட்டியைப்
பார்த்துக் காலி பண்ணுவார்.

மியாவ் மியாவ் பூனையார்
மீசைக் காரப் பூனையார்.

இரவில் எல்லாம் சுற்றுவார்.
எலி பிடித்துத் தின்னுவார்.
பரணில் ஏறிக் கொள்ளுவார்.
படுத்து நன்றாய்த் தூங்குவார்.

மியாவ் மியாவ் பூனையார்
மீசைக் காரப் பூனையார்

மெல்ல மெல்லச் செல்லுவார்
மேலும் கீழும் தாவுவார்.
லொள்லொள் சத்தம் கேட்டதும்
நொடியில் ஓடிப் பதுங்குவார்.

மியாவ் மியாவ் பூனையார்
மீசைக் காரப் பூனையார்.

அழ. வள்ளியப்பா

சாமா

# மிருங்காவதி

சித்திரத் தொடர் கதை

12

1) வேடன் தேவிதத்தனது முகபாவத்தைக் கொண்டே மனக்கருத்தைப் புரிந்து கொண்டான். எனவே தேவி தத்தனுக்கு நம்பிக்கை உண்டாகும் வகையில் பேசினான்:




3) "பிறகுதான் எனக்குப் புலிந்தனின் நினைவு வந்தது. அவன் எங்கள் கிராம வாசி. கொடியவன். மிருங்காவதியைப் பார்த்து விட்டானானால் என்ன ஆகும் என்ற பயம் என் மனத்தில் குடிகொண்டது. எனவே, இரவோடு இரவாகவே மிருங்காவதியை அழைத்துக்கொண்டு மதுரையை அடுத்த நாகஸ்தலம் என்னும் இடத்துக்குச் சென்றேன்."



4) "அங்கே விசுவதத்தர் என்னும் மறையவர் இருக்கிறார். அவர் எனக்கு மிகவும் வேண்டியவர். அவரிடம் மிருங்காவதியை ஒப்படைத்து விட்டு, எப்படியாவது உன்னைத் தேடிக் கண்டு பிடித்து அனுப்பி வைப்பதாகக் கூறி வந்திருக்கிறேன்."



5) நீ எப்படியும் மிருங்காவதியைத் தேடி இந்த மரத்தடிக்கு வருவாய் என்று தெரியும். அது மட்டும் அல்ல; நீ பகைவனிடம் அகப்பட்டுக் கொண்டது, அவன் மகளைக் காந்தர்வ மணம் புரிந்து கொண்டது கூடத் தெரியும். நீண்டுதலையாகி இவ்விடம் வந்ததற்குக் கூட நான்தான் காரணம். அந்தக் கதையெல்லாம் இப்பொழுது எதற்கு? நீ உடனே போய் மிருங்காவதியைப் பார்!



6) வேடனிடமிருந்து விடை பெற்றுக்கொண்ட தேவ தத்தன் நாகஸ்தலத்தை நோக்கி விரைந்தான். வேடன் சொன்னபடி விசுவதத்தரைச் சந்தித்துத் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டு மிருங்காவதியைப் பற்றி விசாரித்தான்.



7) விசுவதத்தர் கூறினார்:

இந்தக் கிராமம் அதிக ஜன நடமாட்டம் இல்லாதது. கொள்ளைக்காரர்கள் பயம் நிறைந்தது. மிருங்காவதி மதுரையில் இருக்கிறாள்; பத்திரமாகவே இருக்கிறாள். அவளை இந்நாட்டு அமைச்சரின் பாதுகாப்பில் விட்டிருக்கிறேன். நீர் அவரிடம் சென்று நான் சொன்னதாகக் கூறினால், உமது மிருங்காவதியைப் பெறலாம்.



8) தேவிதத்தன் உடனே அங்கிருந்து புறப்பட்டு விட்டான். விசுவதத்தர் இளைப்பாறிவிட்டு மறுநாள் போகலாம் என்று எத்தனையோ கூறியும் அவன் கேட்கவில்லை. மிருங்காவதியைப் பார்த்த பின்பே, தனக்கு மனநிம்மதி கிட்டும் என்று கூறிச் சென்று விட்டான்.



9) மதுரைமாநகரை அடைந்த தேவிதத்தன் அருகேயிருந்த நதியில் ஆடை களைந்து வைத்துச் சுத்தம் செய்து நீராடிப் புத்துணர்ச்சியுடன் மிருங்காவதியைப் பார்க்க மந்திரியின் வீட்டிற்குப் போவதென்று முடிவு செய்தான்.



10) ஏரியில் இறங்கிக் குளித்துக் கொண்டிருந்தபொழுது பட்டுத்துணி ஒன்று தண்ணீரில் மிதந்து வந்தது.



11) அதை எடுத்தவனுக்கு ஒரு ஆச்சரியம் காத்து நின்றது. எடுக்கும்போது கனமாக இருந்த அந்தத் துணியின் ஒரு நுனியில் முடிபோட்டிருந்தது. அதைப் பிரித்துப்பார்த்தால் பளபளவென்று மின்னும் ஒரு அட்டிகை இருந்தது



12) அட்டிகையை மிருங்காவதிக்கு அளித்து மகிழலாம் என்ற நினைப்போடு நகரத்துக்குள் நுழைந்தான். அவன் கையில் அட்டிகையைப் பார்த்த நகரத்துக் காவலர்கள் அவனைத் திருடன் என்று எண்ணிச் சிறைப்படுத்திவிட்டார்கள்!

(தொடரும்)






ராஜா

## 2. ரவியின் ஆசை!

ரவி ஏழ் முத்து மாலையைத் தரும்படி தந்தையிடம் கேட்டதும் மால்மா, "இதைப் பற்றி நான் நன்றாக யோசித்துத் தான் ஜமக்காளத்தைக் கலாவிடம் ஒப்படைத்திருக்கிறேன். மந்திர முத்துமாலையின் உதவி இல்லாமல் ஜமக்காளத்தைப் பறக்கச் செய்ய முடியாதல்லவா? முத்து மாலையை நீ அணிந்தால் ஆண்பிள்ளை எதற்காக முத்து மாலை அணியவேண்டும் என்ற எண்ணம் பலருக்கு உண்டாகும். கலா முத்து மாலையை அணிந்து கொண்டால் தான் பொருத்தமாக இருக்கும்!" என்றார். பிறகு ரவியும் கலாவும் புறப்படுவதற்குத் தயாராக நின்று மால்மாவின் உத்தரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது மால்மா, "நீங்கள் தைரியமாகப் புறப்படுவதற்குத் தயாராக இருக்கிறீர்கள். மிக்க மகிழ்ச்சி. நீங்கள் போகும் இடங்களெல்லாம் மந்திரவாதிகளும் ராக்ஷஸர்களும் நிறைய இருப்பார்கள். அவர்களை நீங்கள் சந்திக்க நேரிடும். நீங்கள் அவர்களை நான் கொடுத்திருக்கும் மந்திரப் பொருள்களின் உதவியினால் மாத்திரம் அல்லாமல் உங்கள் புத்தியையும் உபயோகித்துத் தந்திரத்தினாலே வெற்றிபெற வேண்டும். மந்திரத்தோடு தந்திரமும் சேர்ந்தால்தான் பெருமை உண்டாகும். நீங்கள் இருவரும் எக்காரணத்தை முன்னிட்டும் தனியாகப் பிரிந்து போகாதீர்கள். நீங்கள் பல இடங்களுக்கும் போய்ப் பெயரும், புகழும் சம்பாதித்துத் திரும்பி

# பந்து

வாருங்கள். ஆனால் ஒரு நிபந்தனை. நான் உங்களிடம் ஒப்படைத்திருக்கும் பொருள்களுடன் தான் நீங்கள் திரும்பி வரவேண்டும். அதுவுமல்லாமல் ஒருவரை விட்டு ஒருவர் தனியாகப் பிரிந்து வரக்கூடாது" என்று கூறிவிட்டுத் தன் குழந்தைகள் இருவரையும் தழுவிக் கொண்டான்.

"அப்பா, நானும் அண்ணாவும் வெற்றியுடன் திரும்ப வேண்டும் என்று ஆசீர்வதியுங்கள். வழியில் எந்தத் தடை ஏற்பட்டாலும்......" என்று கலா ஏதோ சொல்ல ஆரம்பித்ததும் மால்மா குறுக்கிட்டுப் பேசினான்: "கலா! தடைகள் ஏற்படத்தான் செய்யும். உங்கள் புத்திசாலித் தனத்தினாலும் மனோதைரியத்தினாலும், அவைகளையெல்லாம் வென்று முன்னேறி விடுவீர்கள். முக்கியமாக என் ஜன்ம விரோதி 'கார்கூர்' என்னும் மந்திரவாதியினால்தான் உங்களுக்குப் பல இடைஞ்சல்கள் வழியில் ஏற்படும். அவன் உருவம் பார்க்கப் பயங்கரமானது. நல்ல உயரம், அதற்குத் தகுந்தாற்போலப் பருமன், நீண்ட தாடி, பெரிய மீசை—இவை அவன் ஆஜானுபாகு என்பதை அறிவுறுத்தின. எண்ணெயே படாத அவனது தலைமயிர் செம்பட்டை வர்ணமா யிருக்கும். அவனுக்குத் தனது மந்திர சக்தியினால் தன் உருவத்தை நிமிஷத்துக்கு நிமிஷம் மாற்றிக் கொள்ளும் சக்தி உண்டு. அதைப்போலவே பிறரையும் மாற்றும் சக்தி படைத்தவன். கலா! நீயும் ரவியும் அதைப்பற்றிப் பயப்பட வேண்டாம். உங்கள் கைவசம் முத்து மாலையும், மாயப்பந்தும் இருக்கும்வரையில் உங்கள் உருவத்தை மாற்றும் மந்திரம் ஒன்றும் உங்களிடம் பலிக்காது. அவன் மந்திர ஜமக்காளத்தையும் மாயப்பந்தையும் உங்களிடமிருந்து எவ்விதத்திலும் பெற முயற்சிப்பான். அதற்கு இடம் கொடுக்காமல் உங்கள் சாமர்த்தியத்தினால் அவனுடைய முயற்சி பலிக்கவொட்டாமல் செய்யுங்கள். என்னிடத்திலுள்ள ஒரு அற்புதக் கருவியினால் எனக்கு வேண்டும்பொழுது நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்று தெரிந்து கொள்ளுவேன். ஆனால் நீங்கள் எத்தவித ஆபத்தில் அகப்பட்டாலும் உதவி செய்ய வரமாட்டேன். நீங்களாகவே தான் ஆபத்திலிருந்து தப்பி வரவேண்டும்" என்று கூறிவிட்டு, பிறகு மந்திர ஜமக்காளத்தைக் கீழே விரித்தான். அதில் முதலில் கலா உட்கார்ந்தாள். அவளுக்குப் பின்புறம் ரவியும் வந்து உட்கார்ந்தான். மந்திர முத்து மாலையைக் கலா கழுத்தில் அணிந்து கொண்டாள். பிறகு மெதுவாக ஒரு கையில் முத்து மாலையைக் கொஞ்சம் கொஞ்சமாக மேலே தூக்கினாள். மற்றொரு கையினால் மேற்கு திசையைக் காண்பிக்கும் முத்தைத் தொடவே ஜமக்காளம் விர் என்று மேற்குத் திசையை நோக்கிச் சென்றது. ஜமக்காளம் கண்களிலிருந்து மறையும் வரையிலும் மந்திரவாதி மால்மா பார்த்துக் கொண்டே இருந்தான்.



ஜமக்காளம் மேலே பறக்கப் பறக்க ரவியும் கலாவும் ஆனந்தத்தில் ஆழ்ந்திருந்தார்கள். கலா மந்திர ஜமக்காளத்தைத் தானாகவே பறக்கவிடுவது அதுதான் முதல் தடவை. போதிய அனுபவம் இல்லாததினால் பறக்கும்போது சிலசமயம் ஆபத்துக் குள்ளானவர்களாகக் காணப்பட்டார்கள். ஒருமுறை மேற்கு பக்கமாகப் போய்க் கொண்டிருந்த ஜமக்காளத்தைத் திடீரென்று கிழக்குப் பக்கம் போகும்படி செய்யவே ஜமக்காளம் விர் என்று சுற்றிற்று. மற்றொரு முறை ஜமக்காளம் பறக்கும்பொழுது திடீர் என்று ஞாபக மறதியாகக் கையில் பிடித்துக் கொண்டிருந்த முத்து மாலையைக் கழுத்தில் தொங்க விடவே ஜமக்காளம் வெகு வேகமாகக் கீழ்நோக்கிச் சென்றது. இது மாதிரியான சமயங்களில் ரவியின் உயிருக்கும், கலாவின் உயிருக்கும் ஆபத்து நேரிடும் போல் இருந்தது. அதிர்ஷ்டவசத்தினால் ஜமக்காளத்திலிருந்து கீழே விழாமல் தப்பித்தார்கள். எல்லாவற்றுக்கும்பழக்கம்தானே முக்கியம்? கொஞ்சம் பழக்கப்பட்ட உடனே கலா மிகவும் நிதானமாகவும், ஜாக்கிரதையாகவும் ஜமக்காளத்தைப் பறக்கச் செய்தாள். அதிக உயரம் பறக்காமல் சாதாரண உயரத்திலேயே அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். பறக்கும்போது மரங்கள், குன்றுகள், பறவைகள், மேகங்கள் இவைகளினால் வேகம் தடைப்பட்டன. இருந்தாலும் சாமர்த்தியமாகக் கலா மந்திர ஜமக்காளத்தில் அண்ணாவுடன் பறந்து சென்று கொண்டிருந்தாள்.

அப்பொழுது ரவி, "கலா! ஆகாயத்தைப் பார்த்தால் சற்று நேரத்தில் இருட்டி விடும் போல் இருக்கிறது. நாம் இப்பொழுது எந்தப் பட்டணத்தின் மீது பறந்து சென்று கொண்டிருக்கிறோம் என்பதே நமக்குத் தெரியாது. எந்தப் பட்டணமாக இருந்தால் என்ன? நமக்கு எல்லாம் ஒரே மாதிரிதான். நீ ஜமக்காளத்தைச் சற்றுத் தாழ்த்திப் பறக்க விடு. கீழே இறங்குவதற்கு ஏதாவது தகுதியான இடம் இருக்கிறதா என்று நான் பார்த்துச் சொல்கிறேன்" என்றான்.

கலா மெதுவாக முத்து மாலையைக் கீழே தொங்க விட்டுக் கொண்டே வந்தாள். ஜமக்காளம் தாழ்ந்து பறந்து சென்றது. உடனே ரவி, "கலா! இந்த இடத்திலேயே ஜமக்காளத்தைக் கீழே இறக்கு. இங்கே பெரிய மைதானமாகக் காணப்படுகிறது. மைதானத்தைச் சுற்றிலும் அடர்ந்த தோப்புகள் காணப்படுகின்றன. தோப்பில் சிக்கிக் கொள்ளாமல் ஜாக்கிரதையாக மைதானத்தில் இறங்கு. சமீபத்தில் உள்ள பட்டணத்தில் இரவு தங்கிவிட்டுக் காலையில் எங்கு போகலாம் என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ளலாம்" என்றான்.

மெதுவாக ஜமக்காளத்தைக் கலா கீழே இறக்கினாள். முத்துமாலையைக் கழுத்திலிருந்து கழற்றினாள். உடனே ஜமக்காளம் சாதாரண ஜமக்காளத்தைப் போல ஆயிற்று. இரண்டு பேரும் ஜமக்காளத்தை விட்டு வெளியே வந்தனர். கலா ஜமக்காளத்தைச் சிறியதாக மடித்து, தனது தோளில் மாட்டியிருந்த தோல் பையில் அதை மடித்தபடியே வைத்தாள். முத்து மாலையையும் அந்தப் பையில் போட்டுக் கொண்டாள்.

"இந்தத் திறந்த வெளியிலே சற்று நேரம் உல்லாசமாகக் கழித்து விட்டுப் பிறகு பட்டணத்துக்குள்ளே சென்றால் என்ன?" என்று கலா கேட்டாள்.

"அப்படியே செய்யலாம்" என்று ரவியிடமிருந்து பதில் வந்தது. சற்று நேரம் அங்கிருந்த ஒரு மரத்தடியில் தங்கினார்கள்.

"அண்ணா, அதோ பார்த்தாயா? அந்தப் பெரிய கட்டடம் பெரிய பெண்களின் பள்ளிக்கூடம் போலத் தோற்றமளிக்கிறது. கட்டடத்துக்கு அருகில் பல பெண்கள் பலவிதமான விளையாட்டுகளைக் கூட்டம் கூட்டமாக விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். நீயும் வாயேன். சற்று நேரம் வேடிக்கை பார்த்து விட்டு வரலாம்" என்றாள் கலா.

"பெண்கள் விளையாடும் இடத்துக்கு நான் வரவில்லை. நீ வேணுமானால் சீக்கிரம் போய்ப் பார்த்து விட்டுவா. நான் இங்கேயே இருக்கிறேன். தோளிலிருந்து ஜமக்காளப் பையை யாதொரு காரணத்தை முன்னிட்டும் எடுக்காதே. சீக்கிரம் வந்துவிடு" என்று ரவி சொன்னவுடன் கலா சந்தோஷத்துடன் குதித்துக் கொண்டு பெண்கள் விளையாடும் இடத்தை நோக்கிச் சென்றாள்.

தனிமையாக ரவி ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டே மரத்தில் சாய்ந்தபடி யோசனை செய்து கொண்டிருந்தான். விதம் விதமான பறவைகள் ஆகாயத்தில் பறந்து செல்லுவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. 'அப்பா கலாவுக்கு ஒரு ஜமக்காளத்தையும், ஒரு மந்திர முத்துமாலையும் கொடுத்தார். எனக்கு ஒரு மாயப் பந்தைக் கொடுத்தார். அப்பா சொல்லியபடி முத்து மாலையின் சக்தியையும், ஜமக்காளத்தின் சக்தியையும் நேரில் பார்த்தாகி விட்டது. ஆனால் அந்த மாயப் பந்தின் சக்தியைப் பரிசோதிக்கவில்லை. இப்போதே அப்பா கூறியபடி நடக்கிறதா என்று அதைப் பரிசோதித்துப் பார்த்தால் என்ன?' என்று நினைத்தான் ரவி. (தொடரும்)






VATNI
INDIA'S POPULAR SOAP
வத்னி
VATNI








**ஆங்கில இலக்கண வாத்தியார்:-** ராமு! மூட் (Mood) எத்தனை வகைப்படும்?

**ராமு:-** கதவை மூடு, வாயை மூடு.........

**வாத்தியார்:-** ? ? ? ? ?

★

**இன்று**



கும்மி டான்ஸ் நடைபெறும்
கும்மிக்கு நிம்மி பாட்டுப்
பாடுவார்.
நிம்மிக்குத் தொண்டை கம்மி
இருப்பதால்
இம்மி அளவும் பாடமுடியாது
ஆகையால்
பொம்மி பாட்டுப் பாடுவார்.

—இ. ரா. கோ

★

**பாக்கு வியாபாரி:-** (மற்றவரைப் பார்த்து) இப்போ என் வியாபாரம் இருக்கிற நிலையில் நான் மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் தவிக்கிறேன்!

★

**உபாத்தியாயர்:-** டேய் கிட்டு, ஒரு மரக்காலுக்கு எத்தனை படி?

**கிட்டு:-** பன்னிரண்டு படி, ஸார்.

**உபாத்தியாயர்:-** என்னடா அளக்கிறே?

★



**பால்காரன்:-** நான் வெளுத்ததெல்லாம் பால் என்று நினைக்கிறவன் இல்லீங்க.

**வாடிக்கைக்காரன்:-** நீ வாடிக்கையாகப் பால் கொடுக்க ஆரம்பித்ததிலிருந்து நானும் அப்படி நினைக்கிறதில்லே!

— ஆர். சிவன்

★

**நண்பர்:—** என்ன ஸார்! ஜோஸியப் பகுதியை இரண்டாவது காலத்திலேயிருந்து ஆறாவது காலத்துக்கு மாற்றி விட்டீங்களே?

**பத்திரிகை ஆசிரியர்:—** காலம் மாறிப் போச்சு, சார்!

—கமலா

★

**விஞ்ஞான ஆசிரியர் :-** சடுங்காரத்துக்கு ஓர் உதாரணம் கூறு.

**மாணவன் :-** உபகாரம்.

★

**கணித ஆசிரியர்:-** 120 டிகிரி உள்ள கோணம் என்ன கோணம்?

**மாணவன்:-** கும்பகோணம். -என். எஸ். என்.

"ஆமாம்! பையனுக்கு மூன்றுகால் சைக்கிள் வாங்கிக் கொடுத்தால் அவனுடைய விஷமம் குறைந்து விடுமல்லவா?"

"அவன் விஷமம் பல தெருக்களுக்கும் பரவி விடும்!"

★

வானத்தில் இரண்டு காகங்கள் பறந்து கொண்டிருந்தன. அவற்றுக்கு மேலாக ஒரு ஜெட் விமானம் வேகமாகப் பறந்து சென்றது. விமானத்திலிருந்து வந்த புகைச் சுருள்களைக் கண்ணுற்ற இரு காகங்களும் என்னவென்று பார்க்க விரைந்தன. அவற்றால் விமானத்தின் வேகத்தில் போக முடியவில்லை.



"ஆமாம், இது இத்தனை அவசரமாகப் போவானேன்?" என்று கேட்டது ஒரு காகம் தன் கூட்டாளியைப் பார்த்து.

"நீ ஒரு படு முட்டாள். உன்னுடைய வாலிலும் தீப்பிடித்துக் கொண்டால், நீ இப்படி ஓடாமல் வேறு எப்படி ஓடுவாயாம்?" என்று கேட்டது இரண்டாவது காகம்.

★

கணக்கு வாத்தியார் வகுப்பிலிருந்து சிறிது நேரம் வெளியே சென்று விட்டு வந்தார். அவர் திரும்பி வந்த பொழுது வகுப்பில் எவ்வகைச் சத்தமும் இல்லாதபடி அன்று ஆழ்ந்த



மௌனம் நிலவியிருந்தது. கணக்கு வாத்தியாருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

"எப்படி இந்த வகுப்பில் மௌனமாகப் பிள்ளைகள் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்!" என்று முணுமுணுத்தார் ஆசிரியர்.

"சார்! நீங்கள் வெளியே போய் விட்டுத் திரும்பி வரும் பொழுது நாங்கள் மௌனமான இருந்தால் மூர்ச்சை போட்டு விழுந்து விடுவதாகச் சொன்னீர்களே! கணக்கிலிருந்து தப்பலாம் என்று பார்த்தால் கடைசியில் இப்படி ஏமாற்றி விட்டீர்களே!"

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

74

பிறர் நன்மைக்காகச் சேவை செய்யும் பக்தனுடைய இதயமே ஆண்டவன் பிரியப்படும் கோயில். அவனே தேடி வருவான். "அபூபென் ஆதம்" அத்தகைய ஒரு பக்தன். அவன் ஆடம்பரமின்றி ஏழைகளுக்குப் பணி செய்து வந்தான். அதனால் தேவலோகத்தில் வைத்திருந்த பட்டியலில் முதல் ஸ்தானம் பெற்றான்.

துன்பமும் துயரமும் அடைந்து கஷ்டப் படுகிறவர்களுக்கு உதவ வேண்டும். ஏழைகளுக்கும் முன்னேற வசதியில்லாதவர்களுக்கும் உதவ வேண்டும். உடலையும் உள்ளத்தையும் செலுத்தி எல்லாவிதத்திலும் உதவினால் தான் ஒருவன் பக்தனாவான். ஏழைகளுக்கென்று நால் நூற்கவுப் கூட இஷ்டமில்லாமல் சமாதானங்கள் சொல்லிச் சும்மா யிருப்பவனுக்குச் சேவை என்பதன் பொருள் தெரியாது. தானும் நூற்று, ஏழைகளுக்கு வழிகாட்டி அவர்களையும் நூற்கச் செய்கிறவன் தெய்வத்துக்குப் பணி செய்கிறவனாவான். 'புஷ்பம் பழம் இலை எதையேனும் பக்தியுடன் எனக்குத் தந்தால் போதும், அவன் எனக்கு மிகப் பிரியமானவன்' என்று கண்ணன் கீதையில் சொல்லி யிருக்கிறான். நீசர்கள் என்று கருதப்படுகிறவர்கள் இருக்கும் சேரியே ஆண்டவனுக்குப் பிரியமான க்ஷேத்திரம். அத்தகைய சேரியிலிருப்பவர்களுக்காக நூல் நூற்றேமானால் அதுவே பெரிய ஜபமும் பூஜையும் வேள்வியுமாகும்.

யங் இந்தியா, 24-9-25

"பூஜையில் செலவழிக்கும் காலத்தை ஏழைகளின் பணியில் செலவிடுதல் நலமல்லவா? சமூகத்துக்கு உண்மையில் சேவை செய்கிறவனுக்குப் பூஜையும் தெய்வ வழிபாடும் வேண்டியதில்லை, அல்லவா?" என்று ஒருவர் கேட்டார்.

நான் சொன்ன விடை: இந்தக் கேள்விகளுக்குக் காரணம் நாஸ்திகமும் சோம்பேறித்தனமும் என்று எண்ணுகிறேன். எந்தச் சிறந்த கர்மயோகியும் பூஜையையும் பக்தி செலுத்துவதையும் விடுவதில்லை. பிறருக்குச் சேவை செய்வதே பூஜையாகும். அவர்கள் பாடல்கள் பாடவேண்டிய அவசியமுமில்லை என்பது உண்மை. ஆயினும் பஜனைக் கூட்டம், பூஜை முதலியவை உண்மையான சேவைக்கு உதவுகின்றன. உள்ளத்தில் ஆண்டவனுடைய நினைவை நிறுத்தப் பயன் படுகின்றன.

ஹரிஜன், 13-10-46

ஆண்டவனை நினைவில் வைத்து அவனுக்கென்று அர்ப்பணம் செய்யப்பட்ட எந்தச் சிறிய பணியும் பெரிய பணியே யாகும். அந்த முறையில் செய்யப்பட்ட தொழில்கள் எல்லாம் சமமேன்மைபெறும். ஆண்டவன் பணியாக மலத்தையும் அசுத்தத்தையும் கூட்டிப் பெருக்குகிறவனுடைய பணியும், ஒரு அரசன் பகவானை எண்ணித் தன்னுடைய செல்வத்தை ஈசனுக்குச் சேர்ந்த செல்வமாக எண்ணி நியாயமாக வழங்கினால் அந்தப் பணியும் சமமே யாகும். ஒன்றுக் கொன்று குறைந்ததல்ல.

யங் இந்தியா, 25-11-26

தினமும் ஒரு மணி நேரம் ஏழைக் கூலிகள் செய்ய வேண்டிய வேலையை நாம் செய்தோமானால் அதைவிட மேன்மையான தேசத்தொண்டு இல்லை என்பேன். அத்தகைய வேள்விப் பணியினால் நம் நாட்டிலுள்ள ஏழைகளோடு நாமும் ஒன்று பட்டு, அவர்கள் மூலம் உலக சமுதாயத்துடன் ஐக்கியப்படுவோம். ஏழைகள் செய்யும் கூலி வேலையை ஆண்டவனுக்கென்று நாம் செய்தோமானால் அதைவிடச் சிறந்த பூஜை வேறில்லை.

யங் இந்தியா, 20-10-21

உடல் உழைப்பின் சிறப்பைப் பற்றி எவ்வளவு சொன்னாலும் போதாது. உழைத்து அனைவருக்கும் வழிகாட்ட வேண்டும். கீதையில் கண்ணபிரான் சொல்லியிருக்கிறதையே நான் சொல்லுகிறேன். "ஒரு நிமிடமும் நான் சும்மா இருப்பதில்லை. சும்மா இருந்தேனானால் என்னைக்கண்டு பிறரும் சோம்பேறிகளாவார்கள்" என்றான்.

ஹரிஜன், 2-11-35

வேலை செய்யக் கூடிய ஆணோ பெண்ணோ யாருக்கேனும் தொழில் செய்ய வசதியில்லாமல் பசியில் வருந்தினால் அது மானக் கேடாகும். அவர்கள் பசியில் வருந்தும்போது நாம் உண்பது பாவமாகும்.

யங் இந்தியா, 6-10-27

உணவுக் கென்று உழைக்காமல் சமூகத்தில் வாழ எவனுக்கும் உரிமை கிடையாது. உடல் உழைப்பு வேள்வியே யாகும்.

யங் இந்தியா, 20-9-28



# எமது புதுவருஷ வாழ்த்துகள்

வெகு காலமாக பாரத நாட்டின்
சக்தி வாய்ந்த பெயின் பாம்
தயாரிப்பாளர்கள்.




## அமிர்தாஞ்சனம்

வலிகளுக்கு ஒப்பற்ற நிவாரணி

அமிர்தாஞ்சன் லிட். சென்னை-4 இதர இடங்கள் பம்பாய்-1 கல்கத்தா-7



AL.56.2

# பார்த்தனின் பிரார்த்தனை

[கீதையைப் பகவான் உபதேசிப்பதற்கு முன் யுத்த களத்தில் நின்ற பார்த்தனின் மன நிலையை இந்த அழகான நாடோடிப் பாடல் விவரிக்கிறது.]

கௌரவர் சேனைகளை
அணிவகுத்து—ஏலேலோ
கீர்த்தியுள்ள வீஷ்மரங்கே
காத்திருந்தார்—ஏலேலோ

பார்த்தனிந்த சேனையெல்லாம்
பார்த்தவுடன்—ஏலேலோ
பலமொடுங்க மனம்தளர்ந்து
பரதவித்தான்—ஏலேலோ

பாட்டனுடன் விற்குருவைத்
துணைவர்களை—ஏலேலோ
கூட்டமாகக் கொன்றிடுதல்
கொடுமையன்றோ—ஏலேலோ

வாட்டத்துடன் புவியையாண்டு
மகிழ்வதிலும்—ஏலேலோ
வனவாசம் சிறந்ததன்றோ
மாயவனே—ஏலேலோ





# என்னைக் கண்டுகொள்!



பொய்தான் தவிர்த்துன்னைப் போற்றி
சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழ விடேன், உடை
யாய்! என்னைக் கண்டுகொள்ளே!

— மாணிக்கவாசகர்.

# அருமைத் தலைவன்




பேணும் கொழுநர் பிழைகளெலாம்
பிரிந்த பொழுது நினைந்தவரைக்
காணும் பொழுது மறந்திருப்பீர்
கனப்பொற் கபாடந் திறமினோ!

— கலிங்கத்துப்பரணி.

ஏப்ரல் 12 முதல்

சென்னை

சித்ரா ... கிரவுன்

காமதேனு ... சயானி

மற்றும் தென்னாடெங்கும்





சரவணபவா & யூனிட்டியின்

# வணங்காமுடி

டைரக்ஷன்

P. புல்லையா ...

# மலைச்சாரல் மாதவி

ஆனந்தி

அத்தியாயம் 9

## தாரகைகள் சிரித்தன!

சிவசங்கரனுக்குத் தம்முடைய மனப்போக்கே பிடிபடவில்லை. மாதவியிடம் தமக்குத் தோன்றியிருக்கும் பற்றுதலை என்ன செய்வதென்று அவரால் நிச்சயம் செய்து கொள்ள முடியவில்லை. 'மாதவி! மாதவி!' என்று அவர் மனம் இடைவிடாமல் சொல்லிக் கொண்டிருந்தது.

தம்முடைய நண்பர்களுக்குத் தாம் செய்த உபதேசங்களை நினைத்துக் கொண்டால் இந்த மாய வலையில் தான் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது என்று அவருக்குத் தோன்றியது.

ஆனால் சீனிவாசமூர்த்தி-சுபாஷிணி தம்பதிகளை எண்ணிய போது 'ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் பூரணத்துவம் காண வேண்டுமானால் ஒரு மனைவி இருந்தே ஆக வேண்டும்' என்று அவருக்குத் தோன்றியது.

தம்முடைய மனக் குழப்பங்களை வெளியிட்டு யோசனை கேட்கக் கமுக மலையில் அவருக்கு நண்பர்கள் யாரும் இல்லை. அன்னையிடம் அதைப் பற்றிப் பேசக் கூச்சமாக இருந்தது. அவன் ஏற்கெனவேயே திடமான கொள்கை உடையவள். இதைப் பற்றிச் சொன்னால் உடனே அவளை மணந்து கொள்ளும்படி நச்சரிக்க ஆரம்பித்து விடுவாள் என்று எண்ணினார்.

சிவசங்கரனின் தாயார் தம் பழக்க வழக்கங்களை விடாமல் இருந்தாலும், விசாலமான பரந்த நோக்கம் உள்ளவர். தம் மகன் கலப்பு மணம் செய்து கொள்வதாக இருந்தாலும் தடை சொல்ல மாட்டார் என்பதை அவர் அறிந்திருந்தார். ஆகவே





அவர் தம் தாயாரிடம் இதைப் பற்றிப் பேச அவசரமில்லை என்று நினைத்தார்.

பிறகு இன்னொரு சந்தேகம் எழுந்தது. 'மாதவி விவாகம்செய்து கொள்ளமாட்டேன் என்று பிடிவாதம் செய்வதாக முகுந்தன் என்பவர் கூறினாரே, அதற்குக் காரணம் என்னவாக இருக்கும்? ஒரு வேளை வேறு யாரையாவது அவள் காதலித்து ஏமாற்றம் அடைந்திருப்பாளோ? அப்படி யொன்றும் இல்லை என்றே வைத்துக் கொண்டாலும் என்னை அவளுக்குப் பிடிக்கும் என்பது என்ன நிச்சயம்? நான் ஏன் இதைப் பற்றி இவ்வளவு குழம்ப வேண்டும்? மாதவியை மறுபடியும் சந்திக்க நேர்ந்து, அவளும் என்னை விரும்பினால் அல்லவா விவாகத்தைப் பற்றி யோசனை செய்ய வேண்டும்!' என்றெல்லாம் பலவாறு அவர் சிந்தனை செய்து கொண்டிருந்தார்.

அவரால் ஒரு முடிவுக்கும் வரமுடியவில்லை. அடிக்கடி மாதவியின் பொன்முகம் எதிரே தோன்றிக் கொண்டே இருந்தது.

மறுநாள் மாலை அவர் பொழுது போகாமல் உட்கார்ந்து கொண்டிருந்த போது கொஞ்ச தூரம் உலாவி விட்டு வரலாமே என்று தோன்றியது. முதலில் கிருஷ்ணன்குட்டியின் வீட்டுக்குப் போக எண்ணினார். மாதவியைப் பற்றி அவர்கள் மறுபடியும் ஏதாவது பேசினாலும் பேசுவார்கள் என்று நினைத்தார். உடனேயே அவர்கள் பேசும் மற்ற விஷயங்களெல்லாம் எவ்வளவு தலைவேதனையளிக்கும் என்று நினைவு வந்தது. ஆகவே பேசாமல் கால் போன திக்கில் நடக்கத் தொடங்கினார்.

அவருடைய கால்கள் தாமாகவே அவரை அங்கு இழுத்துச் சென்றனவோ, அல்லது அவருடைய அந்தராத்மா தான் மனத்துக்குத் தெரியாமல் கால்களுக்குக் கட்டளை யிட்டதோ, அவர் சிந்தனையிலிருந்து விடுபட்டுத் தம்மைச் சுற்றிக் கவனித்த போது தாம் மலைச்சாரல் பங்களாவுக்கு அருகில் இருப்பதை உணர்ந்து கொண்டார்.

அவர் சென்ற பாதை நேராக மலைப் பாதையில் போய்ச் சேர்ந்தது. அவர் நின்ற இடத்துக்கு இடது புறமாக ஒரு பாதை வந்து மலைப்பாதையில் சேர்ந்

தது. அந்த இரண்டு பாதைகளும் சந்திக்கும் இடத்துக்கு மேலேதான் மாதவியின் வீடு இருந்தது.

இடது பக்கத்துப் பாதை வழியாக மாதவி ஒரு பையுடன் வருவதைக் கண்டதும் சிவசங்கரனுக்கு அங்கிருந்து ஓடிப்போய் விட வேண்டும் என்று தோன்றியது. 'தன்னைப் பார்க்கத்தான் வருவதாக அவள் நினைத்துக் கொண்டால் என்ன செய்வது?' என்று நினைத்தார். 'நினைத்தால் நினைத்துக் கொள்ளட்டுமே. எனக்கு என்ன பயம்?' என்றும் எண்ணினார்.

இந்த மாதிரிக் குழப்பங்களை அதுவரையில் அனுபவித்து அறியாதவரானபடியால் அவருக்கே தம் மன நிலை மிகவும் விசித்திரமாக இருந்தது.

மாதவி வேலியின் ஒரு பக்கத்தில் இருந்த கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே சென்றாள். குனிந்து வாசற்கதவின் பூட்டையும் திறந்தாள். உள்ளே புகுவதற்கு முன்னால் ஒரு முறை திரும்பிப் பார்த்தாள். அவள் தன்னைத்தான் பார்த்தாளோ என்று சிவசங்கரனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. மாதவியிடம் பேச வேண்டும் என்ற ஆர்வமும் முதல் தடவையாக உண்டாயிற்று.

வீட்டைச் சுற்றிலும் போட்டிருக்கும் முள் வேலி தான் உள்ளே செல்லக் கூடாதென்பதற்காகவே போட்டிருப்பதாக அவருக்குப்பட்டது. மலைப் பாதையில் சற்றுத் தூரம் நடந்து விட்டுத் திரும்பினார். அப்போது மலைச்சாரல் டங்களாவின் முன் பக்கத்து அறையில் விளக்கு எரிந்தது. இருட்டாக இருந்த ஒரு அறை ஜன்னல் வழியாக யாரோ தம்மைப் பார்ப்பதாகத் தோன்றியது சிவசங்கரனுக்கு. ஒரு வேளை மாதவி



தான் பார்த்துக் கொண்டிருக்கிருளோ என்று நினைத்தார்.

அன்று வீடு வந்து சேர்ந்ததும் அன்னையுடன் உட்கார்ந்து சாப்பிட்டு விட்டு மாடிக்குச் சென்றார் சிவசங்கரன்.

வானமெங்கும் சிதறிக் கிடக்கும் கோடிக் கணக்கான நட்சத்திரங்கள் அவரைப் பார்த்துக் கண் சிமிட்டின. ஒரு சமயம் அந்தத் தாரகைகள் சிவசங்கரனைப் பார்த்து, 'அகப்பட்டுக் கொண்டாயா?' என்று பரிகசித்துச் சிரித்தன. ஒருசமயம் 'நீ செய்வதுதான் சரி' என்று ஆமோதித்துச் சிமிட்டின.

பெரியோர்களெல்லாம் அன்பைப் பற்றியும், விவாகம் செய்து கொள்வதைப் பற்றியும் என்ன கூறி யிருக்கிறார்கள் என்பதைப் பற்றி வெகு நேரம் சிந்தனை செய்தார்.

மகரிஷிகளெல்லாம் கிருஹஸ்தாச்ரமத்தைப் பற்றி உயர்வாகக் கூறி யிருப்பதையும், உலக மகாமேதைகள், காதலின் உயர்வைப் பற்றிக்கூறி யிருப்பதையும் நினைத்துப் பார்த்தார்.

கடைசியாகத் தாம் இயற்கை வேகத்தைத் தடுப்பது தவறென்றும், இவளைச் சந்திக்க வேண்டும் என்று தெய்வ சங்கல்பம் இருப்பதாலேயே தாம் இவ்வளவு நாட்கள் மணம் செய்து கொள்ளாமல் இருந்திருக்க வேண்டும் என்றும், மாதவியும் தம்மை விரும்பினால் அன்னையின் சம்மதம் பெற்று மணம் செய்து கொள்வதென்றும் தீர்மானம் செய்தார்.

நண்பர்களுக்குச் செய்த உபதேசங்கள், அவர்கள் தம்மைப் பரிகசிப்பார்கள் என்ற எண்ணங்கள் இவை யெல்லாம் இப்போது அற்பமானதாக அவருக்குத் தோன்றின,

இப்படித் தீர்மானம் செய்த பிறகு அவருடைய இதயம் இலேசாகி விட்டது. மாதவியைப் பற்றி இஷ்டப்படி நினைப்பதற்குத் தயக்கம் உண்டாகவில்லை. நாளைக்குக் கிருஷ்ணன்குட்டியிடம் சென்று மாதவியைப் பற்றி இன்னும் விவரங்கள் தெரிந்துகொண்டு, அவளைச் சந்திப்பதற்கும் முயற்சி செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார்.

சிவசங்கரனுக்கு எந்தக் காரியமாக இருந்தாலும் தீர்மானம் செய்யும் வரைதான் குழப்பம். என்ன செய்ய வேண்டும் என்று தீர்மானித்த பிறகு அதைக் காரியத்தில் நிறைவேற்றத் தயங்கவே மாட்டார். தாமதமும் செய்ய மாட்டார்.

மறுநாள் கிருஷ்ணன் குட்டி வீட்டுக்குச் சென்ற போது அவர் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு ஒரு வார சஞ்சிகையைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

சிவசங்கரனைப் பார்த்ததும் குதூகலமாக "வா, அப்பா! உட்கார். உன்னைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டே இருந்தேன்" என்று வரவேற்றார்.

"என்ன நினைத்துக் கொண்டிருந்தீர்கள்?" என்று கேட்டார் சிவசங்கரன்.

"சொல்கிறேன். முதலில் ஏதாவது சாப்பிடுகிறாயா?" என்றார் அன்புடன்.

அவர் கேட்கும்போதே அவருடைய மனைவியார் இரண்டு தட்டுக்களில் பலகாரமும் குளிர்ந்த நீரும் கொண்டு வந்து வைத்தார்.

"இங்கு வந்தால் நீங்கள் இப்படி உபசாரம் செய்கிறீர்கள். நான் நிறையச் சாப்பிட்டு விடுகிறேன். இரவு நான் குறைவாகச் சாப்பிடுவதைப் பார்த்து, என் அன்னை கோபித்துக் கொள்கிறாள்" என்றார் சிவசங்கரன்.

"உனக்கு இப்போது கல்லைத்தின்று ஜீரணிக்கும் வயது. நீ இப்படி யெல்லாம், சொல்லவே கூடாது" என்று அன்புடன் கடிந்து கொண்டார் பெரியவர்.

இருவரும் சாப்பிடத் தொடங்கினார்கள். எல்லாப் பண்டங்களும் மிகவும் ருசியாக இருந்தன.

அந்த அம்மாள் உள்ளே சென்ற பிறகு இருவரும் சற்றுநேரம் பொதுப்படையாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

சிவசங்கரனுக்குத் தாம் கேட்க நினைத்ததை எப்படி ஆரம்பிப்பது என்று புரியவில்லை.

பேச்சு எங்கெங்கேயோ சுற்றி வளைத்துக்கொண்டு கிருஷ்ணன் குட்டியின் நண்பர்களுக்கு வந்தது. அசுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்த சிவசங்கரன் இப்போது சுவாரஸ்யமாகப் பேச ஆரம்பித்தார். கிருஷ்ணன் குட்டியின் நண்பர்கள் ஒவ்வொருவரைப் பற்றியும் பொறுமையாகக் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

"நான் இந்த ஊரில் எத்தனை நாளைக்குப் புதிய மனிதனாக இருப்பது? எல்லாரையும் தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்று அவர் தாமே ஒரு சமாதானமும் சொன்னார்.

கடைசியாக, "அன்று சீட்டாடும் பொழுது ஏதோ வீடு வாங்கும் விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தாரே, அவர் யார்?" என்று கேட்டார் சிவசங்கரன்.

"முகுந்தன் இந்த ஊர்ப் பணக்காரர்களில் ஒருவர். அவருக்குக் கமுகமலை அடிவாரத்தில் நிறைய நிலம் இருக்கிறது. இந்த பூமியின்வளத்தைப் பற்றிச் சொல்லித் தெரிந்து கொள்ளவேண்டிய

# புத்தம்புதியது போன்ற தோற்றம்!



## டாடாவின் 501 ஸ்பெஷல்

### சோப்பினால் சுத்தம் செய்யப்பட்டது




சின்னஞ் சிறிய கவர்ச்சிகரமான கவுன்களை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள். டாடாவின் 501 ஸ்பெஷல் சோப்பைக்கொண்டு அவைகளை சுத்தம் செய்தால், அவைகள் புத்தம் புதிய தோற்றத்துடன் நீடித்த காலம் உழைக்கும். மிருதுவானதும், சுத்தமானதுமான இந்த சோப் உங்கள் துணிகளுக்கு மிகுந்த பாதுகாப்பு அளிக்கிறது.

நூற்றுக்கு நூறு இந்திய

- மூலதனம்
- நிர்வாகம்
- உழைப்பு

இல்லை. பொன்னுகை விளைகிறது. அவர் அள்ளிக் குவிக்கிறார். ஆனாலும் பேராசை விடவில்லை. சில பேருடைய ஜன்மம் அப்படி'' என்றார் பெரியவர்.

'ஏதடா இந்த மனிதர் மாதவிக்கும் முகுந்தனுக்கும் உள்ள உறவைப்பற்றி ஒன்றும் கூறமாட்டேனென்கிறாரே!' என்று அலுப்பாக இருந்தது சிவசங்கரனுக்கு.

''முகுந்தனுக்குப் பிள்ளைகள் இருக்கிறார்களா?''

''இருக்கிறார்கள், மூத்தவன் அச்சுதன்; இரண்டாவது மாதவன். அவருடைய மூன்று பெண்களுக்கும் விவாகம் ஆகிவிட்டது'' என்றார் கிருஷ்ணன்குட்டி.

''நான் எதற்காகக் கேட்கிறேன் என்பதை வெளிப்படையாகச் சொல்லிவிடுகிறேன். எனக்கு மலைமீது சென்று வேட்டையாடுவதில் மிகவும் விருப்பம் என்பதைத் தான் நான் முன்பே சொல்லியிருக்கிறேனே. தனியே போகப் பிடிக்க மாட்டேனென்கிறது. இரண்டு மூன்று பேராவது போனால் உற்சாகமாக இருக்கும். யாராவது இளைஞர்கள் இதில் விருப்பமுள்ளவர்கள் இருந்தால் நான் சிநேகம் செய்து கொள்ள விரும்புகிறேன். அவ்வளவுதான் விஷயம்'' என்றார் சிவசங்கரன்.

''அப்படியானால் கருணாகரனை நீ பழக்கம் செய்து கொள்ளலாமே!'' என்றார் பெரியவர்.

சிவசங்கரனின் நெஞ்சம் துள்ளியது.

அவர் தொடர்ந்து, ''மலைப்பாதைக்கு அருகில் ஒரு பங்களா இருக்கிறதல்லவா, அதில் மாதவியும் அவள் தம்பி கருணாகரனும் இருக்கிறார்கள். கருணாகரன் மகா சூரன். அவன் பகவதி தேங்காய் எண்ணெய் தொழிற்சாலையில் மானேஜராக இருக்கிறான். விடுமுறை நாட்களில் நீங்கள் இருவரும் வேட்டையாடப் போகலாம்'' என்றார்.

''அச்சுதனையாவது உங்களுடைய நண்பர் முகுந்தன் மூலம் அறிமுகம் செய்து கொள்ளலாம். ஆனால் கருணாகரனை எனக்குத் தெரியாதே. அச்சுதன் வேட்டையாட மாட்டானா?''

''ஏன் மாட்டான்? அச்சுதன், மாதவன், கருணாகரன் எல்லாரும் ஒன்றாக வளர்ந்தவர்கள்தானே. இங்கே அநேகமாக எல்லாருமே துப்பாக்கிப் பிரயோகம் செய்யப் பழக்கம் செய்து கொள்வார்கள். இரவு நேரங்களில் சில சமயம் மந்தை மந்தையாக ஓநாய்கள் வந்து கோழி, கன்று, ஆடு இவைகளைக் கொண்டு போய் விடும். சில சமயம் சிறுத்தை கூட வருவதுண்டு. அதனால் எல்லாருமே துப்பாக்கி வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.''

''அப்படியானால் அச்சுதனை எனக்கு அறிமுகம் செய்து வையுங்களேன்.''

''ஓ! அதுவும் செய்கிறேன். ஆனால் நீ கருணாகரனைச் சந்திக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். நீ வந்த போது உன்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்ததாகக் கூறினேன் அல்லவா? கருணாகரனின் தமக்கை மாதவி இன்னும் விவாகம் செய்து கொள்ளவில்லை. அவளுக்கு வயதும் இருபத்தேழு ஆகிவிட்டது. அவளுக்குப் பிடித்த மானவன் இங்கே யாரும் இல்லை. அவளோ தங்கமான பெண். அவளைப் போல் அப்பழுக்கில்லாத நடத்தையும், அடக்கமான குணமும் கொண்ட பெண் இந்தக் கமுக மலையில் யாருமே இல்லை என்று நான் தீர்மானமாகச் சொல்லுவேன். உனக்கு அவளைப் பிடித்திருந்தால் விவாகத்துக்கு நான் ஏற்பாடு செய்து விடுகிறேன்'' என்றார் கிருஷ்ணன் குட்டி.

சிவசங்கரன் திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தார்.

## அத்தியாயம் 10

# கமுகமலை நெருப்பு!

கிருஷ்ணகுட்டி தாம் கொஞ்சங்கூட எதிர்பார்க்காத விஷயத்தைக் கூறவே என்ன பதில் சொல்வதென்று சிவசங்கரனுக்குப் புரியவில்லை.

மனிதர்களுடைய மனம்தான் எவ்வளவு வேடிக்கையான ஒரு வஸ்து. மாதவியைத் தான் பார்த்ததைக் கிருஷ்ணன் குட்டியிடம் சொல்லச் சிவசங்கரன் விரும்பவில்லை.

''ரொம்ப அழகாக இருக்கிறதே, நீங்கள் சொல்வது! கல்யாணம் என்று சொன்னால் அவ்வளவு எளிதாகக் கை கூடிவிடுகிற விஷயமா? உங்களிடம் வெளிப்படையாகப் பேசுவதில் தவறில்லை என்பதால் சொல்கிறேன். என் தாயார் சுமார் பத்து வருடங்களாக என்னை மணம் செய்து கொள்ளும்படி நச்சரித்துக் கொண்டிருந்தாள். இப்போது நாலைந்து வருடங்களாகச் சொல்வதை நிறுத்திவிட்டாள். நான் அவள் சொன்னதற்காக விவாகம் செய்து கொள்ள மாட்டேனென்று உணர்ந்து

கொள்வதற்கு இவ்வளவு நாட்களா யிற்று அவனுக்கு.''

''உன் தாயார் எனக்கு அதைப்பற்றிச் சொல்லியிருக்கிறாள். உன் கொள்கை களைப் பற்றியும் கூறியிருக்கிறாள். நான் உன்னை எதற்கும் வற்புறுத்தப் போவ தில்லை. நீ கருணாகரனுடன் முதலில் சிநேகம் செய்துகொள். மாதவியைப் பார்த்துச் சில நாட்கள் பேசிப்பழகினால் உன் மனம் மாறலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் இரண்டுபேரும் விரும்பினால்தான் விவாகத்தைப் பற்றி யோசிக்கலாம் என்று சொன்னேன். ஒருவரை யொருவர் பார்த்துக் கொண் டால்தானே பிடிக்கும் பிடிக்காது என்பது தெரியும். அதற்கு ஒரு சந்தர்ப் பத்தை ஏற்படுத்திக் கொடுக்க நான் விரும்புகிறேன்.''

''நான் கருணாகரனைச் சந்திக்கிறேன். அதற்கு ஆட்சேபனை இல்லை. ஆனால் வேறு எந்தவிதமான எண்ணமும் நீங்கள் வைத்துக்கொள்ளவேண்டாம். விவாகம் என்பதையே மறந்துவிட்டுச் சாதாரண மாக நீங்கள் அறிமுகம் செய்து வைக்க வேண்டும். இதைப்பற்றி அவர்களிடம் பிரஸ்தாபமே செய்யக்கூடாது. அப்படி நீங்கள் வாக்களித்தால்தான் வருவேன்.''

''நீ விரும்பினால் தவிர நான் இதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை உன்னிடம் வேண்டுமானாலும் இதைப்பற்றி இனி மேல் நான் பேசவில்லை.''

''அது சரி! முகுந்தனுக்கும், கருணாகர னுக்கும் என்ன விரோதம்? அன்று நீங்கள் ஏதோ அவரைக் குற்றஞ் சாட்டிப் பேசினீர்களே?''

''முகுந்தனும் மாதவியின் தந்தையும் உடன் பிறந்த சகோதரர்கள். மாதவி யின் தாய் கருணாகரன் பிறந்து சில நாட்களுக்கெல்லாம் இறந்து போய் விட்டாள். மாதவியின் தந்தையும் வெகு காலம் உயிரோடிருக்கவில்லை.

''சித்தப்பா முகுந்தனுடன் இவர்கள் இருந்து வந்தார்கள். மாதவி, கருணாகர னுக்குச் சேர வேண்டிய பிதுரார்ஜி தத்தை யெல்லாம் அவர் அமுக்கிவிட் டார் என்று கேள்வி. இது எவ்வளவு தூரம் நிஜம் என்பது எனக்குத் தெரி யாது. மாதவியை அவர்கள் சரியாக நடத்தாதபடியால் அவள் தன் தந்தை யின் வீடான மலைச்சாரல் பங்களாவுக் குத் தம்பியுடன் போய் விட்டாள்.

''தம்பிக்கு வேலை கிடைக்கும்வரை யில் இருவரும் சிரமப் பட்டார்கள். இப்போது சுகமாக இருக்கிறார்கள். ஆனால் முகுந்தன் மீது கருணாகரனுக்கு ஆத்திரம் வளர்ந்து வருவதாகத் தெரி கிறது. இந்தப் பகை எதில் கொண்டு விடப் போகிறதோ, தெரியவில்லை.''

மாதவியைப்பற்றிச் சில கேள்விகள் கேட்க விரும்பினார் சிவசங்கரன். ஆனால் அவருக்குக் கேட்கத் துணிவு வரவில்லை. 'தானாகத் தெரிகிறது. என்ன அவ சரம்?' என்று எண்ணினார்.

''ஒன்று சொல்ல மறந்து விட்டேனே! மாதவிதான் தம்பியை மேல் படிப்பு படிக்க வைத்தாள். அதற்காக இந்த ஊர்ப் பள்ளிக்கூடத்தில் உபாத்தி யாயினி வேலை பார்த்து வந்தாள். இப் போது அவள் வேலையை விட்டுவிடு கிறேன் என்று சொன்னாளாம். பள்ளிக் கூடத் தலைமை ஆசிரியை விடமாட்டேன் என்கிறாளாம். அவளுக்கு மொத்தத்தில் ரொம்ப நல்ல பெயர். இந்த ஊரில் மாதவி என்றாலே எல்லோருக்கும் அலாதி மதிப்பு. இளைஞர்களெல்லாம் 'நெருப்பு மாதிரி இருக்கிறாளே' என்று சொல்லிக் கொள்வார்கள். அவளைக் கண்டாலே பயப்படுவார்கள் என்றால் பார்த்துக் கொள்ளேன்'' என்றார் பெரியவர்.

''நான் வருகிறேன். இன்னொரு நாள் நீங்கள் கருணாகரனை இங்கே வரச் சொல்லிவிட்டு என்னையும் கூப்பிடுங்கள். நான் சந்திக்கிறேன்'' என்றார் சிவ சங்கரன்

''இல்லை! இல்லை! அப்படிச் செய்தால் நன்றாக இருக்காது. நாளை மாலை நாம் இருவருமாக மலைச்சாரல் பங்களா வுக்குப் போவோமே. கோர்ட்டிலிருந்து வந்ததும் நீ உடை மாற்றிக் கொண்டு இங்கே வந்துவிடு. இருவரும் சேர்ந்து போகலாம்'' என்றார் பெரியவர்.

''இவ்வளவு சீக்கிரம் அவர்கள் வீட் டுக்குப் போக வேண்டுமா?''

''ஏன்? போனால் என்ன? நான் உங்கள் வீட்டுக்கு உடனே வரவில்லையா? யாரா வது கூப்பிடவேண்டும் என்று காத்துக் கொண்டிருந்தேனா?''

''உங்கள் விஷயம் வேறு. அங்கே இளம் பெண் ஒருத்தி இருப்பதாகக் கூறுகிறீர்கள். அதனால் எனக்கு வர விருப்பமில்லை. உடனே யாராவது அதற் குக் காரணம் கற்பித்து விடுவார்கள்.''

''ரொம்ப அழகாக இருக்கிறது போ. காரணம் யார் கற்பிப்பது? இதில் ஒரு விதமான நோக்கமும் யாரும் காண முடியாது. மாதவியைப் பற்றிக் கழுக மலை முழுவதும் தெரியும். நீ கவலைப் படவேண்டாம். மேலும், நீ அடிக்கடி போனால்தானே யாராவது நோக்கம் கண்டுபிடிக்க முடியும். கருணாகரனைச் சந்தித்த பிறகு உனக்கு விருப்ப மானால் அவர்கள் வீட்டுக்குப் போ; இல்லையானால் போகவேண்டாம்'' என் றார் பெரியவர்.

(தொடரும்)


SULEKHA
SOLD EVERYWHERE










GUARANTEED
Pearl
STAINLESS STEEL





இந்த இலவச புத்தகத்திற்கு இப்பொழுதே எழுதுங்கள் :

'சிறந்த ஸைக்கிளை எப்படித் தேர்ந்தெடுப்பது' என்ற எமது புத்தகத்தை இலவசமாகப் பெற உங்கள் முழு விலாசத்தை எழுதக் கோருகிறோம்



*10 ஸைக்கிள் வியாபாரிகளில் 8 பேர்கள்

# ஹெர்குலிஸ்

## தான் நீங்கள் கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த பெருமானம் அளிக்கிறது என்கிறார்கள்

நீங்கள் குறைந்த விலைக்கோ அல்லது அதிக விலைக்கோ ஸைக்கிள் வாங்கலாம், ஆனால் ஹெர்குலிஸ்ஸைக் காட்டிலும், கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த பெருமானமுடைய வேறு ஒரு ஸைக்கிள் பெறமுடியாது. இந்த உண்மையை அறிந்து தான் பத்து ஸைக்கிள் வியாபாரிகளில் எட்டுபேர்கள் 'நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு ஹெர்குலிஸ் தகுந்த பெருமானம் அளிக்கிறது' என்கிறார்கள். அவர்களுடைய புத்திசாலித்தனமான ஆலோசனையைப் பின்பற்றி ஸைக்கிள் வாங்கும் பொழுது ஒரு ஹெர்குலிஸ் ஸைக்கிளையே வாங்குங்கள்.

ஸைக்கிள் வாங்குவது ஒரு முதலீடு செய்வது போலாகும் ! **ஹெர்குலிஸ்**

நீங்கள் கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த பெருமானம் அளிக்கிறது

*ஒரு தனிப்பட்ட ஆராய்ச்சியின் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது

தயாரிப்பாளர்கள் : டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்

TIC. 3780




## 10. எண்ணெய் ஸ்நானம்

இந்தத் தொழிலையே மாற்றிக் கொள்ள வேணுமென்ற ஆசையுடன் துடிதுடிக்கிறேன். காலையில் எழுந்ததும் ஒரு நல்ல முகத்தில் விழிக்க வழியில்லை. இரவு படுக்கபபோகும் வரையில் ஒரே அழுகைதான். அழுமூஞ்சிகள், சிணுங்கு மூஞ்சிகள், வாடிய முகம், வதங்கிய வதனம், ஒழுகும் மூக்குச் சளி ஒடும் காதின் சீழ். மார்கழி மாத பஜனை கோஷ்டியின முக்காடிட்ட தலைகள், உட லெல்லாம் போர்த்திய கம்பளி மூட்டை. 'சூள்' கொட்டிக் கொண்டே இருக்கும் திருப்பணியில் சடுபாடு—'உம் ஊஹூம்' என்ற ஸ்ரீ வித்யை, புருஷ வித்யை ஒன்றிலும் காணாத அபூர்வ பீஜாக்ஷரங்களைச் சதா ஜபித்துக் கொண்டே இருக்கும் நிலை. இப்பேர்ப்பட்ட குழப்பங்களைத் தான் காணவேண்டிய வாய்ப்பு.

'என்னங்க உடம்புக்கு?' என்று கேட்டால் போதும்; பதில் சொல்ல வாயைத் திறக்கும் போது சிலந்திக் கூடுபோல் வாயில் குறுக்கும் நெடுக்குமாய்ப் பரப்பிய எச்சிலின் நூல்வலை வாய்க்கு ஒரு கதவுபோல் அமைந்திருக்கும் கண்ணராவியைக் கண்டதும் ஒரு கும்பிடு போடத் தோன்றும்.

சுவர்க்கத்துக்குப் போகும் வழியில் யுதிஷ்டிரனை நரகத்தின் வழியே அழைத்துச் சென்றார்களாம். யுதிஷ்டிரனுக்கு நரகவேதனைகளையெல்லாம் அநுபவித்த துன்பம் ஏற்பட்டதாம். ஏறத்தாழ எனக்கும் அதே அநுபவந்தான்.

யுதிஷ்டிரன் பெயரை எண்ணியதும் ஒரு விஷயம் தோன்றுகிறது. நான் ஒரு பாகவதராய்ப் போனாலென்ன? ஏதோ எல்லாருக்கும் தெரிந்த கதையைச் சொன்னால் போதும். மற்றும் சினிமாக்கள் முதலான மூகாந்தரங்களால் மலிந்து கிடக்கும் ஹாஸ்யங்களை அள்ளி வீசியும், பத்திரிகைகளில் காணும் விஷயங்களைச் சமயோசிதமாக விமர்சனம் செய்தும் இரண்டு மணி நேரம் பேசினால் போதுமே! 'வாருங்கள்' என்று வரவேற்கும்போதே ஒரு ரோஜா மாலை. கதை சொல்லிக் கொண்டிருக்கும்போது இடையிடையே பால் — குங்குமப் பூ இட்டுக் காய்ச்சியது. இப்படியெல்லாம் உபசாரங்கள்! ஆச்சரியமான தொழில் அதையேதான் ஏற்பது என்ற தீர்மானம். அதையும் இப்போதே தொடங்கி விடலாமே!

"இப்படியாகத்தானே ..."

இது உபன்யாசகர் பாணியில் இல்லையா? பல்லைத் தேய்த்து வாயைக் கொப்பளித்ததும், கண்ணுக்கு அஞ்சனமிட்டுக் கொள்வது நவசரியையில் அடுத்த நிகழ்ச்சி. கருமாக்கல் என்னும் அஞ்சனத்தைத் தினந்தோறும் இதற்கு உபயோகித்தல் நல்லதென்பார் சிலர். மரமஞ்சளின் கஷாயத்தைப் பால் கூட்டிக் காய்ச்சி எடுத்த விழுதை உபயோகிக்கலாமென்பார் சிலர். இரண்டு சொட்டுத் தேனையாவது கண்ணில் விடுவது; இதை வாரத்தில் இரண்டு தினங்களாவது செய்வது விரும்பத்தக்கது. ஏனெனில், அஞ்சனப் பிரயோகத்தால் கண்ணில உண்டாகக்கூடிய மலங்கள் களையப்படுகின்றன.

பிறகு 'நஸ்யம்' என்னும் விதிப்படி நாசியில் மருந்திடல், குடிநீர் அல்லது வேறு சில அரைப்பு மருந்துகளால் வாயைக் கொப்பளித்தல், புகையூட்டல் தாம்பூலம் மெல்லுதல் என்னும் உபாயங்களால் நாசி, வாய், தொண்டை முதலிய பிரதேசங்களைச் சுத்தி செய்து கொள்ளுதல் ஆகிய திட்டத்தை ஏற்க வேண்டும். இதற்குப் பிறகு எண்ணெய் தேய்த்து முழுக வேண்டும்

இந்த எண்ணெய் முழுக்கை நாள்தோறும் செய்ய வேண்டும் என்பர் சிலர். வாரம் ஒரு முறை வேண்டும் என்பார் மற்றுஞ் சிலர் இதற்குச் 'சனி நீராடு' என்ற முதுமொழியைச் சான்று கூறுவர்.

"எள்ளினெய்யும் முக்கூட்டெணெய்யும்
ஆனெய்யும்
விள்ளுமைதொத்தவெனை நெய்யுமே —
கொள்ளுபடி
வாரந்தனக்கிருநாள் வைத்தாடி னெய்க்ளத்தி
காரந்தனக் கிடமில் காண்"

இதைச் சான்றாக எடுத்துச் சொல்லி வாரம் இருமுறை எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டுமென்று வலியுறுத்துவோர் வேறு சிலர். ஆகவே ஒவ்வொருவனும் தனது பழக்கப்படி இந்த எண்ணெய் ஸ்நானத்தை முறை தவறாமல் செய்து வரவேண்டும்.

ஆயினும் தினசரி எண்ணெய்க் குளியினால் உடம்பிலுள்ள அலுப்புச் சலிப்புகள் நீர்ந்து உடலில் உள்ள வலியும் போகும். மூப்பின் லக்ஷணங்களான நரை, திரை முதலியவை இள வயதிலேயே ஏற்படுவது தடுக்கப்படும்; பல தரப்பட்ட நரம்பைப்பற்றிய வியாதிகள் அணுகா. கண் தெளிவு படும்; உடல் வன்மையும், சருமத்திற்கு மினு மினுப்பும் உண்டாகும்; சகிப்புத்தன்மை அதிகரிக்கும்; ஆயுள் நீடிக்கும் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. தலையிலும் உள்ளங்காலிலும் தாராளமாக எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டும். காதுகளிலும் சில துளிகளை விடுவது அவசியம் என்று பிரத்தியேகமாகவும் சாஸ்திரம் சொல்கிறது. இவ்வகையை



அனுசரித்துக் குளிக்கப் போகும்போது கொஞ்சம் எண்ணெயைத் தினந்தோறும் தேய்த்துக் கொள்வது, உடல் முழுவதும் உபயோகிக்கும் விஸ்தரித்த முறையை வாரத்தில் இரு தினங்கள் அனுசரிப்பது என்று வைத்துக் கொண்டால், சாஸ்திரம் வகுத்த இரு முறைகளையும் அனுஷ்டிப்பதாகு மல்லவா?

எண்ணெய் போகத் தேய்க்க வேண்டியது எது? இதுபற்றியும் ஒரு விளக்கம் அவசியம். ரணங்களுள்ளவர்—உசிலந்தூள்-சீக்கனும் இலைத்தூள்-உபயோகிப்பது நலலது. சொறி சிரங்கு தினவு இவை உள்ளவருக்கு இலுப்பைப் பிண்ணாக்கு தேய்த்துக் குளிப்பது நல்லது. நல்லெண்ணெய் தேங்காய் எண்ணெய் அல்லது இவற்றில் காய்ச்சிய வேறு தைலங்களை உடயோகிக்கும்போதுபொல் ஙங்காயையோ சிகைக்காயையோ உபயோகிக்கவும். குழந்தைகளுக்கும் சுகுமார சரீரமுள்ளவருக்கும், உடம்பு பருமனாக விரும்புவோருக்கும் கடலை, பாசிப் பயறு இவற்றின் மாவு நல்லது. இழுப்பு, ஈளை போன்ற கபரோகமுள்ளவர்களும், வாந்தியாகவோ பேதியாகவோ மருந்துண்டவர்களும் அஜீர்ணமுள்ளவர்களும் எண்ணெய்க் குளி பெறலாகாது.

சரீரக்கூறு என்னும் இயற்கையின் காரணமாகவும் சிலருக்கு எண்ணெய்க் குளி ஒத்துக் கொள்ளாது. இவர்கள் 'பஞ்சகற்பம்' என்னும் முறைப்படி தலை முழுகலாம். அதாவது, கஸ்தூரி மஞ்சள், மிளகு, வேம்பின் வித்து, கடுக்காய்த்தோல், கொட்டை நீக்கிய நெல்லிமுள்ளி இவைகளைப் பாலில் அரைத்து; பாலில் கொதிக்க வைத்துச் சிறிது சூடுள்ளபோது தலைக்குத் தேய்த்துத் தலைமுழுகலாம். பஞ்சகற்பத் தலைமுழுக்கினால் தலைபாரம் போன்ற நோய்கள் ஒருநாளும் வராது. உடல் அதிகம் பருமனாவதோ, அதிகம் மெலிவடைவதோ ஒருகாலும் நேராது.

தினசரி தலைக்குத் தடவி முடி சீவிக் கொள்ளவும், எண்ணெய்க் குளிக்குத் தலைக்குத் தேய்க்கவும் யாவரும் உபயோகிக்கக்கூடிய எளிய தைல முறை ஒன்றையுமறிவது விரும்பத் தக்கது.

கடுக்காய்த் தோல், தானிக்காயின் தோல், நெல்லிமுள்ளி, அதிமதுரம், வெட்டிவேர். (விளாமிச்சன் வேர்) குருவேர் (இதைச் சிலர் வெட்டிவேர் என்பர்) ஆகியவற்றை வகைக்கு அரைப் பலம் விதம் எடுத்து, இடித்துப் பொடியாக்கி அம்மியில் இட்டு, பால் அல்லது தண்ணீர் விட்டு வெண்ணெய் போல் அரைத்து எடுத்துக் கொள்ளவும். இதற்குக் கல்க்கம் என்று பெயர்.

இக் கல்க்கத்தையும் இரண்டு படி பாலையும் ஒரு வீசை நல்லெண்ணெயையும் கூட்டிக் கலக்கி அடுப்பிலேற்றிக் கல்க்கம் மணல்போல் கையி லொட்டாமல் ஆகும் வரை காய்ச்சி இறக்கி வடிகட்டிக் கொண்டு, சூடாக இருக்கும் போதே பொடி செய்த பச்சைக் கற்பூரம் இரண்டு சிட்டிகை யளவையுங் கூட்டிக் கலக்கி நல்ல புட்டியிலடைத்து வைத்துக் கொள்ளவும். இதைத் தினசரி முடி சீவிக்கொள்ள உபயோகிக்கவும், உச்சியிட்டு ஊறவும், எண்ணெய்க் குளிக்கும் உபயோகிக்கலாம். எல்லோரும் உபயோகிக்கலாம்.

"எண்ணெய் பெறின் வெந்நீரிற் குளிப்போம்..." என்று தேரையர் சொல்லியுள்ளதையும் தெரிவித்து விடுவது அவசியமன்றோ! (தொடரும்)


எல்லோருக்கும் தெரியும்—
நீங்கள் செலவழிக்கும் பணத்திற்கு ப்ரூக் பாண்ட் தேயிலை அதிகப்படியான, ருசியான தேநீரை அளிக்கிறது
காற்றுப் புகாமல் நன்றாக பாக் செய்யப் படுவதால் ப்ரூக் பாண்ட் தேயிலை களங்கமற்று மெத்தவும் சுத்தமாக உங்களுக்குக் கிடைக்கிறது
ஒவ்வொரு நாளும் 24 90 ப்ரூக் பாண்ட் தேயிலை பாக்கெட்டுகள் வாங்கப்படுகின்றன
ஆகையால்தான் மற்றெந்தத் தேயிலையையும் விட அதிகப்படியான ஜனங்கள் ப்ரூக் பாண்ட் தேயிலையையே அருந்துகிறார்கள்!
Darjeeling Tea
Brooke Bond Tea
Blend
Brooke Bond Tea
BB 1405




“என்னடா இது சங்கரா, இன்னும் புறப்படவில்லையா? நேரமாகிறது. சீக்கிரம் கிளம்பு!” என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் சங்கரனின் குடும்ப நண்பர் சேதுராமன்.

சேதுராமனின் காதோடு, “சேதுராமா! என்னை மன்னித்து விடு. இரண்டாவது விவாகம் செய்து கொண்டு என் பெண் அருமைக் குமாரி கீதாவைப் பாழாக்க நான் துளியும் விரும்பவில்லை. பெண் வீட்டாருக்கு எனக்குச் சம்மதமில்லை என்று தெரிவித்து விடு!” என்றார் சங்கரன் தொண்டை அடைக்க.

சேதுராமன் திடுக்கிட்டார். “நல்ல பைத்தியம் தான் நீ. நாளைப் பொழுது விடிந்தால் முகூர்த்தம். இந்தச் சமயத்தில் இப்படி விவாகத்தை நிறுத்தி விட்டால் பெண் வீட்டாருக்கு எவ்வளவு அவமானமாக இருக்கும் என்று நினைத்துப் பார்த்தாயா? பாவம், ஏற்கெனவே ஏழை என்ற காரணத்தால் உனக்குப் பார்த்திருக்கும் பெண் லீலாவின் விவாகம் இவ்வளவு நாட்கள் தடைப்பட்டு நின்றிருந்தது. இப்பொழுது முகூர்த்த நேரத்தில் அவள் விவாகம் நின்று விட்டது என்று அறிந்தால் உலகம் அவளைப்பற்றிப் பலவாறாகப் பேச ஆரம்பித்து விடும். பிறகு அவளுக்கு விவாகமும் ஆகாது. அந்தப் பெண் பழியை ஏற்றுக் கொள்ள நீ தயாராக இருக்கிறாயா?” என்று கேட்டார் சேதுராமன் சற்றுக் கோபத்துடன்.

சங்கரன் தலையில் கைவைத்து உட்கார்ந்து விட்டார். அவரால் ஒரு வழிக்கும் போக முடியவில்லை: ‘ஏன்தான் மறு விவாகத்துக்கு ஒப்புக் கொண்டேனோ? இந்த வெள்ளை மனம் படைத்த கீதாவுடன் வருபவள் சரியாகப் பழகுவாளா? வீடு ரணகளமாக இருக்கப்போகிறதா அல்லது சுகமாக இருக்கப் போகிறதா?’

குழந்தைக்காகவே அவர் மறு விவாகத்துக்குச் சம்மதித்தார். ஆனால் இப்பொழுதோ அக் குழந்தைக்கு இவ் விவாகம் பலனளிக்குமா என்ற சந்தேகம் வந்து விட்டது.

சங்கரன் மேலும் அங்கு இருக்கப் பிடிக்காதவராய் ஒரே எட்டில் மாடியை நோக்கி விரைந்தார். அங்கிருந்த கீதாவின் தாயார் சுசீலாவின் புகைப்படத்தின் அருகே சென்று, ‘சுசீலா, என்னை மன்னித்து விடு! உனக்கு நான் பெரிய தீங்கு இழைக்கிறேன். எல்லோருடைய தூண்டுதலினாலும் என்னையே மறந்தவனாய் இந்த விவாகத்துக்கு ஒப்புக் கொண்டு விட்டு, இப்பொழுது பின்வாங்கவும் வழியில்லாமல் திண்டாடுகிறேன். ஆயினும் ஒன்று மட்டும் நான் உனக்கு உறுதியாகக் கூறுகிறேன். உன் கீதா கண்ணீர் சிந்தி வாழ்வைப் பாலைவனமாகக் கருதும்படி நான் விடமாட்டேன். என் கைப் பிடித்து நாளை வரவிருக்கும் அப் பெண்ணுக்கு இந்த வீட்டில்தான் இடம் இருக்கும். என் மனத்தில் தங்க இடம் கொடுக்க மாட்டேன். இதை நிச்சயமாக நம்பு!” என்று கூறியபடி கல்லாக நின்று கொண்டிருந்தார்.

“பார்த்தாயா? இந்த நிலையை மறக்கடிக்கத்தான் நான் வேறு விவாகம் கண்டிப்பாகச் செய்து கொள்ள வேண்டுமென்கிறேன். சங்கரா! போனவளை நினைத்துச் சும்மா உருகுவதால் அவள் மீண்டும் வந்து விடப் போகிறாளா? எழுந்து வா, கண்களைத் துடைத்துக் கொள். வாசலில் சம்பந்திமார்கள் அழைத்துச்செல்லக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்” என்று அவரைச் சமாதானப்படுத்தி அழைத்தாள் அவருடைய வயது சென்ற அத்தைக் கிழவி மீனாட்சி. ஜடம்போல் சங்கரன் பாரமான மனத்துடன் கீழே இறங்கினார்.

✱

சங்கரனும் சுசீலாவும் வாழ்க்கையை ஆரம்பித்து இன்னும் எட்டு வருடங்கள்கூட முடியவில்லை. ஆயினும் அதற்குள் சுசீலா அவரைத் தன்னந்தனியே விட்டுச் சென்று விட்டாள். மணமானதும் இருவரும் இல்லறப் பூங்காவில் அன்பெனும் மணம் வீச உல்லாச நடைபோட்டு வாழ்க்கையைச் சுவர்க்கபோகமாகத்தான் அனுபவித்து வந்தனர். அன்புச் சின்னமாகக் கீதா பிறந்ததும் அவர்கள் மகிழ்ச்சி எல்லை மீறியது. குழந்தை கீதாவுடன் கொஞ்சிக் கொஞ்சி மகிழ்ந்தார்.

அந்த இன்பப் பூங்காவில் கீதாவுக்கு ஆறு வயதாகும்போது விதி என்னும் விஷப் பூச்சி புகுந்தது. சுசீலா டைபாய்ட் ஜுரத்தினால் பீடிக்

கப்பட்டாள். சங்கரன் இரவும் பகலும் பாடு பட்டார். அன்று ஜுரம் சற்றுத் தணிந்ததும், கீதாவை மருந்து கொடுக்கச் சொல்லி விட்டு ஆபீசுக்குச் சென்றார். ஆயினும் என்ன காரணமோ அவர் மாலை வீடு திரும்பும்போது



சுசீலாவின் கைகால்கள் ஜில்லிட்டிருந்தன. அவள் நினைவு தப்பிக் கிடந்தாள். டாக்டர் கை விரித்து விட்டார்.

தீபம் அணையும் தருணத்தில் ஒளிவிட்டுப் பிரகாசித்து அணைந்து விடுவது போல் கடைசி நேரத்தில் சுசீலா சற்றே கண்களைத் திறந்தாள். கணவனது கைகளை மார்போடு அணைத்து மெதுவாக, ''கீதாவின் நலனுக்காக...'' என்று ஆரம்பித்தாள். ஆயினும் வாக்கியம் முடிவதற்குள் காலன் அவசரப் பட்டு விட்டான். சங்கரன் குழந்தை போல் 'ஓ'வென்று தேம்பித் தேம்பி அழுதார். இன்பப் பூங்கா அழிந்து, நட்ட நடு பாலைவனத்தில் அவரை யாரோ தன்னந்தனியாக விட்டுச் சென்றுவிட்டது போல் அவருக்குத் தோன்றியது. கீதா தந்தையைக் கட்டிக் கொண்டு மெதுவாகக் கண்ணீர் விட்டபடி நின்றிருந்தாலும், தாய் அவளை விட்டுவிட்டுச் சென்றது அவ்வளவாகப் பாதித்ததுபோல் காணப்படவில்லை!

சங்கரன் சிறிது மனம் தெளிந்து ஆபீசுக்குப் போக ஆரம்பித்தார். சிறிது நாட்கள் சென்றதும் மெதுவாக அவருடைய அத்தைக் கிழவியும், நண்பர் சேதுராமனும் அவரை நச்சரிக்க ஆரம்பித்தனர். நாலைந்து மாதங்கள்வரை ஒரே திடமான குரலில் அவர் மறுவிவாகம் செய்து கொள்ள மறுத்து விட்டார். ஆயினும் அத்தை தன் ஊருக்குக் கிளம்பியபோது தான் குழந்தை கீதாவை யார் கவனித்துக் கொள்வது என்ற பெரிய பிரச்னை ஒன்று குறுக்கிட்டது. இவ்விஷயத்தையே நண்பர்களும் சுற்றத்தார்களும் எடுத்துக் கூறிய போது வேறு வழி இல்லாததினால் ஏதோ மனமறிந்துஒரு குற்றம் செய்ய ஒப்புக் கொள்வது போல் மறுவிவாகத்துக்கு ஒப்புக் கொண்டார்.

இரண்டாவது மனைவியாகச் சங்கரன் இல்லத்துக்கு வர ஒப்புக் கொண்ட லீலா ஒரு உபாத்தியாயர் குடும்பத்தைச் சேர்ந்தவள். ஐந்து சகோதரிகளுக்கும் மூன்று சகோதரர்களுக்கும் மூத்தவளாகப் பிறந்தவள்.

சங்கரனின் மனமோ விவாக நாள் நெருங்க நெருங்கப் பாரமாகக்கனத்தது. சுசீலாவுக்கும் கீதாவுக்கும் ஏதோ பெரிய தீங்கு இழைப்பது போல் தோன்றியது. சுசீலா இறக்கும்போது

'கீதாவின் நலனுக்காக...' என்று பாதி கூறி நிறுத்தியது. அவர் மறு விவாகம் செய்து கொள்ளக் கூடாது என்று தடுக்கத்தானே? கண்மூடித்தனமாக விவாகத்துக்குச் சம்மதம் தெரிவித்து விட்டோமே! இனி முன் வைத்த காலைப் பின்வைப்பதும் கஷ்டம். எப்படியோ போகட்டும், வரப்போகும் பெண்ணிடமிருந்து சற்று ஒதுங்கியே இருக்கவேண்டும்!

சங்கரன்வரையில் லீலா இளையாள் என்றாலும், அவள் வரையில் அவ் விவாகம் வாழ்க்கைப் பாதையில் முக்கியமானதும், சிறந்ததுமான ஒரு அம்சம்தானே? பெண்களுக்கு விவாகம் மறக்க முடியாத சடங்கு. அதனால் மகள் மனம் நோகக்கூடாது என்று லீலாவின் தந்தை விவாகத்தில் ஒரு குறையும் வைக்கவில்லை. சங்கரன் உணர்வற்ற ஜடப் பொருள்போல் ஒவ்வொன்றிலும் பங்கு கொண்டார்.

சங்கரனும் லீலாவும் மணப் பந்தலிலிருந்து எழுந்து ஒவ்வொரு பக்கம் சென்றபோது லீலாவின் சேலைத் தலைப்பு இழுபட, சங்கரனின் வேஷ்டியும் இழுபட்டது. எல்லாம் கீதாவின் துஷ்டத்தனம். அவள்தான் அவ்விருவருக்கும் ஒரு வாழை நாரால் இறுக்க முடிச்சு போட்டு வைத்திருந்தாள். இருவரும் இழுபடவே கீதாவும் மற்றச் சிறுமிகளும் கை கொட்டி ஆரவாரித்துச் சிரித்தனர். அங்கிருந்த பெரியவர்கள் தங்களுக்குள், 'ஐயோ, இப்படியும் ஒரு வெகுளியான குழந்தை இருக்குமா?' என்று கீதாவுக்காக அங்கலாய்த்தனர். சங்கரனுக்குக் கீதாவுடைய செய்கை முள்ளைப்போல் குத்தியது. அதே சமயத்தில் லீலாவின் மனமோ 'சமர்த்துக் குழந்தை' என்று அன்பினால் நிரம்பியது. பெண்கள் விவாகத்தின் போது பரிகாசத்தை விரும்புபவர்கள்தானே! அதுவும் தான் எடுத்து வளர்க்கப் போகும் பெண், தன்னிடம் பேதமில்லாமல் ஒட்டிக் கொண்டதும் அவள் மனம் எல்லையற்ற ஆனந்தத்தினால் நிரம்பியது.

குழந்தைகளுக்கே கல்யாணப் பெண்ணிடமோ பிள்ளையிடமோ ஒட்டி ஒட்டிப் பழகுவதென்றால் ரொம்பவும் ஆனந்தம். அவர்களிடம் இருவரும் பேசி விட்டாலும் குழந்தைகளுக்கே கர்வம் ஏறிவிடும். லீலா மணையில் உட்கார்ந்திருந்த போதும் அவளுக்குப் பக்கத்திலேயே உட்கார வேண்டுமென்று பிடிவாதம் செய்தாள் கீதா. லீலாவும் அன்போடு அவளிடம் பேச ஆரம்பித்ததும் அவள் ஆனந்தம் எல்லை மீறியது. எல்லாக் குழந்தைகளிடமும் போய் ஜம்பமாக ''கல்யாணப் பெண் எங்க அம்மாவாக்கும். கல்யாணப் பிள்ளை எங்க அப்பாவாக்கும்!'' என்று கூறிக் கொண்டாள்.



லீலா புக்ககம் வந்து, அதாவது குடும்பம் என்று ஆரம்பித்து ஒரு வாரம் ஆயிற்று. ஆனால் தன் வாழ்வு இவ்விதம் வறண்ட பாலைவனமாக இருக்கும் என்று நினைக்க வில்லை அவள். சங்கரன் அவளிடம் நேரிடையாக ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஏதாவது வேண்டுமென்றால் கீதாவைத் தூது அனுப்பினார். கீதாவுக்கு இது வேடிக்கையாக இருந்தது. ஆனால் கீதாவைப் போல் குழந்தை அல்லவே லீலா! கணவர் தன்னை மதிக்கவில்லை என்பதை அவள் நன்றாகப் புரிந்து கொண்டு விட்டாள். அவர் அவளிடம் பேச விரும்பவில்லை. யார் சொல்லுக்கோ பயந்து விவாகம் செய்து கொண்டு விட்டார். ஆனால் மனைவி என்ற ஸ்தானத்தில் அவளை வைக்க விரும்பாமல், ஒரு கொடூரமான இளையாளாக அவளுக்கு மதிப்பு கொடுத்தால் தலைக்கு மேல் ஏறி விடுவாள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார். உண்மையில் எந்தக் குழந்தை அவளிடம் பயப்பட வேண்டுமோ, அந்தக் குழந்தை ஒட்டிக் கொண்டு பழகியது. ஆனால் அன்பு செலுத்த வேண்டியவர் அவளை வெறுத்துத் தள்ளுகிறார்.

கீதா லீலாவோடு ஒட்டிப் பழகினாள். சதா அவளை 'அம்மா' என்று கூப்பிட்டு அவள் அருகிலேயே விளையா

டிக் கொண்டிருப்பாள். அவளை ஏதாவது கேள்வி கேட்டு நச்சரித்துக் கொண்டிருப்பாள். பள்ளிக்கூடப் பாடங்களை அவளிடம் உட்கார்ந்து படிப்பாள். இரவு வேளைகளில் அவள் மடியில் படுத்துத் தூங்கினால்தான் அவளுக்குத் தூக்கம் வரும். காலையில் எழுந்ததும் 'அம்மா!' என்று கூப்பிட்டுக் கொண்டே எழுந்திருப்பாள். 'நான் உனக்குச் சித்தி, அம்மா இல்லை!' என்று லீலா விளையாட்டாகக் கூறினாலும், கீதா சட்டென்று அவள் வாயைப் பொத்தி, 'ஊஹூம், நீ எனக்கு அம்மாதான்!' என்று கூறிச் சுவாதீனமாக அவள் மடியில் உட்காருவாள். 'இந்தக் குழந்தை ஏன் இப்படிப் பழகுகிறது?' என்று கீதாவை வியப்புடன் நோக்கித் தலையை அன்புடன் கோதி விடுவாள் லீலா.

சங்கரன் ஒரு யந்திரமாக மாறி இருந்தார். காலையில் எழுந்து குளித்து விட்டுப் பத்திரிகை பார்ப்பார். மணியானதும் தாமே தட்டை எடுத்துச் சாதம் போட்டுக் கொள்வார். லீலாவாகச் சங்கேதம் அறிந்து சாதம் போடுவாள். இரவு எட்டு மணிக்கு வீடு திரும்பித் தாமே தட்டை எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிட்டு விட்டுப் பிறகு படுக்கையைப் போட்டுக் கொண்டு படுத்து விடுவார். வீட்டுக்குச் செலவுக்கான பணத்தைக் கீதாவின் மூலமாக லீலாவிடம் சேர்த்து விடுவார். இவ்விதம் செய்வதால் கமலாவுக்குச் செய்து விட்ட 'துரோகத்துக்காகப் பிராயச்சித்தம் செய்கிறோம்' என்று எண்ணியிருந்தார்.

எவ்வளவு ஒதுங்கியிருந்தும் ஒவ்வொரு சமயம் இரவு வேளைகளில் கமலா ஆவி ரூபமாக வந்து அவரைப் பல கேள்விகள்கேட்டு, இரண்டாவது விவாகம் செய்து கொண்டதற்காக அவரைக் கடிந்து கொள்வது போல் தோன்றும். அவர் பயந்து நடுநடுங்கி இரு கண்களையும் கெட்டியாக மூடிக் கொண்டு விடுவார். தம்முடைய இப்படிப் பயந்து நடுங்கும் மனோபாவத்தின் காரணமாகக் கீதாவும் லீலாவும் எவ்விதம் பழகுகிறார்கள் என்று பார்க்கவே அவருக்குத் தோன்றவே இல்லை.

காலம் தன் கதியில் சென்று கொண்டிருந்தது. சங்கரனின் ஒருதலைப்பட்சப் போக்கினால் லீலா மிகவும் மனம் நொந்து விட்டாள். தற்கால ஆண்களைப் போல் சங்கரன் சதா தன்னைச் சுற்றி வரவேண்டுமென்று அவள் விரும்பவில்லை. ஆனால் மனைவி என்ற ஸ்தானத்தைத் தனக்கு அளித்துச் சகஜமாகப் பழகக் கூடாதா என்று தான் அவள் தவித்தாள். ஒரு குடும்பத்தில் ஒரு பெண்ணுக்கு வேறு என்ன வேண்டும்? கீதாவின் அன்பு அவளுக்குச் சற்று ஆறுதல் அளித்தாலும், வறண்ட வாழ்க்கை என்னும் பூமியில் இரு நீர்த் துளிகள் போல்தான் இருந்தது. அவ்வன்பு வாழ்க்கையைப் பசுஞ்சோலையாக்க முடியுமா?

மன நோய் உடலையும் தன் வேட்டைக்கு இலக்காக்கி, உடலைப் பாதிக்க ஆரம்பித்தது. அடிக்கடி ஜுரம் என்றும், தலைவலி என்றும் பாதிக்கப்பட்டாள் லீலா. கீதாவின் மூலம் சங்கரன் லீலாவின் உடல் நிலையை அறிந்தும், அதை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. அவர் வரையில், அவர் வாழ்க்கையில் லீலா இருப்பதும் ஒன்றுதான்; இல்லாததும் ஒன்றுதான். சொல்லப் போனால் அவள் இல்லாமல் இருந்தால் தம் மனப்பாரம் குறைந்து விடும் போல் அவருக்குத் தோன்றியது.

லீலாவும் தன் முடிவை ஆவலுடன் எதிர்பார்த்தாள். காலன் ஏன் இன்னும் தன்னை அழைத்துச் செல்லாமல் ஆட்டி வைக்கிறான் என்றுதான் அவளுக்குத் தோன்றியது. அதனால் கீதா அன்புடன் வாங்கி வந்த மருந்தை அவளுக்குத் தெரியாமல் சாக்கடையில் கொட்டினாள். கீதா எவ்வளவு கூறியும் கேளாமல் ஜுரத்திலும் படுக்காமல் உடலை வருத்தி வேலை செய்து நோயை அதிகமாக்கிக் கொண்டாள்.

லீலாவின் நோயினால் அதிகமாகப் பாதிக்கப்பட்டவள் கீதாதான். அவளுக்கு ஒன்றிலுமே புத்தி ஓடவில்லை. சதா 'அம்மா, அம்மா' என்று அவள் அருகில் உட்கார்ந்திருந்தாள்.

அன்று லீலாவுக்கு ஜுரம் சற்று அதிகமாக இருந்தது. ஞாயிற்றுக் கிழமையாதலால் சங்கரனும் வீட்டில்தான் இருந்தார். லீலா சமையலறையில் ஒரு மூலையில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தாள். கீதா அவளைப் பார்த்ததும் சற்றுப் பயந்து விட்டாள். கமலா அம்மாவைப் போல், லீலா அம்மாவும் போய் விடுவாளோ? கமலா அம்மாவின் நினைவு அன்றுதான் அவளுக்குத் தெளிந்த ரூபத்தில் வந்தது. அந்த நினைவு வந்ததும் அவளுக்குச் சட்டென்று வேறொரு விஷயமும் நினைவுக்கு வந்தது.

உடனே பரக்கப் பரக்கத் தன் அறைக்கு ஓடினாள். தன் பெட்டியைத் திறந்து மேலும் கீழுமாகப் புரட்டி ஒரு கவரை எடுத்துக் கொண்டு லீலாவிடம் ஓடோடி வந்தாள்.

பிறகு லீலாவிடம், "அம்மா! நீ என்னைக் கோபித்துக் கொள்ளமாட்டாயே? நீ இந்த வீட்டுக்கு வந்ததுமே கமலா அம்மா இதை உன்னிடம் கொடுக்கச் சொன்னாள். நான் மறந்து விட்டேன். நீ கோவிச்சக்கலேன்னு சொன்னால்தான் கொடுப்பேன்" என்று கவரை அவளிடம் கொடுக்காமலே கூறினாள்.

லீலா திடுக்கிட்டாள். மூத்தவள் அவளுக்காக என்ன விஷயம் தயார் செய்து எழுதி வைத்திருக்கப் போகிறாள்? அவள் குழந்தையைத் துன்புறுத்தப் போகிறாளோ என்று ஏதாவது கண்டித்து எழுதி வைத்திருப்பாளோ? ஆவலினால் தூண்டப்பட்டு, "கீதா, நான் என்றாவது உன்னைக் கோபித்தது உண்டா? அந்தக் கடிதத்தை கொடு" என்றபடி கடிதத்தை வாங்கிப் படித்தாள்.

கடிதத்தில் இருந்த ஒவ்வொரு வாக்கியத்தையும் ஒவ்வொரு வரியையும் படிக்கப் படிக்க அவள் உள்ளம் சிலிர்த்தது. பிறகு உணர்ச்சி மேலிட்டவளாய், "அக்கா! உங்கள் தங்கமான குணத்தினால் குழந்தையும் தங்கமாக இருக்கிறாள். கீதா! நான் இனி மரணத்தை வரவேற்க மாட்டேன். கமலா அம்மாவின் கோரிக்கையை நிறைவேற்றுவேன். உனக்கு என்றென்றும் அம்மாவாக இருப்பேன்" என்று இரைந்து கூறினாள். பிறகு உள்ள உணர்ச்சிவெள்ளத்தை எதிர்க்கச் சக்தியற்றவளாய் அப்படியே மயக்கமாகக் கீழே விழுந்து விட்டாள்.

கீதா திடுக்கிட்டு விட்டாள். அதனால் லீலா மயக்கமாக விழுந்ததும், அவள் பயந்து, அக்

# நாசூக்கான தோற்றம்... சிறந்த உழைப்பு

# ...புதிய நேஷனல்-எக்கோ மாடல் 270/1

## நவீன அம்சங்களுடன் திகழ்கிறது!

'நியூ குமார்' ரேடியோ பல புதிய அம்சங்களுடன் தலைசிறந்து விளங்குகிறது. இதன் மேன்மையான டோன் கண்ட்ரோல், மற்றும் ஸ்டேஷன்களை சுலபமாகவும் நுட்பமாகவும் கிடைக்கச் செய்யும் பெரிய டியூனிங் ஸ்கேலும் நிகழ்ச்சிகளை வெகு தெளிவாகக் கேட்கச் செய்கின்றன. இதன் விசேஷ அம்சங்கள்:

- ★ 5 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள்
- ★ வேண்டும்படி நுட்பமாக அட்ஜஸ்ட் செய்யக்கூடிய டோன் கண்ட்ரோல்
- ★ மிக சுலபமாகவும், நுட்பமாகவும் ட்யூன் செய்யக்கூடிய பெரிய (7") ட்யூனிங் ஸ்கேல்
- ★ தனிச்சிறந்த மரத்தால் அழகாக செய்த மிகப்பெரிய பெட்டி
- ★ கிராமபோன் பிக்-அப் மற்றும் எக்ஸ்டென்ஷன் ஸ்பீக்கர் இணைக்க வசதி



**நேஷனல்-எக்கோ மாடல் 270/1:** மாடல் A270/1 ஏ.ஸி. மின்சார சக்தி கொண்டும், U270/1 ஏ.ஸி./டி.ஸி. மின்சார சக்திகொண்டும் இயங்குகிறது. பல விசேஷ அம்சங்கள் கொண்டுள்ள இதன் விலை

**ரூ. 300/- நெட்;**

உள்ளூர் வரிகள் தனி. எந்த நேஷனல்-எக்கோ ரேடியோ வியாபாரியிடமும் இதை இயக்கிக் காண்பிக்கச் சொல்லுங்கள்! பணம் தவணைகளில் கொடுத்தாலும் போதுமானது.





**நேஷனல்-எக்கோ ரேடியோக்கள் சிறந்தவை—அவைகள் மான்ஸூனைஸ்* செய்யப்பட்டவை**

* நேஷனல்-எக்கோ ரேடியோக்கள் உஷ்ண பிரதேச சீதோஷ்ண நிலைமை சமாளிக்க வழக்கத்தைவிட பதினாறு மடங்கு அதிகமாக பாதுகாப்பு அளிக்கப்பட்டவை

**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸஸ் பிரைவேட் லிமிடெட்**

ஆபேரா ஹவுஸ், பம்பாய் 4 • 3, மதன் ஸ்ட்ரீட் கல்கத்தா 13 • 1/18, மௌண்ட் ரோடு, மதராஸ் • 86/79, சில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பங்களூர் • ஜோர்த்தியன் காலனி, சாந்தினி சௌக், டில்லி

G.R.A. 5063

கடிதத்தையும் கையிலெடுத்துக் கொண்டு நேராகச் சங்கரனிடம் ஓடினாள். "அப்பா, அப்பா! இதோ பார். லீலா அம்மா மயக்கமாக விழுந்து விட்டாள். அவளிடம் சுசீலா அம்மா இந்தக் கடிதத்தைக் கொடுத்துவிடச் சொல்லி யிருந்தாள் நான் இவ்வளவு நாட்களாக மறந்துவிட்டு இன்றுதான் கொடுத்தேன். லீலா அம்மா அதைப் படித்து விட்டு அப்படியே மயக்கமாக விழுந்து விட்டாள்" என்று படபடப்புடன் கூறினாள் கீதா.

சங்கரன் திடுக்கிட்டார் "என்ன! சுசீலா கொடுக்கச் சொல்லியிருந்தாளா?" என்று திகைப்புடன் கேட்டார்.

"ஆமாம் அப்பா. அம்மா செத்துப்போவதற்கு முன்னால் என்னைக் கூப்பிட்டு, 'கீதா, நான் செத்துப் போய்விடுவேன்னு அழாதே. நான் இன்னொரு அம்மாவாக வந்துவிடுவேன். அப்போதும் நீ இப்படியே சமர்த்தாக இருக்கணும்....இதோ பார், இந்தக் கடிதம் ஒன்று தருவேன். நான் இன்னொரு அம்மாவாக வருகிறபோது இந்தக் கடிதத்தை மறக்காமல் கொடுத்துவிடு'ன்னு சொன்னாள்..."

இதைக் கேட்ட சங்கரன் திடுக்கிட்டு விட்டார். கீதா லீலாவிடம் 'அம்மா, அம்மா' என்று ஒட்டிப் பழகுவதின் காரணமும் இப்பொழுது கொஞ்சம் விளங்கியது. மேலும் கடிதத்தில் சுசீலா என்ன எழுதியிருக்கப் போகிறாள் என்று ஆவல் தூண்ட அதைப் படிக்க ஆரம்பித்தார்.

அன்புமிக்க சகோதரிக்கு,

உன் வரவு நல்வரவாகுக. நீ என்னைப் பார்த்திருக்க மாட்டாய். நானும் உன்னைப் பார்க்கப் போவதில்லை. ஆயினும் என் கீதாவுக்கு நீ தாய் ஸ்தானத்தை வகிக்கப் போகிறாய் என்பதை அறிந்து பெருமிதமடைகிறேன். நீ கீதாவிடம் தாய்க்குரிய அன்பைச் செலுத்துவாய் என்பதை நான் பூரணமாக அறிவேன். ஏனெனில் நீ பெண்ணாயிற்றே! பெண்ணின் மனத்தில் அன்பு ஊற்று என்றுமே வற்றாது.

கீதாவும் இதுவரை சமர்த்துப் பெண்தான். உன்னையும் அம்மாவாக அவள் நினைக்கும்படி நான் போதித்திருக்கிறேன். ஆகையால் நீயும், நான் உன் உருவில் வந்திருப்பதாக அவள் அறியும்படி செய்து விட்டால் அண்டை அயலார்களால் அவள் மனத்தில் விஷவித்து ஊன்றி விடாது.

சகோதரி! என் ஸ்தானத்தில் ஒரு இளையவள் வந்து வீட்டில் நிர்வாகம் செய்வதை நான் வெறுப்பேன் என்று நினைக்காதே. அப்படி வெறுத்தால் நான் முட்டாள்தான். ஒரு ஸ்திரீதான் குடும்ப வாழ்க்கை நதியைக் கடக்கச் சிறந்த படகு. நான் போன பிறகு, என் இடத்தில் ஒருத்தி வந்து என் கணவருக்கு—இல்லை, நம் கணவருக்குப் பணிவிடை செய்து அவர் உள்ளமும் உடலும் நோகாமல் பாதுகாக்க வேண்டும்.

என் உயிர் போகுமுன் கீதாவின் தந்தையிடம் கீதாவின் நலனுக்காக அவர் கண்டிப்பாக விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்று கூறிவிடுகிறேன் புருஷர்கள் சற்று முன் பின் இருந்தாலும் பெண்கள் சமாளித்துச் செல்லும் குணம் படைத்தவர்கள். ஆகையால் என் கீதாவுக்கு உன்னைத் தாய் ஸ்தானத்தில் நான் வரவேற்கிறேன்.

கடைசியில் ஒரு வேண்டுகோள். இன்ப வாழ்வில் சில புல்லுருவிகளும் இருப்பார்கள். உன்னைக் கலக்கப் பார்த்தாலும் நீ கலங்க மாட்டாய் என்றுதான் நான் நினைக்கிறேன். அப்படியே கலங்கினாலும் அச் சமயத்தில் இக் கடிதத்தைப் படித்துவிடம்மா! அத்துடன், அச் சமயம் கீதாவைக் கூப்பிட்டு 'அம்மா, அம்மா' என்று உன்னைப் பத்து தடவைகள் கூப்பிடச் சொல். அன்பு ஊற்று மீண்டும் பீறிட்டு எழுந்துவிடும்.

ஜுர வேகத்தில் எழுத்துக்கள் நேராக எழுத முடியவில்லை. ஆயினும் என் மனோபாவத்தைப் புரிந்து கொண்டிருப்பாய் என நம்புகிறேன். உன் அன்பான சகோதரி

சுசீலா.

கடிதத்தைப் படித்த சங்கரன் உணர்ச்சி மேலிட்டவராய் 'சுசீலா!' என்று அலறி அவள் படத்தினருகே சென்றார். கண்களில் கண்ணீர் மடமட வென்று கொட்டியது. அவள் இறக்கும் தறுவாயில் சொல்ல வந்தது அவருக்கு நன்றாக விளங்கி விட்டது. எந்த நடவடிக்கை மூலம் இறந்துபோன சுசீலாவை அவர் திருப்திப் படுத்துவதாக எண்ணியிருந்தாரோ, அந்த நடவடிக்கை இப்பொழுது சுசீலாவின் மனோரதத்துக்கு எதிராக அமைந்திருந்தது. எவ்வளவு தங்கமான மனத்துடன் கீதாவுக்காக ஒரு இளையவள் வரவேண்டுமென்று அவள் விரும்பினாள்! ஆனால் அவரோ கொடூரமான மனத்துடன் கீதாவின் நலனுக்காகச் செய்வது போல் இளையவளை வெறுத்து, அவள் வாழ்வையும் பாழடிக்கிறார். இனியாவது சுசீலாவைப் புரிந்து கொண்டு, அவள் ஆத்மா சாந்தி அடைய லீலாவிடம் அன்பாக இருக்க வேண்டும்.

உடனே ஒரு தீர்மானத்துக்கு வந்தவராய் வேகமாக லீலா விழுந்திருந்த இடத்தை நோக்கிக் கீதாவையும் இழுத்துக் கொண்டு ஓடினார் சங்கரன்.

ஐயையோ, இது லீலாவா? விவாகத்தின் போது இருந்த அந்த வாளிப்பான உடலுக்குப் பதில் இந்த எலும்புக் கூடு உடல் எங்கிருந்து வந்தது; சதா புன்னகை பூத்த முகம் ஏன் இப்படி வாடிவிட்டது? சங்கரனின் மனம் அவரை இடித்துக் காட்டியது. மேலும் தயங்காமல் கொஞ்சம் நீரை எடுத்து மயக்க நிலையிலிருந்த லீலாவின் முகத்தில் தெளித்தார். லீலா மெதுவாக அசைந்து கொடுத்தாள். 'லீலா!' என்று அன்பொழுகக் கூப்பிட்டார் சங்கரன்.

ஆஹா! எங்கிருந்து இந்த அமிருததாரை காதில் விழுகிறது! சுவர்க்கமோ, இந்திர போகமோ! உள்ளம் உவந்தவளாக லீலா சற்றே கண்களைத் திறந்தாள். தன் கைகளைப் பிடித்துத் தன்னையே நோக்கியவாறு அருகில் சங்கரன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும், அவள் ஆனந்தமேலீட்டினால் கண்ணீர் உகுத்துச் சங்கரனின் கைகளை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

பிறகு அவர் கைகளை மார்போடு அணைத்தபடி "இனி எனக்கு ஒரு குறையும் இல்லை. நான் பிழைத்து விடுவேன்" என்றாள் லீலா.

# பினிக்ஸ் உங்களை அழகு படுத்துகிறது

Ruia
fabrics

**பினிக்ஸ் ப்ரிண்ட்ஸ், வாயில்கள், லீனேஸ்**

அழகு வாய்ந்த பினிக்ஸ் ப்ரிண்ட்ஸ், வாயில்கள் மற்றும் லீனேஸ் இவைகளை உபயோகியுங்கள். உங்கள் வனப்பை எடுத்துக்காட்ட அவை உதவுகின்றன. உங்களுக்கு மகிழ்ச்சி உண்டாக்கும் முறையில் அவை தயாரிக்கப்பட்டவை. நாள் முழுவதும் அணிந்தபோதிலும் அவை மொற மொறப்பையும் புதுமையையும் இழக்கமாட்டா.

அவை நேர்த்தியானவை என்பதை
நீங்கள் **உணர்வீர்கள்**



தி பினிக்ஸ் மில்ஸ் லிமிடெட், லோயர் பரேல், பம்பாய்—13

தெலுங்குக் கதை ✣ மதுராந்தகம் ராஜாராம்

# உலர்ந்த மரம்

மொழிபெயர்ப்பு ✣ பிரியதர்சினி

'பாம்! பாம்!' என்று காரின் ஹாரனை முடுக்கினான் சூரியா. ஹாரன் சத்தத்தைக் கேட்டவுடனே தோட்டக்கார ராமன் ஓடோடியும் வந்து கேட்டைத் திறந்து விடுவது வழக்கம். ஆனால் இன்று அவனுக்கு ஹாரன் ஒலி காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. சூரியா அலுப்புடன் சுற்றிலும் நோக்கினான். அவ்வாறு அவன் பார்த்த கணத்திலேயே, ஒரு கை முடமான கிழவன் ஒருவன் புதிதாகச் சூரியாவின் வாழ்க்கையில் பிரவேசித்தான்.

கறுப்பும் வெளுப்பும் சமானமாகக் கலந்திருந்த தாடி, முழுவதும் நன்றாக நரைத்து விட்ட புருவங்கள், ஆழங்கணக்கிட முடியாத பள்ளத்தாக்குகளை நினைவூட்டும் அக்கண்கள், மலை உச்சியைப்போல மேலெழுந்த அம்மூக்கு, ஈரமே யில்லாமல் உலர்ந்துவிட்ட அவ்வுதடுகள் - இவற்றோடு வேஷமும் அவன் உருவத்துக்குத் தக்கபடிதான் அமைந்திருந்தது. நான்கு முழத்துண்டு ஒன்று அவன் முழங்கால்கள் வரை தொங்கிக் கொண்டிருந்தது. உலர்ந்துவிட்ட மாவிலை போன்ற அவன் நிறத்தைக் கிழிசல்களின் மூலம் எடுத்துக் காட்டிக் கொண்டு பழைய கோட்டு ஒன்று அவன் உடலில் ஒட்டியவாறு நின்றது.

கார் நேராக, பங்களாவுக்குள் நுழைந்து விட்டிருந்தால், சூரியா அந்தக் கிழவனை அவ்வளவு ஊன்றிப் பார்த்திருக்க முடியாது. கார் இரும்பு 'கேட்'டை இடித்து விட்டு இரண்டு கெஜம் பின்னால் நகர்ந்து, அசையாமல் நின்றது. நல்ல வேளை! எது எப்படியானாலும் அதிருஷ்டவசமாக விபத்து ஒன்றும் ஏற்பட்டு விடவில்லை.

'ஹார்'னை அழுத்தியவாறே, கால்வாய்க்குப் பக்கத்தில் வாராவதிக் கல்மேல் சாய்ந்து கொண்டிருந்த கிழவனை நோக்கினான் சூரியா. சந்தர்ப்பத்தைப் புரிந்து கொண்டு அவனாகவே வந்து 'கேட்'டைத் திறந்துவிடுவானென்றும் சூரியா எதிர்பார்த்தான். ஆனால் அப்படியொன்றும் நடைபெறவில்லை. அதென்ன விசித்திரமோ, அந்தக் கிழவன் இந்தப் பரந்த உலகில் முன்பு எப்போதும் மனிதனையே பார்த்தறியாதவனைப் போல் சூரியாவையே அதிசயத்துடன் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தான்.

''இதோ, உன்னைத்தான்! அந்தக் 'கேட்'டைக் கொஞ்சம் திறக்கக் கூடாது?'' என்று அதிகாரத்தோடு கேட்டான் சூரியா.

கிழவன் காருக்கு அருகில் வந்து, வலக் கையை எடுத்துக் காதுக்குக் குறுக்கே திருப்பியவாறு, தனக்குக் காது கேட்காதென்பதைச் சைகை மூலம் தெரியப்படுத்தினான்.

''சரிதான், சரிதான்! எல்லாவற்றுக்கும் மேலே இதுவும் ஒன்றா? நன்றாகத்தான் இருக்கிறது'' என்று எண்ணியபடி சூரியா ஜேபியில் கையை விட்டான். ஒரு கால் ரூபாய் நாணயம் மேலே வந்தது. ''வாங்கிக் கொள்'' என்றவாறே சூரியா கையை நீட்டினான்.



பிச்சையெடுக்காமலேயே கிடைத்த நான் கணா நாணயத்துக்காக ஆவலுடன் கையை நீட்டவேண்டியது போக, அந்தக் கிழவன், உலகப் படத்தில் ஏதோ ஒரு மூலையிலுள்ள ஊரைத் தேடும் கல்லூரி மாணவனைப் போலச் சூரியாவின் முகத்துக்குள் தீட்சண்யமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்!

சூரியாவுக்கு ஆத்திரமாக வந்தது. காரை விட்டு இறங்கி, தானே 'கேட்'டைத் திறந்து கொள்வதைக் காட்டிலும் வேறு வழியில்லை யென்று தோன்றவே அவன் எழுந்திருக்கப் போனான். ஆனால் அதற்குள் 'இரச்' சென்ற வாறே 'கேட்' திறந்து கொண்டது.

''கொய்யாச் செடிக்கு ஒட்டு கட்டிக்கொண்டிருந்தேனுங்க. ஹார்ன் சத்தம் கேட்கவில்லே. அம்மா கூப்பிட்டுச் சொன்னாங்க'' என்றவாறு ராமன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.

''இதை வாங்கிக்கொண்டு அவனைப்போகச் சொல், ராமா! வரவர இந்தப் பிச்சைக் காரர்களுக்கு ஆசை அதிகமாகிவிட்டது. எவ்வளவு கொடுத்தாலும் இன்னும் பறிப்பதிலேயே கண்ணாக இருக்கிறார்கள்'' என்று சூரியா அந்த நாலணாக் காசை ராமன் கையில் போட்டு விட்டு, மறுபடியும் காரை 'ஸ்டார்ட்' செய்தான்.

* * *

அன்று வழக்கில் சூரியாவுக்கு மாபெரும் வெற்றி கிடைத்தது. பிரதிவாதியின் வக்கீல், வக்கீல் தொழிலிலேயே தலை நரைத்தவர். முன்பெல்லாம் அவர் சூரியாவைச் சந்திக்கும் போதெல்லாம் 'சிறுபையன், இவனுக்கென்ன தெரியும்?' என்ற பாவம் முகத்தில் விளங்க, அலட்சியமாக ஒரு புன்னகையை வீசுவார். சூரியாவுக்கு அந்தப் புன்னகையை விட நம்பத்தால் அறுபட்டாலும் தேவலை என்று இருக்கும். அப்படிப்பட்ட வக்கீல், இன்றைக்கு இந்தச் சிறு வக்கீலினிடமும் சரக்கு இல்லாமற் போகவில்லை என்று அறிந்து கொண்டார்.

சூரியா சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டு, நீரஜாவின் தளிர்க் கரங்களால் அளிக்கப்பட்ட காப்பியின் இனிமையில் தன்னை மறக்கலானான்.

தாமரைத் தண்டு போன்ற தன் குளிர்ந்த கரத்தைச் சூரியாவின் தோள்மேல் வைத்து, ''என்ன? இன்று ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?'' என்று வினவினாள் நீரஜா.





சூரியா சாய்வு நாற்காலியில் நன்ருகச் சாய்ந்து கொண்டான். "ஒன்றுமில்லே, நீரஜா! காலையில் கண் விழித்தவுடன் நிலேக் கண்ணுடியின் முன்பு நெற்றிக்குக் குங்குமம் இட்டுக் கொண்டிருந்த உன்னேப் பார்த்தே னல்லவா? அப்போதே நினைத்தேன், இன்று நம் பேச்சுக்கு மறு பேச்சு கிடையாதென்று. அது கோர்ட்டல்ல, குருக்ஷேத்திரம். குரு கிழவனுர் வேறு, எதிரி வக்கீல் ராமராவ் வேறு என்று நினைக்காதே. அப்படிப்பட்ட ராமராவ் வாய்க்கே இன்று பூட்டு விழுந்த தென்ருல், பார்த்துக் கொள்ளேன்" என்ற வாறே நீரஜாவைத் தன் அருகில் இழுத்துக் கொள்ளப் பார்த்தான்.

கையை விடுவித்துக் கொண்டு ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு அமர்ந்தாள் நீரஜா. "உங்களுக்கென்ன? கோர்ட்டுக்குப் போகிறீர்கள், குஸ்தி பிடிக்கிறீர்கள், அப்படியே கிளப்புக்குப் போய் நேரமெல்லாம் கழித்து விட்டு இரவு எட்டுக்கோ ஒன்பதுக்கோ வீட்டுக்கு எழுந்தருளுகிறீர்கள். இந்த வீட்டில் நான் 'திக் திக்'கென்று பயந்து கொண்டு தனியாக சுயோட்ட வேண்டும். கடைத்தெருவுக்கென்றும், மார்க்கெட்டுக் கென்றும் ஒரு நாளைக்கு ஐந்தாறு தடவைகளாவது ராமன் ஊருக்குள் போய் விடுகிருன். சமையற்காரியோவென்ருல் இரண்டு வேளைகளும் வந்து ஒன்றிரண்டு மணிகளுக்குள்ளேயே தன் வேலையை முடித்துக் கொண்டு போய் விடுகிருள். தனியாக வீட்டில் இருக்கும் போது,-நீங்கள் சிரிப்பீர்கள், எனக்குத் தெரியும். பகலில்கூடத் திருட்டுப்பயமென்ன என்று உங்கள் எண்ணம். ஆனல் எனக்கென்னமோ பயமாக இருக்கிறது. பட்டப்பகலிலேயே கொள்ளைகள் நடப்பதாகப் பத்திரிகைகளில் செய்திகள் வருகின்றன. உங்களுக்குப் புண்ணியமுண்டு. போனல் போகிறது. இருபது ரூபாயை நம்முடையதல்ல வென்று நினைத்துக் கொள்ளுங்கள். 'கேட்' அருகில் ஒரு காவற்காரன் இருந்தால் எனக்கு நிம்மதியாக இருக்கும்" என்ருள்.

இந்தப் புது யோசனையைப் பற்றிச் சூரியா முழுவதும் யோசிப்பதற்கு முன்பே நீரஜா தொடர்ந்தாள்: "உங்களிடம் எத்தனை முறை சொன்னலும் லாபம் இருக்காது. ராமவிடம் ஒரு தடவை சொன்னேனே இல்லேயோ உடனே அவன் ஒருவனே அழைத்து வந்து காட்டினன்."

"அப்படியா?" என்று ஆச்சரியத்தை வெளிக்காட்டினன் சூரியா.

"சொன்னல் நீங்கள் நம்பவே மாட்டீர்கள். நானும் எத்தனையோ கூர்க்காக்களைக் கண்டிருக்கிறேன். இவன் முன் அவர்கள் எதற்கும் உபயோகமில்லே. அது மட்டுமல்ல! இன்னெரு விசித்திரம்! அவனுக்கு இரண்டு வேளைகளிலும் இவ்வளவு சோறு போட்டு விட்டால் போதுமாம்! சம்பளம் வேண்டுமாவென்ருல், வேண்டாமென்று கண்டிப்பாகச் சொல்கிருன். எதற்காவது உபயோகமாக இருக்குமென்று ஒரு ஐந்தோ பத்தோ வாங்கிக் கொள்ளச் சொன்னேன். இன்னென்று. பாவம்! அந்தக் கிழவனுக்கு இடது கை முழங்கை வரையில் இல்லே. என்னவாயிற்றென்று கேட்டேன். எங்கோ 'ரைஸ் மில்'லில் இரண்டு மாதங்கள் வேலே செய்தானும். சக்கரத்தில் கை அகப்பட்டுக் கொண்டு நசுங்கி விட்டதாம். தர்ம ஆஸ்பத்திரியில் முழங்கை வரையில் எடுத்து விட்டார்கள் என்று சொன்னன். அத்துடன் முடிந்து விட்டதென்று நினைக்கிறீர்களா? ஊஹூம். ஒரு தடவை மலேரியா வந்தபோது அவனல் முடிந்த அளவு கொயினு மாத்திரைகளே

விழுங்கி வைத்தாலும். அதனால் அவனுக்கு டமாரச் செவிடொன்றும் வாய்த்தது. அவன் யாரோ பாவம்! அவனைப் பார்த்தால் இதயத்தை வாள் கொண்டு அறுக்கிறது!''

''உண்மைதான்'' என்று கூறிப் பெருமூச்சு விட்டான் சூரியா.

''அப்படியென்றால் நீங்களும் அவனைப் பார்த்தீர்களா, என்ன?'' என்று வியப்புடன் கேட்டாள் நீரஜா.

''காலையில் ஸ்டேஷனிலிருந்து திரும்பி வரும்போது பார்த்தேன். மறுபடியும் கோர்ட்டுக்குப் போகும்போது ராமனுடன் பேசிக் கொண்டிருந்தான், பார்த்தேன். இவ்வளவு பெரிய பட்டணத்தில் அவன்தான் நமக்கு அகப்பட்டானா, அல்லது நாம்தான் அவனுக்கு அகப்பட்டோமா என்றுதான் சந்தேகமாக இருக்கிறது. இப்படிப்பட்டவர்களை நம்புவதற்கில்லை, நீரஜா! போகட்டும் போ. நீ அவனுக்கு உத்தியோகம் பார்த்துக் கொடுத்தாய். இதற்குள்ளேயே போகச் சொல்வது நன்றாயிருக்குமா?'' என்றான் சூரியா.

''அதென்ன அப்படிச் சொல்கிறீர்கள்? பார்த்தால் அநாகரிகமாக இருந்தாலும், அவன் நீங்கள் நினைப்பதுபோல் கெட்டவனாகத் தெரியவில்லையே!''

''அவன் கெட்டவனல்லவென்றே தற்போதைக்கு வைத்துக் கொள்வோம், நீரஜா! நான்கு நாட்களில் தானாகத் தெரிகிறது...... பாப்பா அப்போதே தூங்கி விட்டாளா, என்ன? எழுப்பிச் சாதம் போடு. நான் ஐந்து நிமிஷங்கள் ஓய்வெடுத்துக் கொண்டு சாப்பிட வருகிறேன்'' என்று கூறிக் கொண்டே கொட்டாவி விட்டு, கண்களை மூடிக் கொண்டான் சூரியா.

* * *

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. ஒன்றிரண்டு கட்சிக்காரர்கள் வந்து பேசி விட்டுப் போனார்கள். டிபன் சாப்பிட்டானதும் சூரியா பாப்பாவை எடுத்துக் கொண்டு மாடிக்குச் சென்றான். மாடியில் மேற்குப் புறத்தில் இருக்கும் அறையின் ஜன்னலைத் திறந்தால் தெருவில் போகும் கார்கள், பஸ்கள், ரிக்ஷாக்கள் அனைத்தும் ஸ்பஷ்டமாகத் தெரியும். பாப்பா கம்பிகளைப் பிடித்துக் கொண்டு ஜன்னலில் உட்கார்ந்தாள். ஏதோ வாரப் பத்திரிகையைப் புரட்டியவாறு ஜன்னலுக்குக் குறுக்காக நாற்காலியில் அமர்ந்தான் சூரியா.

''அப்பா, அப்பா! அதோ தாடித் தாத்தா! பாரேன்!'' என்றாள் குழந்தை.

சூரியா தலை நிமிர்ந்தான். கேட் மூடியிருந்தது. ஸ்டூலின் மேல் உட்கார்ந்திருந்த கிழவன் முன் தினம் போலவே அதே வேஷத்துடன், அதே பைத்தியக்காரக் கோலத்தில் காட்சியளித்தான்.

''நம் கேட்டிலே தாடித்தாத்தா எதுக்கு அப்பா உட்கார்ந்திருக்கார்?''

பாப்பாவுக்குச் சந்தேகம் தோன்ற ஆரம்பித்தால் பிறகு தன் படிப்பு மேலே ஓடாதென்று சூரியாவுக்கு நன்றாகத் தெரியும். புத்தகத்தை மூடி வைத்து விட்டு, ''தெரியாதா, பாப்பா உனக்கு? அவன் நம் வீட்டுக் காவற்காரன். எப்போதும் அந்தக் 'கேட்'டிலேயேயிருப்பான். நல்லவர்களைமட்டும் உள்ளே விடுவான். திருடன் யாராவது வந்தால் தாடித் தாத்தாவைப் பார்த்துப் பயப்பட்டு அப்படியே ஓடி விடுவான்'' என்றான்.

''திருடன் போலீஸ்காரனுக்கே பயப்பட மாட்டான். தாடித் தாத்தா அவனுக்கு ஒரு கணக்கா என்ன? போ அப்பா! உனக்கு ஒண்ணுமே தெரியல்லே!'' என்று கிளுகிளுவென்று சிரிக்கலானாள் பாப்பா.

சூரியா வியப்புற்றான். ''இந்தத் திருடர்கள் விஷயமெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது, பாப்பா?'' என்று வினவினான்.

''அம்மா சொன்னாளே!''

''சொல்வாள், சொல்வாள்!'' என்று அலுத்துக் கொண்டான் சூரியா. சிறுவர்களுக்கு வீரர்களின் கதைகளைக் கூறித் தைரியமும், வீரமும் உண்டாக்க வேண்டுமே யல்லாது திருடர்களின் கதைகளும், பிசாசுகளின் கதைகளும் சொல்லி, அவர்களைத் தங்கள் நிழலைக் கண்டு தாங்களே பயந்து கொள்ளும்படி செய்யக்கூடாதென்று நீரஜாவுக்கு அவன் ஆயிரம் தடவைகள் படித்துப் படித்துச் சொல்லியிருக்கிறான். ஆனால் அவள் அதைக் கேட்டால்தானே?

சூரியா பாப்பாவைக் கீழே இறக்கி விட்டான். ''நீ தெருவைப் பார்த்தது போதும். கூடத்துக்குப் போய்ப் பொம்மைகளோடு விளையாடிக் கொள்'' என்றான்.

பாப்பா உள்ளே ஓடிவிட்டாள். சூரியா பத்திரிகையை மேஜைமீது எறிந்து விட்டு கேட்டைப் பார்த்தவாறு நின்றான். சிந்தனையென்று ஒன்று வைத்துக் கொள்ளாவிட்டால் ஒன்றுமில்லை. ஆனால் அது மட்டும் அவனுக்கும் பாப்பாவைப் போலவே எத்தனையோ சந்தேகங்களைக் கிளப்புகின்றது.

தோட்டத்திலிருந்து அறைக்குள் வீசிய காலை இளங்காற்று உடம்பில் தவழத் தவழச் சூரியாவின் கண்கள் மூடிக்கொண்டன. நாற்காலியில் உட்கார்ந்தவாறே அவன் பத்துப் பதினைந்து நிமிடங்கள் தூங்கி விழுந்து, பிறகு எழுந்தான். பிறகு சூரியா ஒன்றும் தோன்றாதவனாக மறுபடியும் ஜன்னலருகிலேயே வந்து நின்றான்.

இந்தத் தடவை கிழவனின் நிலையில் மாறுதல் காணப்பட்டது. அவன் 'கேட்'டின் கம்பிகள் மேல் சாய்ந்துகொண்டு, தோட்டத்துக்குள் பார்த்துக் கொண்டிருந்தான்.



## உலகில் முதல் இடம்!

உலகில் உள்ள ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு விதத்தில் தனிச்சிறப்புடன், வேறு எந்த நாட்டிலும் காண முடியாத சில தனி அம்சங்களுடன் விளங்குகிறது. அவை சம்பந்தப்பட்டவரையில் அந்த நாடு உலக நாடுகளின் வரிசையில் முதல் ஸ்தானத்துக்கு உரியதாக இருக்கிறது. உதாரணமாக, சீன தேசத்தை எடுத்துக் கொள்வோம்- ஜனத் தொகையிலும் மொழியிலும் உலக நாடுகளுக் கெல்லாம் பெரியது சீனாதான். சீனாவில் உள்ள சுமார் 50 கோடி ஜனங்கள் சீன மொழி

和平的道路

பேசுகிறார்கள். அதற்கு அடுத்தபடியாக 27 கோடி மக்கள் ஆங்கிலமும் 20 கோடி பேர் ருஷ்ய பாஷையும், சுமார் 16 கோடி மக்கள் ஹிந்துஸ்தானியும் பேசுகிறார்கள். உலகில் உள்ள மொத்த ஜனத் தொகை 200 கோடியில் நாலில் ஒரு பங்கு மக்கள் சீன மொழி பேசுகிறார்கள் எனலாம்.

தோட்டத்தில் அவன் கருத்தை அவ்வளவு தூரம் கவர்ந்தது என்னவென்று தெரியாமல் சூரியா வியப்படைந்தான். இதற்குள் நந்திவர்த்தன செடியின் மறைவினின்றும் பாப்பா வெளிப்பட்டாள். சிறிதும் பயமோ தயக்கமோ இன்றி, பூப்பறித்தவாறே அவள் 'கேட்'டுக் கருகே சென்று கொண்டிருந்தாள்.

அந்தக் கணத்திலேயே, சூரியாவின் மூளையில் ஒரு புது சந்தேகம் எட்டிப் பார்த்தது. அது தோன்றியதும் அவன் நின்ற நிலையிலேயே நடு நடுங்கிப் போனான். ஒரு வேளை இந்தக் கிழவன் சிறுவர்களைத் தூக்கிக் கொண்டு ஓடிவிடும் திருடனோ? இருந்தாலும் இருக்கலாம். யார் கண்டார்கள்? இல்லாவிடில் கடித்துத் தின்று விடலாமென்ற ஆசை தொனிக்க அவன் எதற்கு அவ்வாறு பாப்பாவையே பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்? ஓ! பார்ப்பது மட்டுமல்ல! கம்பிகள் வழியே கை நீட்டி அவன் பாப்பாவை அருகில் வரச் சொல்லியன்றோ கூப்பிடுகிறான்?

சூரியா குரலை உயர்த்தி, 'திருடன், திருடன்' என்று கத்த நினைத்தான். ஆனால் பாழும் வாய் திறக்க முடிந்தால்தானே? கீழேயிறங்கி ஓட்டமாகஓடிப் பாப்பாவை வீட்டுக்குள் எடுத்து வரலாமென்று நினைத்தான். ஆனால் அதற்குள்ளேயே கிழவன் பாப்பாவை எடுத்துக் கொண்டு ஓடிவிட்டால்?...ஒன்றும் செய்வதற்கு முடியாமல், தோன்றாமல் சூரியா ஜன்னல் அருகில் அப்படியே நின்று விட்டான்.

ஆனால் சூரியா நினைத்தது போன்ற அபாயம் எதுவும் நடைபெறவில்லை. கிழவனை வேடிக்கையாகப் பார்த்தவாறே பாப்பா 'கேட்'டருகில் சென்று விட்டாள். வெகுளித்தனமாக அவனை ஏதோ கேட்டாள். கேள்விக்குப் பதில் இல்லை. கிழவன் தன் கோட்டின் ஜேபியில் கைவிட்டு ஒரு சிறிய வாழைப்பழத்தை வெளியே எடுத்துப் பாப்பாவின் பிஞ்சுக் கரத்தில் வைத்தான். 'கல கல' வென்று சிரித்து விட்டுப் பாப்பா திரும்பிக் குதித்தவண்ணம் வீட்டுப் பக்கம் வரலானாள். நிமிடத்துக்கு நிமிடம் விலகிப் போய்க் கொண்டிருக்கும் பாப்பாவைப் பார்த்தவாறே கிழவன் சிலை போல் அங்கேயே நின்றுகொண்டிருந்தான்.

** ** **

நான்கைந்து நாட்கள் உருண்டன. அன்று ஊரில் ஏதோ புது சினிமா வந்திருப்பதாகக் கூறி, சீக்கிரமாக வீடு திரும்பச் சொல்லி நீரஜா சொல்லியிருந்ததால் சூரியா கோர்ட்டிலிருந்து நேராக வீடு சேர்ந்தான். ஆனால் சினிமாவுக்குப் போகும் விஷயத்தையே மறந்து விட்டாற்போல மேஜை விரிப்பில் ஏதோ தைத்தவாறு நாற்காலியில் அமர்ந்திருந்த நீரஜாவைக் கண்டதும் அவன் முகத்தில் கோபத்தின் சாயை பரவிற்று.

"ஆனாலும் உன் போக்கே உனக்கு, நீரஜா! என்னைச் சீக்கிரம் வீடு வரச் சொல்லி உத்தரவிடுவதென்ன? நீபாட்டுக்கு உன் ராஜ வேலையில் மூழ்கியிருப்பதென்ன?" என்று கடிந்தவாறே சாய்வு நாற்காலியில் அலுப்புடன் விழுந்தான் சூரியா.

"நீங்கள் இவ்வளவு சீக்கிரம் வந்து விடுவீர்களென்று எனக்கு எப்படித் தெரியும்? மறந்து போய் விடுவது உங்கள் வழக்கம் தானே?" என்று குறும்பாகச் சிரித்து விட்டு எழுந்தாள் நீரஜா. பிறகு தொடர்ந்து அவள் "நான் 'ரெடி'யாவதற்கென்ன, ஐந்தே நிமிஷத்தில் வந்து விடுகிறேன்,பாருங்களேன்" என்றவாறே உள்ளே விரைந்தாள்.

எவ்வளவு சீக்கிரம் விரைந்தாலும், தியேட்டரை அடைவதற்குள் நேரமாகி விடுவதும் "ஐயோ, இனி கதை எப்படிப் புரியும்?" என்று அங்கலாய்த்துக் கொள்வதும் நீரஜாவுக்கு எப்போதும் வழக்கம்தான். இன்றைக்கும் அவ்வாறே நடந்தது. ஆனால் சூரியாவுக்கு மட்டும் கதை புரிய வேண்டுமென்கிற அக்கறை ஒன்றும் கிடையாது. புரிந்தால் புரியட்டும், புரியாவிட்டாலும் அதற்காக அவன் கவலைப்பட மாட்டான். எவ்வளவுதான் வெள்ளித் திரை யென்றாலும் அது வெறும் மல் துணிதானே என்று சூரியாவின் எண்ணம்! எவ்வளவுதான் கதை அவனைத் தன் பக்கம் இழுத்துக் கொள்ளப் பார்த்தாலும், கதை நிகழ்ச்சிகள் எத்தனைதான் உருக்கமாகப்பின்னப்பட்டு மனத்தை நெகிழச் செய்தாலும், அடிக்கடி 'இது கற்பனைக் கதைதான், உண்மையல்ல' என்ற எண்ணத்தை மனத்தில் வருவித்துக் கொண்டு மறுபடியும் பழைய மனிதனாகி விடுவான் சூரியா. சூரியாவின் மனப்பான்மை முதலிலிருந்தே மிக விசித்திரமானது!

ஆனால் இன்று மட்டும் சூரியாவால் அப்படி சினிமாவைப் பார்க்க முடியவில்லை. படத்தில் சாதுவான ஒரு வாலிபன் சந்தர்ப்பங்களின் சதியால் எவ்வாறு மாறிவிட்டானென்பதை உருக்கமாகத் தெரியப்படுத்த மிக முயன்

# உலகத்தை மிகக் கோலாகலமாக வரவேற்பது......



உங்கள் மர்பி ரேடியோதான்.
அதன் மிகச் சிறந்த
உழைப்புக்கும் அற்புதமும்
தெளிவும் நிரம்பிய தொனிக்கும்
அதைப் பல்லாயிரக்கணக்கானவர்கள்
வாங்கிப் போற்றி மகிழ்கிறார்கள்!

# மர்பி

**இன்று எல்லோராலும் விரும்பப்படும் ரேடியோ!**



மாடல் 298

- ஆல்வேவ்
- 5 வால்வுகள்
- 3-பாண்ட்
- AC/DC
- ரூ. *215*/- உள்ளூர் வரிகள் தனி,

இனிமையான ஒலி!
அழகான தோற்றம்!

திருந்தார் கதாசிரியர். ஒருபுறம் வீடுகளுக்குக் கன்னம் வைத்துக் கொண்டே, மறுபுறம் அந்தப் பொருள்களை ஏழைகளுக்கும் தீனர்களுக்கும் கொட்டிக் கொண்டிருக்கும் அந்தக் கதாநாயகனின் செய்கைகள் படம் பார்ப்பவர்களை வியப்பில் ஆழச் செய்து கொண்டிருந்தன. ஒரு நாள் இரவு அந்தப் பக்காத் திருடன் மாறு வேடத்தில் பட்டணத்துத் தெருக்களில் உல்லாசமாகத் திரிந்து வரப் புறப்பட்டான். அவனுக்கு ஒரு மாடி வீடு மனிதர்களின் அரவமின்றிக் காணப்பட்டது. திருடன் சற்றுத் தாமதித்தான். பிறகு இருந்தாற்போலிருந்து காம்பவுண்டு சுவரேறி உட்புறம் குதித்தான். வீட்டுக்குப் பத்து கெஜ தூரத்திலிருந்த ஆலமரத்தின் மீதேறி, மரத்தின் உச்சிவரை வந்து, ஒரே தாவலில் இரண்டாவது மாடியில் குதித்தான்.

''இதோ பார் நீரஜா! வீட்டில் ராமன் கூட இருக்கிறானல்லவா?'' என்று நீரஜாவின் பக்கம் சாய்ந்து அவள் செவியில் மெல்ல வினவினான் சூரியா.

''ராமனா? நான்கு மணிக்கே போய்விட்டானே! காவற்காரன் ஒருவன் இருக்கும் போது இன்னும் ராமன் எதற்கு வீட்டில்?''

குடி முழுகிவிட்டதென்று தீர்மானித்தான் சூரியா. மாறு வேடத்தில் இந்தப் பக்காத் திருடன் எவ்வாறு இருக்கிறானோ, தங்கள் வீட்டுக் காவற்காரக் கிழவனும் ஏறக்குறைய அவ்வாறே இருப்பான். இங்கே திருடனுக்கு எப்படிப்பட்ட நல்ல தருணம் வாய்த்ததோ, அங்கே கிழவனுக்கும் சரியாக அதே விதமான சமயம் வாய்த்திருக்கிறது.

சட்டென்று எழுந்தான் சூரியா. ''ஏனோ கண்ணைச் சுற்றிக் கொண்டு வருகிறது. நீரஜா! சற்று வெளியே இருந்து விட்டு வருகிறேன்'' என்று கூறி விட்டுச் சரசரவென்று கொட்டகையை விட்டு வெளியே வந்து விட்டான் அவன்.

அப்போதுதான் இலேசாகத் தூற்றல் போட ஆரம்பித்தது. கறுத்த நீல வர்ணத்தைப் போர்த்திக் கொண்ட மேகக் கூட்டங்கள் ஒன்று சேர்ந்து ஆகாயத்தை முற்றுகை யிட்டுக்கொண்டிருந்தன. சூரியா தெருவுக்கு வந்த உடனே ஒரு புறத்தில் மின்னலொன்று 'பளீ' ரென்றது. தொடர்ந்து இடி ஒன்று 'டமார்' என்று உறுமிற்று. தெருவில் அவன் நான்கு அடிகளாவது வைத்திருப்பானோ இல்லையோ, 'சோ'வென்று மழை பொழிய ஆரம்பித்தது.



மழை வருகிறதே என்று திரும்பி விட மனமில்லை அவனுக்கு. மனித நடமாட்டமில்லாத வீடு. காக்கைகளின் கூட்டத்தைப் பரப்பினாற் போன்ற மேகங்களின் கீழே அடர்ந்து பின்னப்பட்ட காரிருள். போதாக் குறைக்குப் பெரு மழை! திருட்டு நடத்துவதற்கு இதை விடச் சரியான சமயம் வேறு எது வாய்க்க முடியும்? காரில் புறப்பட்டால் எவ்வாறாவது 'மெயின் ரோட்' வழியாகப் போய் வீடு சேர ஒன்றரை மைலாவது இருக்கும். சந்துகளில் நுழைந்து புறப்பட்டால் நான்கு பர்லாங்கைவிட அதிகம் இருக்காது. அதுவுமில்லாமல் தெருவில் காரைக் கண்டால் திருடன் ஓடிவிடக்கூடும். இல்லை இல்லை! எவ்வளவு மழை கொட்டினாலும் சரி, தான் நடந்தே பத்து நிமிடங்களில் வீடு சேர்ந்துவிட வேண்டும்.

பள்ளங்களில் தேங்கியிருந்த 'சேறும்' தண்ணீரும் தளும்பி மடிப்புக் கலையாத உடைகளைப் பாழ் செய்து கொண்டிருந்தாலும், சட்டை செய்யாமல் சூரியா சந்துகளில் நுழைந்து நடக்க முற்பட்டான். மழையில் நனைந்தவாறே நடக்கும் அனுபவம் சூரியாவுக்குப் புதிது! அதிலும் சாய்வாக விழுந்து கொண்டிருந்த மழைத் தூற்றல்கள் கல் மழையைப் போல முகத்தைத் தாக்கிக் கொண்டிருந்தன. பூமியை நோக்கிச் சரவேகமாய்ப் பொழிந்து கொண்டிருந்த மழையைவிட வேகமாகச் சூரியாவின் மனத்தளத்தில் சிந்தனைக் குதிரைகள் ஓடின. 'இன்னும் ஐந்தாறு நிமிடங்களில் தான் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே செல்வான். வீட்டை அணுகுவான். வெளிக் கதவுக்குத் தான் போட்டுவிட்டு வந்த பூட்டு அப்போது திறக்கப்பட்டிருக்கும். நல்லவேளை! மேஜை டிராயரில் ஒரு ரிவால்வரை மறைத்து வைத்திருப்பது நல்லதாயிற்று. ஒரு கையில் டார்ச் லைட்டுடனும் மற்றொரு கையில் ரிவால்வருடனும் தான் நேரே மாடியை அடைவான். கிழக்குப் பக்கம் அறையில் திருடன் இரும்புப் பெட்டியைத் திறக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பான். மின்னலைப்போல் தான் உள்ளே நுழைந்து டார்ச்லைட்டைத் திருடன் முகத்துக்கு நேராக அடித்து, ''கையைத் தூக்கு'' எனக் கர்ஜிப்பான். ''உம். பின்னுக்கு நட'' என்றவாறு அவனை ஹாலுக்கு அழைத்து வருவான். பிறகு விளக்கைப் போட்டுப் படுக்கை கட்டும் கயிற்றைக் கொண்டு திருடனை இழுத்துக் கம்பத்தில் இறுக்கிக் கட்டி விடுவான்!...'

சந்துகளிலிருந்து சூரியா ராஜ பாட்டைக்கு வந்துவிட்டான். அங்கிருந்து 'கேட்'டுக்கு நூறு கெஜ தூரம் கூட இருக்காது. சூரியா மாடிமேல் கண்களை ஓட விட்டான். பெருமழையாதலால் பார்வை நிலைக்கவில்லை. 'கேட்' அருகில் உற்றுப் பார்த்தான். அங்கு மனிதன் யாரும் இருப்பதாகப் புலப்பட வில்லை. அவனுக்கு வந்த ஆத்திரத்தில் சூரியா தன் திடமான வலுவுள்ள முஷ்டியை மடக்கி ஒரு முறை பார்த்துக் கொண்டான்.

ஆனால் சூரியாவின் கரம் தானாகவே கீழே தொங்கி விட்டது. மூடியிருந்த உள்ளங்கை தானாகவே பிரிந்துகொண்டு விட்டது. செய்வதறியாது அவன் கேட்டுக்கு உட்புறத்தினின்றும் வெளியேயும் பரவியிருந்த அரசமரக்கிளைகளின் கீழே நின்றுவிட்டான். இரண்டு நிமிடங்

களுக்குத் தன்னைச் சுற்றிலும் மழை பெய்து கொண்டிருப்பதையும், மழை தன்னைத் தெப்பமாக நனைத்துவிட்டிருப்பதையும் அவன் மறந்துவிட்டான். அவன் உடம்பிலுள்ள ஒவ்வொரு ரத்தத்துளியின் ஒவ்வொரு அணுவிலும் அவன் எதிரில் ஸ்டூலின்மேல் நிச்சலனமாக உட்கார்ந்திருந்த கிழவனின் பரிதாபக் கோலம்தான் பிரதிபலித்தது. ஐயோ, இருளில் கலந்து இருளாகி, தெப்பமாக நனைந்து விட்டாலும், வீசி வீசி அடித்த பேய்க் காற்றிலும், கொட்டிக் கொண்டிருந்த மழையிலும் ஆடாமல் அசையாமல் கருமமே கண்ணாக அமர்ந்திருக்கும் இந்தக் கிழவனைத்தானா அவன் திருடனென்று சந்தேகப் பட்டான்?

ஐந்தடி பத்து அங்குல உயரமான தன் உடல் அந்தக் கிழவனின் முன்பு இரண்டடியாகக் குறுகி விட்டதாகத் தோன்றியது. சூரியாவுக்கு. அதற்காக அவன் கவலைப்படவில்லை. அந்தக் கிழவனின் உத்தமமான பண்பின் முன் தான் குறுகிவிடுவதுதான் நியாயம்!

மறுபடியும் இந்த உலகுக்கு வந்ததும் சூர்யா கிழவனுக்கு அருகில் சென்று, "தலைவலியாக இருந்தது. தலைவலிமருந்துஎடுத்துப் போட்டுக் கொள்ளலாமென்று வந்தேன்" என்றான். சொல்லியான பிறகு அவ்வாறு சொன்னதற்கு வெட்கப்பட்டான். தலைவலி மருந்துக்காக, பெருமழையில் நனைந்து கொண்டு கொட்டகையிலிருந்து தான் இவ்வளவு தூரம் நடந்து வந்தானென்றால் யார் நம்புவார்கள்? இருந்தாலும் தான் இப்போது எதற்குச் சமாதானம் கூற வேண்டும்? உண்மையில் அது சமாதானமே யல்ல. அவன் செவிகளுக்கே அது மன்னிப்புக்காக மன்றாடும் வகையில் தான்! இருந்தது...அதற்குள் சூரியா சற்று நிம்மதியடைந்தான். எதுவானால் என்ன? கிழவனுக்கு அவன் வார்த்தைகள் காதில் விழுந்திருக்க மாட்டா.

சூரியா 'கேட்'டைத் திறந்து கொண்டு உள்ளே சென்று ஐந்து நிமிடங்களில் உடை மாற்றிக் கொண்டு திரும்பிவந்தான். மழை சற்று ஓய்ந்திருந்தது. ஆனால் அரச மரத்தின் கிளைகளிலிருந்து தண்ணீர்த் துளிகள் கீழே விழுந்து கொண்டிருந்தன. வெளியுலகில் மாறுதல் ஏற்பட்டாலும், கிழவன் மட்டும் மாறுதல் ஏதுமின்றிச் சமாதி யடைந்து விட்டாற் போன்று அவ்வாறே உட்கார்ந்திருந்தான். சூரியாவின் கண்கள் நீரில் மிதந்தன. கைக்குட்டையால் கண்களை ஒற்றிக்கொண்டு கணத்துக்குக் கணம் மாறுதலடையும் தன் உள்ளத்தைப் பற்றி நினைத்துத் தானே வியப்படைந்தான். கடந்த ஏழெட்டு நாட்களாக அவன் இந்தக் கிழவனைப் பற்றி ஏறக்குறைய ஒரு நாளைக்கொரு முடிவுக்கு வந்திருக்கிறான்; சந்தேகித்தான், வெறுப்புற்றான், அலுத்துக் கொண்டான், பரிதாபப்பட்டான். கடைசியில் இன்று கண்ணீரும் சொரிந்தான். அவன் உள்ளத்தில் இத்தனை மாறுதல்கள் ஏற்பட்டும், எதிராளியிடம் மட்டும் லவலேசம்கூட மாறுதல் ஏதும் தெரியவில்லை. அது உலர்ந்துவிட்ட மரம். பூகர்ப்பத்தில் அதன் வேர்கள் ஆடிவிட்டன. மேலே கிளைகளும் உலர்ந்து கொண்டிருக்கின்றன. அடி மரத்தில் பொந்தும் விழுந்து விட்டது. சூரியா இரண்டு உலர்ந்த துணிகளைக் கிழவனிடம் வீசி, உடுத்திக் கொள்ளுமாறு சைகை செய்துவிட்டு, மறுபடியும் தியேட்டர் பக்கம் நடந்தான். மறுநாள் காலையில் முன்பே நிச்சயித்தபடி அப்போது பூரியில் இருந்த தன் தகப்பனருக்குச் சூரியா கடிதம் எழுதினான். "பூஜிக்கத் தகுந்த அப்பாவுக்கு நமஸ்காரங்கள்" என்று ஆரம்பித்து, சௌபாக்கியவதி நீரஜாவும் சிரஞ்சீவி பாப்பாவும் க்ஷேமமாக இருப்பதாக எழுதினான். சித்தியின் திருப்திக்காக அக் குசல வார்த்தைக்கு இன்னும் நாலைந்து வாக்கியங்கள் சேர்ந்தன. "தினத்துக்கு ஒன்றிரண்டு முறை ராமனே பாப்பாவை உலாவுவதற்கு வெளியே எடுத்துச் செல்கிறான். அதனால் அவனை வைத்துக் கொள்வதற்கென்று தனியாகச் சிறுவனை அமர்த்திக் கொள்ள வேண்டிய அவசியமேதும் தெரியவில்லை. இன்னொரு விசேஷம். நமக்கு இப்போது மிகவும் நம்பிக்கையான காவற்காரன் அகப்பட்டான். பாவம்! அவனுடைய நிலை நெஞ்சை நெகிழச் செய்கிறது. காது கேட்காது. ஒரு கை முடம். வருடக்கணக்கில் சாப்பாட்டுக்குக் கொடுத்து வைக்காதவனைப்போல் காணப்படுகிறான். இரண்டு வேளையும் கொஞ்சம் சோறு போட்டுவிட்டால் வேறு கவலையின்றி அந்தக் கிழவன் நம் வீட்டிலேயே இருந்து விடுகிறான். அவன் 'கேட்'டருகில் இருப்பதால் நான் வெளியிலிருந்து வருவதற்குச் சற்றுத் தாமதமானாலும் நீரஜா பயம் இல்லாமல் இருக்கிறாள். இதைச் சித்தியிடம் சொல்லுங்கள்."

* * *

தினக் காலண்டரில் பதினைந்து தாள்கள் கிழிக்கப்பட்டு விட்டன. இதற்குள் சூரியா இரண்டு மூன்று பெரிய வழக்குகளுக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டான். வாய்தாக்களும் அருகிலேயே இருந்தன. சாப்பாட்டை முடித்துக் கொண்டு நீதிப் புத்தகங்களுக்கு நடுவே உட்கார்ந்து விட்டானானால் ஒவ்வொரு சமயம் நடுநிசிகூடமிஞ்சிவிடும்.

'கேட்'டருகில் நின்று கிழவனுடன் பேச்சுக் கொடுக்கலாமென்று எத்தனையோ முறை நினைத்தான். நின்று பேச்சுக் கொடுத்து இருப்பான். ஆனால் பேசுவதற்கு அந்தக் கிழவன் சுமுகமாகக் காணப்படவில்லை. மேலும் வேலையில் சேர்ந்தபோது இருந்ததை விட இப்போது மிக மிக மெலிந்து விட்டிருந்தான் அவன். போதாக்குறைக்கு மழையில் நனைந்தது முதல் அவனுக்குப் புதிதாக இருமலொன்று ஏற்பட்டிருந்தது. இரும ஆரம்பித்தால் அது பிரவாகத்தைப்போல் பத்துப் பதினைந்து நிமிடங்கள் வரை ஒரே ஸ்தாயியில் தொடர்ந்து வந்து அவனைப் படுத்தி விடும்.

''பன்னிரண்டு மணிக்கு ஒரு முறை கண் விழித்தேன். அப்போது கிழவனின் இருமல் சத்தம் கேட்டது'' என்பான் சூரியா காலையில் எழுந்ததும்.

''நான் விடியற்காலையில் விழித்துக் கொண்டேனே! அப்போதும் கிழவன் இருமிக் கொண்டிருந்தான்'' என்பாள் நீரஜா.

''அவன் நாம் பேச வைத்தாலும் பேச மாட்டேனென்கிறான். தன் உடம்பைப்பற்றி ஏதும் சொல்லிக்கொள்ள மாட்டேனென்கிறான். என்னமோ போ! இவன் நமக்கு ஒரு பிரச்னையாகி விட்டான்!''

''இருமி இருமி அவன் இங்கேயே கண்ணை மூடிவிடுவானோ என்னமோ! உம். எங்கே பிறந்தானோ, எங்கே வளர்ந்தானோ, அவனுக்குப் பகவான் இங்கே சாவு எழுதி வைத்திருக்கிறார் போலிருக்கிறது!''

முடிவில் சூரியா ராமனைக் கூப்பிட்டுக் கிழவனுக்கு உடம்பு எப்படி இருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்ளச் சொன்னான். அவசியமானால் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்று மருந்து வாங்கிக் கொடுக்கச் சொன்னான்.

ஆனால் போன விதமே திரும்பி விட்டான் ராமன். ''அவன் தனக்கு மருந்து ஏதும் வேண்டா மென்கிறானுங்க'' என்றவாறே.

''ஏன்? எதற்காகவாம்?'' என்று ஆச்சரியத்துடன் வினவினான் சூரியா.

''உடம்பில் கை வைத்துப் பார்த்தேன். கொதிக்கிறது. எழுந்து நிற்பதற்குக்கூட முடியாத நிலையில் அவன் இருக்கிறான். 'ஆஸ்பத்திரி' வரையில் வா, மருந்து வாங்கிக் கொடுக்கிறேன் என்றேன்.''

''அதற்கென்ன சொன்னான்?''

'''போய் விடு' என்பதாக ஜாடை காட்டினானுங்க. வேறு ஒன்றும் சொல்லவில்லை.''

''ஒருபுறம் பிராணன் போய்க் கொண்டிருந்தாலும், நம் வீட்டிலேயே உட்கார்ந்து சத்தியாக்கிரகம் செய்வதற்கு அவனுக்கு நாம் என்ன அபசாரம் செய்தோமடா ராமா? போ. ஒரு வண்டியைக் கொண்டு வந்து அவன் வேண்டாம் வேண்டாமென்று அடித்துக் கொண்டாலும் அவனை அதில் தள்ளி ஆஸ்பத்திரிக்கு இழுத்துப் போ. நிலைமை அபாயகரமாக இருப்பதால் கட்டாயம் ஆஸ்பத்திரியில் சேர்த்துக் கொள்வார்கள். உடனே அவனை ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டு மறு வேலை பார், போ!'' என்றான் சூரியா.

அன்று பிற்பகலுக்குப் பிறகு சூரியா பால்கனியிலிருந்து தெருப் பக்கம் பார்த்தான். இரும்புக் கம்பிக் கேட்டின் அருகில் காவற்காரன் இல்லை! உள்ளத்தின் ஆழத்தில் ஏதோ இனம் புரியாத வேதனை அம்பைப் போல் இதயத்தைக் குத்தி யெடுத்தாலும், மேலுக்கு மட்டும் தலை மேலிருந்த பெரிய பாரம் இறங்கி விட்டாற் போல 'அப்பாடி' என்று பெருமூச்செறிந்தான் சூரியா.

வெற்றிலைக்குச் சுண்ணாம்பு தடவிக் கொண்டிருந்த நீரஜா சூரியா உள்ளே வருவதைக் கண்டு ''காலை உங்களுக்கு வந்த கடிதங்களை மேஜை மேல் வைத்திருக்கிறேன்'' என்றாள்.

''அப்பா எழுதியிருப்பாரோ?'' என்றவாறு சூரியா கடிதங்களை எடுத்துக் கொண்டு கட்டிலில் படுத்துக் கொண்டான். அவற்றில் நான்கு கார்டுகளும், ஒரு கவரும் இருந்தன.

கட்சிக்காரன் யாராவது வழக்கு சம்பந்தப்பட்ட பத்திரங்களை அனுப்பியிருக்கிறானோ என்று நினைத்துக் கொண்டே கவரைத் திறந்து காகிதங்களை வெளியே எடுத்தான். இதென்ன விந்தை? கடிதம் முழுவதிலும் தகப்பனாரின் எழுத்துக்களே காணப்பட்டன. அவர் மிக நீண்ட கடிதம் எழுதுவது இதுவே முதல் தடவை. ஒரு வேளை க்ஷேத்திராடனத்தின் அனுபவங்களையெல்லாம் பற்றி எழுதியிருக்கிறாரோ!

நான்கைந்து வரிகள் மட்டும் படித்துவிட்டு, சூரியா காகிதங்களைக் கையில் வைத்துக் கொண்டே உச்சி முகட்டைப் பார்த்தவாறு யோசனையில் ஆழ்ந்து போனான். கடிதத்தின் வாசகமெல்லாம் ஒரு மாதிரியன்றோ இருக்கிறது! சொல்ல வேண்டிய செய்திகள் எத்தனையோ இருப்பது போலவும் அதற்குப் பீடிகை போடுவது போலவும் எழுதிக் கொண்டு சென்றார் தகப்பனார். ''இதெல்லாம் இப்போது எதற்குச் சொல்ல வேண்டி வந்ததென்று நீ சந்தேகிக்கலாம். இத்தனை காலமாக என்னுள்ளேயே புதைக்கப்பட்டிருந்த இந்த ரகசியம் உன்னை வேரோடு ஆட்டிவிடக் கூடும். ஆனால், சூரியா! என் மனத்தில் எழுந்த எத்தனையோ எதிர்ப்புகளுக்குப் பிறகே இந்த உண்மையை உனக்குத் தெரியப்படுத்த முற்பட்டிருக்கிறேன் என்று நீ புரிந்துகொள்ள வேண்டும்.''

சூரியா திகைப்படைந்து நின்று விட்டான். ரகசியமா? என்ன அது? அது தன்னை ஆட்டிவிடப் போகும் உண்மையா? அப்படி ஒன்று இருக்கக் கூடுமென்று அவன் நினைப்பதற்குக் கூட அவகாசமில்லையே! அப்பா ஏதாவது கதை எழுதி, பத்திரிகைக்கு அனுப்புவதற்குப் பதில் தனக்கு அனுப்பி விட்டாரோ? இல்லையே! மேலே ''செஞ்சீவி சூரியாவுக்கு ஆசீர்வாதம்'' என்று மிகவும் தெளிவாக எழுதியிருக்கிறாரே!

சூரியா மறுபடியும் கடிதத்தைப் படிக்கலானான். பிறகு ஒன்றிரண்டு பக்கங்கள் வரை வேதாந்த ரீதியில் ஓடிற்று.

''உனக்குத் தெரியும், சூரியா. நானும் உன்னைப் போல் வக்கீல் தொழிலை மேற்கொண்டவன், பத்து வருடங்கள் நீதிபதியாகவும் வேலை செய்தவனென்று. அந்த முப்பது முப்பத்தைந்து வருட அனுபவத்தில் எனக்குப் புரிந்த உண்மை ஒன்றேதான்! நியாயத்தை

**செருப்புக்கடை வைத்திருப்பவர்(தம் நண்பர் பல் டாக்டரிடம்):**-ஸார்! நாலு பேர்களின் காலைப் பிடித்தால் தான் என் பிழைப்பு நடக்கிறது!



**பல் டாக்டர்:**-நாலு பேர்கள் என்னிடம் பல்லைக் காட்டினால்தான் என் பிழைப்பு நடக்கிறது!



# தை பிறந்தது

சூர்ய தேவனின் அருள்கனிந்த அறுவடைப் பொலிவு எங்கும் குதூகல மாகப் பொங்கிய பொங்கல் திருநாள். மாலை மஞ்சு விரட்டு நடந்தேறிய ஆரவாரமும், படையெடுத்து வந்த கும்பலின் நடுவே பூச்சூட்டி புதுச் சாயம் பளபளத்த கொம்புகளும், மஞ்சள் குங்குமப் பூச்சு அணிந்து நெட்டி மாலைகளும் சதங்கைகளும் குலுங்க நடந்த முரட்டுக் காளைகளும், அம்மிருகங்களை அடக்கிய ஜல்லிக்கட்டு வீரர்களை பலர் தோள் உயரத் துக்குத் தூக்கி ஆரவாரித்த காட்சிகளும் தென்பட்டன.

டாக்டர் வீட்டு முன்புறத் தோட்டத்துப் பசுமை, குளிர்ச்சியோடு என்னை வரவேற்றது. டாக்டரின் எட்டு வயதுக் குழந்தை அங்கு விளையாடிக் கொண்டிருந்தது. கீரைப் பாத்திகள், அவரைப் பந்தல், நெல்லிக்காய் மரம் எல்லாம் அடர்ந்திருந்த அச்சிறு தோட்டத்தைப் பராமரிப்பதில் ஈடுபட்டிருந்த டாக்டரின் மனைவி பாக்கியம் என்னை வரவேற்றுக் குசலம் விசாரித்தாள்.

"தை பிறந்துவிட்டது. இந்த சீஸனில் உங்கள் பெண்ணுக்கு..." என்று இழுத்தாள்.

"தை மாதங்கள் எத்தனையோ பார்த்தாகிவிட்டது. பெண்ணுக்கு சதைப் பற்று போதாது என்று புகார். வரன் அலைச்சலில் இந்தக் கோடை வெய் யிலெல்லாம் தலைக்கேறி, உடம்புக்கு ஒத்துக்கொள்ளாமல்..."

"வெய்யில் உடம்புக்கு நல்லதென்பார் என் கணவர். எலும்பு வளர்ச் சிக்கும், பல் உறுதிக்கும் தேவையான வைடமின் 'டி' என்னும் தாதுப் பொருள் அதிலிருக்கிறதாம் — அது சரி, போன வாரம் பெண் பார்த்து விட்டுப் போனவர்கள் ஏதேனும் தகவல் கொடுத்தார்களா?"

"அவர்கள் மறந்து எழுதிய கடிதம் சங்கராந்தியன்று கிடைத்திருக் கிறது!"

"வந்தவர்களுக்கெல்லாம் சம்பிரமமான சாப்பாடாமே?"

"ஆமாம். விரலுக்கேற்ற வீக்கமேது. பெரிய குடும்பமும், விருந்தாளி களும் முற்றுகையிடுவது போதாதென்று வரன்காரர்கள் வேறு. கடைசி யில், அவரவர் போனபின்பு, மளிகைக் கடைக்காரன் நச்சரிப்பும், உங்க ளிடம் வந்துபோவதும்தான் மிச்சம்" என்றேன். வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டி, பிறருக்கு உபசாரம் செய்து, சொந்த சுகத்தைத் தியாகம் செய்பவர்களை நினைத்து அந்த அம்மாள் கண்ணீரே உகுத்துவிட்டாள்.

"பொங்கல் கொண்டாட்டமெல்லாம் பலமாமே!" என்று கலகலப்புடன் கேட்டுக்கொண்டே டாக்டர் வந்துவிட்டார்.

"பொங்கலாவது! மாட்டுக்குத்தான் யோகம். மனிதன் பாடு..." என்றேன் உற்சாகமின்றி.

"இது மாட்டின் காதில் விழுந்தால் அது வருத்தப்படும். வளமையான பொங்கலுக்காக வருஷ முழுவதும் பாடுபட்ட ஜந்து அல்லவா! ஏழைகள் கூட, அறுவடையின் முதல் உணவை மாட்டுக்குப் படைத்த பிறகே சாப்பிடுகிறார்கள் — மாடு தந்துவரும் பாலை எடுத்துக் கொள்ளுங்கள்.

HVM. 293A-X29 TM

தேகத்துக்கு ஆதாரமான சர்வ சத்துக்களும் பூரணமாக அடங்கிய ஆகாரம் பால்தான்!'' என்றார் டாக்டர்.

''சத்துள்ள உணவு என்றால் பணச் செலவோ என்று சிலர் நினைக்கலாம். அப்படியொன்றுமில்லை. பொன் வைக்குமிடத்தில் பூ வைத்தாலே போதும். மாட்டுக்கு எளிய புல்லைப் படைத்த தெய்வம் நமக்கென்று படைத்துள்ள புஷ்டிதரும் மலிவான தாவரப் பொருள்கள் எத்தனையோ உண்டு'' என்றாள் பாக்கியம். முளைகட்டிய பயறுகள், நோய்களை எதிர்த்து நிற்க உதவும் வைட்டமின் 'ஏ' அடங்கிய கீரை வகைகள், இரண்டு ஆரஞ்சுப் பழத்திற்கு ஈடான நெல்லிக்காய் — எல்லாம் சிக்கனமானவை என்று டாக்டர் விவரித்ததும், குழந்தை, விளையாட்டாக தோட்டத்து நெல்லிக்காய் ஒன்றைப் பொறுக்கி என்னிடம் கொடுத்தது. உடனே குழந்தையிடம் ஏதோ சொல்லி உள்ளே அனுப்பினாள் பாக்கியம்.

''நெய்க்குப் பதிலாக எண்ணெய்களை உபயோகிக்கிறீர்கள் அல்லவா?'' என்று கேட்டார் டாக்டர்.

''ஆமாம். ஆனால் ஒத்துக்கொள்வதில்லை.''

''கடைகளில் விற்கும் தூசி படிந்த எண்ணெய்களே அப்படித்தான் — ஆனால் சுத்தமான எண்ணெய்க்கும், நெய்க்கும் உள்ள வித்தியாசம் இரண்டேதான். ஒன்று, தோற்றம்; மற்றொன்று, எண்ணெயில் இல்லாத வைட்டமின் 'ஏ', 'டி' இரண்டும் நெய்யில் இருக்கிறது. அவ்வளவுதான். ஏதாவது ஒரு நூதன வழியில் எண்ணெய்க்கு நெய்த் தோற்றம் கொடுத்து, வைட்டமின்களை புகுத்திவிட்டால் எவ்வளவு சௌகரியமாக இருக்கும் என்று நீங்கள் சில சமயம் ஏங்கலாம். அதிருஷ்டவசமாக அப்படித் தயாரித்த கொழுப்பு உங்களுக்காகத் தயாராயிருக்கிறது. தெரியுமா?'' என்று டாக்டர் கேட்டதும், ''டால்டா வனஸ்பதியைக் குறிப்பிடுகிறீர்களா?'' என்றேன்.

''ஆம். புத்தம்புதிய தாவர எண்ணெய்கள் சுகாதார முறையில் பரிசுத்தமானபின், நெய்த் தோற்றத்தோடு அடக்கமான டின்களில் தரத்திலுயர்ந்த தாவரக் கொழுப்பாகக் கிடைப்பதுதான் டால்டா வனஸ்பதி; எங்கள் வீட்டிலும் உபயோகிக்கிறோம் — நெய்க்குப் பதிலாக!'' என்றார் டாக்டர்.

''நெய்க்கு சமானமாக மதிக்கிறீர்களா?''

''சந்தேகமில்லாமல். விசேஷ சமயங்கள், சாதாரண நாட்கள் எப்போது வேண்டுமானாலும், எந்தத் தின்பண்டம் வேண்டுமானாலும் தயாரித்துப் பாருங்கள். அவற்றிற்கு ஏற்படும் ருசியே தனி. நீடித்து நிற்கும் தன்மையும் அதிகம். சிக்கனத்திற்கும் சிக்கனம்!'' என்றாள் பாக்கியம். உள்ளேயிருந்து திரும்பிவந்த குழந்தை, ஒரு இலைமீது பொங்கலைக் கொணர்ந்து என்னிடம் வைத்தது. ''சாப்பிடுங்கள்!'' என்ற அன்புக் கட்டளைக்குப் பணிந்து, சுவைத்துப் பார்த்த எனக்கு பொங்கலில் புதிய சுவை தோன்றத்தான் செய்தது.

''இன்று காலை, கன்றுப் பிடி வைப்பதற்கும் டால்டா சேர்த்துக் கொண்டோம். காக்காய்க்குக்கூட போடாமல் தானே சாப்பிடுவேன் என்று பாப்பா செய்த பிடிவாதத்தைப் பார்க்கவேண்டுமே!'' என்று தாயானவள் சலித்ததும், எல்லோருமே ரசித்தோம்.

டாக்டர் சொன்னார்: ''மாடுகள் பாடுபட்டு வழங்கிய அறுவடை அமுதத்தை, பிற்காலத்தில் உதவப்போகும் கன்றுகளுக்கு வழங்குவதே 'கன்றுப் பொங்கல்' என்ற வைபவம். வருங்கால மக்களாகிய நமது குழந்தைகளுக்கு சத்துநிரம்பிய உணவு கொடுத்துப் பராமரிக்கும் வழி நம் கையில் இருக்கிறது.''

ஆம். எனக்கும் உண்மை விளங்கியது — எனது உள்ளங்கையில் இருந்த நெல்லிக்கனியைப் போல. பொங்கலில் புதிய இனிப்பைப் புகுத்தியருளிய டாக்டர், நான் போகும்போது, ''உங்கள் பெண்ணைப்பற்றிக் கவலைப் படாதீர்கள் — தை பிறந்துவிட்டதல்லவா. வழி பிறந்துவிட்டதென்று நம்புங்கள்!'' என்று உற்சாகப்படுத்தி வழியனுப்பினார்.

நிச்சயிப்பதைவிட இவ்வுலகில் தர்ம சங்கடமானது வேறொன்றுமில்லை. உதாரணத்துக்கு, உனக்கு இந்த ரகசியத்தைச் சொல்வது நியாயமா, இல்லையா என்பதை நான் இந்தப் பத்துப் பதினைந்து நாட்களாக எனக்குள்ளேயே வாதித்துக் கொண்டேன். பூரியில் ஜகந்நாதனையும், கல்கத்தாவில் காளி மாதாவையும், காசியில் விசுவேசுவரனையும் தரிசித்துக் கொண்டிருந்த போதெல்லாம் இந்தச் சந்தேகமே என் மனத்தில் போராடிக் கொண்டிருந்தது. கடைசியில் இந்த விஷயத்தை உனக்குத் தெரியப்படுத்துவதுதான் நியாயம், நேர்மை, நீதியென்ற நிச்சயத்துக்கு வந்தேன். இந்தக் கடிதத்தைப் பிருந்தாவனத்திலிருந்து எழுதிக் கொண்டிருக்கிறேன். நேற்று மாலை இந்த ரகசியத்தை வெளியிடுவதற்கு வேண்டிய மனோதிடத்தை அளிக்குமாறு கிருஷ்ண பகவானை வேண்டிக் கொண்டேன்.

“என் நிலையில் உள்ளவன் வேறு யாராகவாவது இருந்தால் உனக்கு இந்த விஷயத்தைச் சொல்ல மாட்டானோ, என்னவோ! ஆனால் அப்படிப்பட்டவன் எனக்கு வழிகாட்டியாக மாட்டான். நான் உலகத்தின் மதிப்புக்கும் பெருமைக்கும் ஆசைப்படாமல் எனக்கு நியாயமென்று தோன்றிய காரியங்கள் சிலவற்றைச் செய்தேன். அவற்றில் இது கடைசியாக இருக்கட்டும்! இதுவே என்னுடைய ஆசை.

“எனக்குத் தெரிந்த ஒரு மனிதன் இருக்கிறான். அவனை எனக்குச் சுமார் நான்கு மாதங்களாகத் தெரியும். அவன் மனிதகுலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பாகப் பிழைத்தான். மானவதிகளின் கற்புக்கு இடையூறாகப் பிழைத்தான். நிரந்தரமான கெட்ட நடத்தைகளில் ஆஸ்தியைக் கரைத்து விட்டான். கைக்கு ஓடு வந்தது. ஆனால் அவன் மனிதத்தன்மையை மட்டும் அடையவில்லை. மனிதனாக மாறினால் அவனுக்குப் பச்சாத்தாபம் உண்டாகாதாவென்று நினைத்தேன். இனி அவன் உள்ளத்தளவில் மனிதனாக மாற மாட்டானென்றும் நினைத்தேன். ஆனால் இதற்குள் நீ அந்த மூடமான கிழவனைப்பற்றி எழுதினாய். அத்துடன் என் தீர்மானம் தலைகீழாக மாறிற்று.”

சூரியாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அங்கே, இங்கே வந்து இந்த மூடக்கிழவன் பிறகு தன் கதையிலேயே அல்லவா நுழைந்து கொண்டிருக்கிறான்?

“இப்பொழுதே இந்த என் கடிதம் உனக்கு அலுப்பையூட்டுகிறதல்லவா சூரியா? இல்லை. சொல்ல வேண்டியதை இனிச் சுற்றி வளைக்காமல், என்னால் முடிந்தவரையில் சுருக்கமாக எழுத முயலுகிறேன். தனிமையில் அமர்ந்து ஓய்வாகப் படித்துக் கொள்.”

சூரியா கடிதத்தை ஜேபியில் வைத்துக் கொண்டு மாடிக்கு விரைந்தான். அறைக் கதவுகளை மூடிவிட்டு, நாற்காலியில் அமர்ந்து மறுபடியும் காகிதங்களை மேலே எடுத்தான்.

* * *

நான் கல்லூரியில் புதிதாகச் சேர்ந்த நாட்கள். ஆனால் அப்போதே இந்த உலகம் சந்தோஷமானதல்ல வென்றும், வேண்டிய அளவு கஷ்ட நஷ்டங்களுக்கு இங்கு குறைவேதுமில்லையென்றும் எனக்கு நன்றாகத் தெரியும். என் தகப்பனார் என்னை அவ்வாறு வளர்த்தார். அதற்காக அவரைக் குறை கூறிப் பயனில்லை: பிதுரார்ஜித சொத்துக்கள் அவ்வளவாக இல்லாமலிருந்தும் அவர் அதுவரை குடும்பத்தை இழுத்து வந்ததே பெரிய விசேஷம். நன்றாகப் படித்து, நான் பெரிய உத்தியோகம் செய்தால் ஒரு முறை பார்த்து விட்டுக் கண்களை மூட வேண்டுமென்று அப்பா அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பார். அவருடைய ஆசையின் இரு பாகங்களில் முதலாவது மட்டும் நிறைவேறிற்றே தவிர இரண்டாவது நிறைவேறுவதற்கு முன்பே அவர் மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டார்.

உள்ளூரிலேயே உயர்தரப்பாடசாலை இருந்துவிட்டதால் ஸ்கூல் பைனல்வரை என் படிப்பு என் அப்பாவுக்குக் கஷ்டமாகத் தெரியவில்லை. முன்பின் ஆலோசியாமல் இருநூறு ரூபாய் கடன்பட்டு அவர் என்னைக் கல்லூரிக்கு அனுப்பி வைத்தார். 'டிரங்'கைக் கையில் எடுத்துக் கொண்டு அனந்தபுரம் ஸ்டேஷனில் இறங்கினேன். அந்த ஊரின் முகத்தைப் பார்ப்பது அதுவே முதல் தடவை. கல்லூரி பிரின்ஸிபால் ஆதரவோடு பேசினார். “எங்கே தங்கப் போகிறாய்?” என்று அவர் வினவியதற்கு, “அதுதான் தெரியவில்லை, ஸார்!” என்று பதிலளித்தேன். அவர் ஒரு துண்டுக்காகிதத்தில் ஒரு பெயரை எழுதிக் கொடுத்து அங்கு போகச் சொன்னார்.

அது ரங்கம்மா ஹோட்டல்! அந்த நாளில் சுற்றுப்புறத்திலிருந்த சாப்பாட்டுப் பிரியர்களுக்கெல்லாம் ரங்கம்மா தெய்வம்தான். ஹோட்டல் என்று சொல்லப்படுவதால் அங்கு நாற்காலிகள், மேஜைகள், படங்கள், சர்வர்கள், கிளீனர்கள் இருப்பார்களென்று நினைத்தேன். ஆனால் அங்கு அப்படிப்பட்ட தடபுடல் ஏதுமில்லை. வெளியூர்களிலிருந்து வந்து படிக்கும் கல்லூரி மாணவர்கள் ரொம்பப் பேர்கள் அங்கேதான் சாப்பிடுவார்கள். நான்கைந்து நாட்கள் அந்த ஹோட்டலிலேயே ஒரு அறையில் வசித்துப்பார்த்தேன். படிப்பதற்கே முடியவில்லை. எப்போதும் தொடர்ந்து வரும் ஜனக் கூட்டத்தால் ஓயாத இரைச்சல். இது சரிப்

படாதென்று, தனியாக இருக்கும் ஒரு அறைக்காகத் தேட ஆரம்பித்தேன்.

அப்போது அனந்தபுரம் இப்போதுள்ளதைப் போன்ற பெரிய பட்டணமல்ல. நான்கைந்து முக்கியமான தெருக்களைத் தவிர்த்து, மிஞ்சியிருந்த ஊரெல்லாம் ஒரே மண்மாடிகள் மயம். இந்த மண்மாடி வீடுகள் துப்பறியும் நாவல்களில் அவ்வப்போது துப்பறிபவர்களுக்கு அகப்படும் பூகர்ப்ப இல்லங்களைவிடச் சற்றே தேவலை. அவ்வளவே! மிகக்குறுகலான அகலத்துடன் இந்தத் தெருவிலிருந்து அந்தத் தெரு வரை நூறு நூற்றிருபது கெஜம் நீளத்துடன் கூடிய இந்த மண்மாடி வீடுகளுக்கு எந்தப் பக்கத்திலும் ஒரு ஜன்னல்கூட இருக்காது.

நான்கு நாட்கள் அதே வேலையாக அலைந்து திரிந்து, கடைசியில் ஒரு மூலையிலிருந்த தெருவில் ஒரு அறையைப் பிடித்தேன். ஓட்டு வில்லைகள் போட்ட வீட்டில் வாசற் பக்கத்து அறை. அறைக்குள்ளே காற்றும் வெளிச்சமும் வருவதற்கு வசதியிருந்தது. அடிக்கடி அறைக்குள்ளே வந்து விஷமம் செய்வதற்கு அந்த வீட்டில் சிறுவர்களும் இடையாது. சிறுவர்கள் மட்டுமல்ல, ஆண்களே இல்லாத அவ்வீட்டில் இரண்டு பெண்கள் மாத்திரமே இருந்தார்கள். ஊன்றுகோலின் உதவியுடன் கிழவி ஒருநாளில் ஒன்றிரண்டு முறைகளாவது

"நான்தான் பாட்டி, சந்திரன்!", என்று பதில் சொல்லுவேன்.

"அடி, ஜானகி! பையனுக்குத் தண்ணீர் வேண்டுமோ என்னவோ, தொட்டியில் இருக்கிறதா பார்!" என்று அவள் தன் பெண்ணுக்கு வேலை வைப்பாள். அந்தப் பெண் தொட்டியில் தண்ணீர் இருந்தால் இருக்கிறது என்பாள். இல்லாவிட்டால் பதில் பேசாமல் தண்ணீர் இழுத்துக் கொட்டுவதற்குச் சலங்கைக் குதிரை போல் நடந்து புழக்கடைக்குப் போவாள். முன்பின் தெரியாதவர்களைக் கொண்டு வேலை செய்வித்துக் கொள்வதற்கு எனக்கு அடியோடு விருப்பம் இருக்காது. ஆனால் ஒன்றும் சொல்ல முடியாமல் ஜானகி தண்ணீர் எடுத்துக் கொட்டும் வரை கிழவியுடன் பேசிக் கொண்டிருந்து விட்டுப் பிறகு புழக்கடைக்குப் போவேன்.



தெரு வாசற்படி வரை வந்து என்னோடு பேச்சுக் கொடுத்து விட்டுப் போவாள். அவளுக்குப் பகலில் உலகம் அரைகுறையாகத் தெரியும். இரவில் அதுவுமில்லை. புழக்கடைப் பக்கம் போவதற்குத் தனியாக ஏதும் வழியில்லாததால் முகம் கழுவிக் கொள்ளுவதற்கும், குளிப்பதற்கும் வீட்டுக்குள்ளிருந்தே போக வேண்டி வரும். உள்ளே போகும் போதெல்லாம் கூடத்தில் கட்டிலில் படுத்துக் கொண்டிருக்கும் கிழவி, "யார் அது? யார் அங்கே?" என்று கலவரத்தோடு கேட்பாள்.

ஒரு நாள் நான் கல்லூரியிலிருந்து திரும்புவதற்கு நேரமாயிற்று. எனக்காக வாசற்படி அருகிலேயே காத்துக் கொண்டிருந்தாள் கிழவி. "என்னப்பா, இன்றைக்கு இவ்வளவு நேரம் சென்று வந்தாய்?" என்று அவள் கேட்டதற்குக் காரணம் கூறினேன்.

"என்னவோ அப்பா! தினமும் பொழுது இருக்கும்போதே வீடு சேர்ந்து விடுவாய். இன்றைக்கு வராமற் போகவே கவலையாக இருந்தது. இது ஆண் துணையில்லாத வீடாயிற்று? எவள் பெற்ற குழந்தையோ நீ, எங்க

---

ளில் ஒருவனாக இருந்து வருகிறாய். இன்றைக்கு என் பிள்ளைக்குத் திதி. பிழைத்திருந்தால் அவன் இந்த வேளைக்கு ஒரு குடும்பஸ்தனாகி, ஜானகிக்கும் கல்யாணம் செய்திருப்பான். வியாதியா, பாழா? ஒன்றுமில்லை. அந்தக் கடவுளுக்குக் கண்ணைக் கரித்தது. அழைத்துப் போய் விட்டான். நான் ஒருத்தி இருந்தும் இல்லாதவளோடு கணக்கு. அவளுடைய நல்லது கெட்டதை யார் கவனிப்பார்கள்? போகட்டும். இன்று நீ ஹோட்டலுக்குப் போகாவிட்டால் என்ன, சந்துரு? இங்கேயே சாப்பிடக்கூடாது?''



''அதற்கென்ன, பாட்டி? கட்டாயம் சாப்பிடுகிறேன்'' என்றேன்.

கிழவி மெள்ள எழுந்து சுவரைத் தடவியவாறே நடந்து உள்ளே சென்று கட்டிலில் அமர்ந்தாள். நானும் அங்கேயே சாப்பிட உட்கார்ந்தேன். ஜானகி எனக்காகத் தட்டில் சாதம் எடுத்து வந்தாள்.

''மகராஜன், அவர் போனாலும் எங்களுக்குக் கொஞ்சம் மிச்சம் வைத்து விட்டுப் போனார். இந்த வீட்டைத் தவிர நான்கைந்து ஏக்கரா நிலம் இருக்கிறது. கால் மேல் கால் போட்டுக்கொண்டு வீட்டில் உட்கார்ந்தாலும் வருஷத்துக்கு ஐந்நூறு ரூபாய் ஆதாயம் வரும். அதைத் தவிர நகைநட்டு இருக்கவே இருக்கிறது. தகுந்த இடத்தை நிச்சயம் செய்து, முன் நின்று சுபகாரியத்தை நடத்தி வைப்பவர்கள்தான் இல்லை!''

''வேளையும் பிராப்தமும் கூடி வந்து விட்டால் இடம் தானாகவே தேடிக் கொண்டு வருகிறது'' என்று முயற்சியோடு ஒரு வார்த்தையைப் பேசி வைத்தேன்.

சற்று நேரம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து விட்ட கிழவி, ''அண்ணாவுக்கு என்ன வேண்டுமோ? கவனித்துக் கொண்டிருக்கிறாயா, ஜானகி?'' என்றாள்.

''இலையில் முதலில் வைத்த சாதம் இன்னும் அப்படியே இருக்கிறது'' என்றாள் ஜானகி, நான் ஏதோ மகத்தான குற்றம் இழைத்து விட்டது போல.

''இது ரொம்ப நன்றாயிருக்கிறதே, பாட்டி! ஜானகியைப் பீமனைப் போன்றவன் எவனுக்காவதுதான் கட்டிவைக்க வேண்டும்! இல்லாவிடில் அவன் முதலில் போட்ட சாதத்தையாவது முழுவதும் சாப்பிட்டுச் சமாளிப்பது கஷ்டம்'' என்றேன்.

ஜானகி 'கல கல' வென்று சிரித்தவாறே இரண்டாவது தடவை தட்டு நிறையச் சாதத்தை எடுத்து வந்தாள்.

ஜானகி அவ்வளவாக உயரமுமல்ல, குள்ளமுமல்ல. தண்ணீர்ப் பஞ்சம் இல்லாத கிணற்றின் மேடு, நல்ல சத்துள்ள மண்ணில் வளரும் புஷ்டியான வாழைச் செடி போன்ற அழகிய உடற்கட்டு அவளுடையது! உண்மையில் ஜானகி அப்படி ஒன்றும் காண்பதற்கரிய பேரழகியல்ல. அவளைப் போன்ற அழகிகள் நமக்கு எங்கும் காணப்படுவார்கள். அழகை விட முக்கியமாக அவள் கண்களிலும் பேசும் விதத்திலும் எதிராளியை உடனே கவர்ந்து விடுவது அவளுடைய வெகுளித்தனம்தான்! அவள் எந்த வார்த்தை சொன்னாலும் அது பூமியின் ஆழத்திலிருந்து தானாக மேலே பொங்கிவரும் தண்ணீரைப் போல் களங்கமில்லாமலும் இனிமையோடும் செவிகளில் கேட்கும். எத்தனை சிறிய ஹாஸ்யத்துக்கும் அவள் 'கலகல' வென்று சிரித்து விடுவாள். அந்தச் சிரிப்பு கோடைகாலத்துக் குமுதத்தைப் போன்று குளிர்ந்து வெண்மையாக விரிந்து எதிராளிக்குச் சுகத்தை யூட்டும். பத்துப் பதினைந்து நாட்களுக்கு முன்பு ஜானகி எனக்குப் புதியவள். நான் ஜானகிக்குப் புதியவன். ஆனால் அந்தப் பேச்சும் அந்தச் சிரிப்பும் இந்தக் குறுகிய காலத்துக்குள் எங்கள் புதுமையை மாயமாகப் போக்கடித்து விட்டன.

அந்தத் தாயையும் மகளையும் பார்த்தால் அந்தக் குடும்பத்துக்கும் வெளியுலகுக்கும் இடையே சங்கிலி எப்போதோ அறுந்து போய் விட்டதாகத் தோன்றும். ஜானகியின் அத்தை அந்த ஊரிலேயே இருந்தாள். கிழவியின் பேச்சில் ஒவ்வொரு சமயம் ஊரில் நான்காவது தெருவிலேயே இருக்கும் அந்தப் பந்துக்களைப் பற்றிய செய்திகள் அடிபடும். அவர்கள் புதிதாகக் கார் வாங்கினார்கள். பங்களா கட்டினார்கள். பெரிய அளவில் வியாபாரம் நடக்கிறது. அந்த அத்தைக்கு ஒரே மகன். குடும்பங்கள் இரண்டும் சம அந்தஸ்தில் இருந்தபோது அவனுக்கு ஜானகியை மணம் செய்விக்க வேண்டுமென்று அவர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்களாம். ஆனால் காலத்தின் வஞ்சனையால் அந்தஸ்தில் மாறுதல் ஏற்பட்டதும் அவர்களுடைய அந்தப் பாசம், கொதிக்கும் மணலில் ஊற்றிய நீரைப்போல் மாயமாகி விட்டது.

''அவனை நீயும் எப்போதாவது பார்த்திருப்பாய், சந்துரு. வேறு ஒன்றும் வேலை கிடையாது. தெருவில் சுற்றிக் கொண்டிருப்பான். அவனைப் பற்றி நான் சொன்னால் நன்றாக இருக்காது. ஊரில் யாரைக் கேட்டாலும் உனக்குத் தெரிய வரும். வாசு வருகிறான் என்றால் போதும், வயது வந்த பெண்கள் வீட்டுக்குள் புகுந்து தாழ்ப்பாள் போட்டுக் கொள்வார்கள்'' என்பாள் கிழவி.



பொங்கல் பண்டிகை கழிந்து நான்கு ஐந்து நாட்கள் சென்றிருக்கும். அன்று இரவு நன்றாகப் பொழுது போகும் வரையில் படித்துக் கொண்டிருந்து விட்டேன். தாலுகா ஆபீஸில் சேவகன் பன்னிரண்டு மணி அடித்தான். நான்கு மணிக்கு அலாரம் வைத்து விளக்கைக் குறைத்து விட்டு, பாய் மீது படுத்துக் கொண்டேன். இன்னும் தலைக்குள்ளே கிரேக்க தேசத்து அரசியல் புரட்சிகள், ஆங்கிலேயர்களின் ரோஜாப்பூ யுத்தங்கள், இந்தியாவில் மகம்மதியர்களின் படையெடுப்புக்கள் எல்லாம் கலப்படமாகிச் சுற்றிக்

கொண்டிருந்தன. நித்திரா தேவியின் அணைப் பிலுல் சிறிது சிறிதாக மூளையின் உஷ்ணம் குறைந்து கொண்டு வந்தது. இன்னும் ஒரு ஐந்து நிமிஷங்களில் ஆழ்ந்த நித்திரையில் இருப்பேனே, என்னவோ! வாசற்படிகளின் மீது ஏதோ சத்தம் கேட்டது. யாரோ நடக்கும் சத்தம்! அந்தத் தெருவில் அவ்வப்போது திருட்டுகள் நடக்கும். சிறிது ஜாக்கிரதையாக இருப்பது எதற்கும் நல்லது. விளக்கைப் பெரிது படுத்துவதற்காகக் கையை நீட்டினேன். விளக்கு கைக்கு இன்னும் ஒரு முழ தூரத்திலிருந்து விட்டது. விளக்கைப் பெரிதாக்கும் எண்ணத்தைக் கை விட்டு விட்டேன்.

அறையில் படுத்தவாறே, வராந்தாவில் நடப்பதைத் தெரிந்து கொள்வதற்கு அந்தச் சிறு விளக்குக்கூடச் சிறிது உதவி புரிந்தது. மூன்று பலகைகளால் இணைக்கப்பட்ட கதவில் ஒவ்வொரு பலகைக்கும் நடுவே சிறிது இடை வெளி இருந்தது. அந்த இடைவெளி வழியாக விளக்கின் ஒளி வராந்தாவின் மறு கோடியில் இருக்கும் சுவர் மேல் விழுந்து கொண்டிருந்தது. இருந்தாற் போலிருந்து அந்த ஒளிக் கிரணங்களுக்குத் தடை ஏற்பட்டது. சிறிதும் சந்தேகமே இல்லை. அது ஒரு மனித உருவம்!

ஜன்னலின் அருகே நின்று கம்பிகளின் வழியே அறைக்குள்ளே பார்த்துக் கொண்டிருக்கிறான். யாரோ? எதற்காகவோ? எனக்குப் புரியவில்லை.

"ஜானி! ஜானி!" குரல் மிகவும் மெல்லியதாகக் கேட்டது.

அப்படியானால் அவன் ஜானகிக்குத் தெரிந்தவன்தானா? யார் அவன்? அவன் கழுத்தைத் திருகிப் போட்டு விட்டால் நன்றாக இருக்கும். எலும்புகளை ஒடித்து அவன் உடலை உருட்டி, கால்பந்து போல் ஆகாயத்துக்கு உதைத்துத் தள்ளினால் இன்னும் நன்றாக இருக்கும்.

இதற்குள் வளையல்கள் குலுங்கின.

"என்ன இது? எதற்கு?" இது ஜானகியின் குரல்தான்.

"கதவைத் திற!"

"எதற்கோ? சொல்லேன்."

"திற, சொல்கிறேன்."

கதவருகில் நகர்ந்தேன். அவன் மறைந்து போய்விடுவதற்குள் அவன் முகத்தைத் தெளிவாகப் பார்க்க வேண்டுமென்று எனக்கு ஆத்திரம். பார்த்து நான் செய்யப் போவது ஒன்றுமில்லை. இருந்தாலும் அவனைக் காண்பதற்கு முயன்றேன். குருட்டு வெளிச்சத்தில் அவன் முகம் எனக்கு ஒருகணம் மட்டும் தென்பட்டது. அந்தக் கணத்திலேயே அவனை நான் புரிந்து கொண்டுவிட்டேன்.

அவன் கதவை நெருங்கினான். கதவு மெல்லத் திறந்தது. அவன் நிழலைப் போல் உள்ளே நகர்ந்து மறைந்து விட்டான். கதவுக்குத் தாள் போடப்பட்டது.

அந்த நடுநிசியில் என் உள்ளத்தில் எப்படிப்பட்ட புயல் வீசிற்றோ, என்னால் விவரிக்க முடியாது. என் கண்கள் முன் உலகமே 'கிர்' என்று சுழல்வது போலிருந்தது. நான் இது வரை சுவர்க்கத்தில் இருப்பதாக நினைத்தேன். பிரமைப்பட்டேன். அது தவறு. இது நரகம். சுவர்க்கமென்ற தவறான எண்ணத்துடன் நான் நரகத்தில் இருந்திருக்கிறேன். ஐயோ, என்ன விவரிக்க இயலாத துன்பம் இது?

சலசலவென்று கொதிக்கும் எண்ணெயில் என்னை எதற்குப் போட்டு வறுத்துக் கொண்டிருக்கிறார்கள்? ஊசிகள் பதிக்கப்பட்ட இயந்திரப் பலகைகளின் மத்தியில் என்னை நிறுத்தி வைத்து எதற்காகச் சித்திரவதைக்கு உள்ளாக்கிக் கொண்டிருக்கிறார்கள்? நான் என்ன தவறு செய்தேன்?

தவறு செய்தது நானல்ல! ஜானகி. அவள் தவறு செய்கிறாளென்று நான் ஏன் துன்பப்படவேண்டும்? அவன் யார்? நான் யார்? நான் விஷப் பாம்பை மலர் மாலையென்று எண்ணினேன். உண்மை இன்று வெளிப் பட்டது. பாம்பின்



படத்தைப்போல மேலெழுந்த யௌவனத்தின் மமதையால் கண்கள் தெரியாமல் நடந்து கொள்கிறாயா, ஜானகி? நடந்துகொள். நீஎன்னவாய்ப் போனாலும் எனக்குக் கவலையில்லை !

விளக்கைப் பெரிதாக்கினேன். கூஜாவை யெடுத்து ஒரு பொட்டுத் தண்ணீரைக்கூட மிச்சம் வைக்காமல் கடகடவென்று குடித்து விட்டேன். தூக்கம் வரும் சமயம் மிஞ்சி விட்டது. இன்று சிவராத்திரிதான்! கைக்குத் தட்டுப்பட்ட புத்தகத்தைக் கையில் எடுத்தேன். ஆனால் மனம் புத்தகத்தில் ஈடுபடவில்லை. அது லகானில்லாத குதிரைபோல் எவ்வளவு முயன்றாலும் பத்துப் பதினைந்து நாட்களுக்கு முன்பு நடந்த சம்பவத்துக்கே தாவிச் சென்றது.



எப்போது தலையணைமேல் சாய்ந்து விட்டேனோ, தெரியாது. விழித்தபோது சூரியனின் ஒளிக் கற்றைகள் ஜன்னல் வழியே பாய்ந்து பாயைத் தழுவிக் கொண்டிருந்தன. விளக்கு பெரிதாக எரிந்து கொண்டே இருந்தது.

கதவைத் திறந்து கொண்டு புழக்கடைப் பக்கம் சென்றேன். ஜானகி கிணற்றடியில் பாத்திரங்களைத் துலக்கிக் கொண்டிருந்தாள். அவள் முகத்தில் அணுவளவு கவலைகூடத் தெரியவில்லை.

''அதென்ன அண்ணா! இரண்டு மாதங்கள் படுக்கையில் விழுந்தவனைப் போல மாறிவிட்டிருக்கிறாயே!'' என்று விசாரித்தாள் ஜானகி.

''இரவு எனக்குப் பைத்தியம் பிடித்திருந்தது, ஜானகி!'' என்றேன்.

''பேய் பிடிக்கவில்லையல்லவா?''

''அந்தப் பேய் உன்னைத்தான் பிடித்திருக்கிறது'' என்று கூறலாமென்று நினைத்தேன். கூறப் போனேன். ஆனால் கூறவில்லை.

அன்று ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டே ''எனக்கு ஒரு அறை எங்கேயாவது தேடிப் பார்த்துத் தருகிறாயா ரங்கம்மா பாட்டி?'' என்று கேட்டேன்.

''ஏன்? இப்போது இருக்கும் அறைக்கு என்ன வந்தது?'' என்றாள் ரங்கம்மா.

''என்னமோ, எனக்குப் பிடிக்கவில்லை.''

''அந்தத் தாயும் மகளும் உன்னைச் சொந்த மனிதனைப் போல் பார்த்துக் கொண்டிருக்கும்போது நீ பிடிக்கவில்லை யென்கிறாயே! ஆனாலும் கோடை விடுமுறை வரட்டும். பொறுத்துக் கொள். எங்கேயாவது அறை காலியானால் சொல்கிறேன்'' என்றாள்.

★

**பா**க்குக் கடிக்கும் நேரத்துக்குள் ஓடிவிடும் பகல்களோடும், எவ்வளவு நேரமானாலும் நகராத இரவுகளோடும் இருபத்தெட்டு நாட்கள் கொண்ட பிப்ரவரி மாதம் விடை பெற்றுக் கொண்டது. பரீட்சை எழுதிவிட்டு, பெட்டி படுக்கைகளைக் கட்டிவிட்டு, விடை பெற்று வருவதற்காக வீட்டுக்குள்ளே சென்றேன். கட்டிலில் ஒட்டிக் கொண்டிருந்த கிழவியின் முகத்தில் வரவர ஜீவ களை குறைந்து கொண்டு வந்தது. ஜானகியின் முகத்திலும் என்றுமில்லாத ஒரு சோக ரேகை எனக்கு அன்று தெளிவாகத் தெரிந்தது. நான் ஊருக்குக் கிளம்பிவிட்டேன் என்பதற்காக உண்டான சோகமா? அல்லது தன் தப்பிதத்தைத் திடீரென்று உணர்ந்துகொண்டதால் ஏற்பட்ட பச்சாத்தாபம் அவள் நெஞ்சின் ஆழத்தினின்றும் பொங்கியெழுந்து அவள் முகத்தை மாற்றி விட்டதா? புரியவில்லை.

''போய் வருகிறேன், ஜானகி!'' என்றேன்.

சமையல் செய்துகொண்டிருந்த ஜானகி என் பக்கம் திரும்பினாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகக் கன்னங்களின் வழியே வழிந்து கொண்டிருந்தது.

''எதற்காக அழுகிறாய், ஜானகி?'' அது ஆறுதல் வார்த்தையல்ல, வெறுமனேதான் ஏதோ சொல்ல வேண்டும் என்பதற்காகச் சொல்லி வைத்தேன்.

''அம்மாவின் நிலைமை இப்படி இருக்கிறது. எனக்கு அண்ணன் தம்பி கிடையாது. அக்கா தங்கையும் இல்லை.''

''ஆமாம். உண்மைதான்'' என்றேன்.

''இந்தத் திக்கில்லாதவளை மறந்துவிடுவாயா, அண்ணா!''

என் இதயத்தில் குத்தியிருந்த முட்கள் எல்லாம் ஒரே தடவையில் 'படக்'கெனப் பெயர்ந்தன. கண்களில் நீர் சேர்ந்தது. முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டேன். ''எப்படி மறப்பேன், ஜானகி! நீ இத்தனை நல்லவளாக இல்லாமல் இருந்தால் மறந்து போய்விடுவேனோ,என்னமோ! மனிதர்களுக்கு இவ்வளவு நல்ல மனசு உபயோகப்படாது. மனிதர்களில் பசுக்கள் இருக்கிறார்கள். அவர்கள் தேன் பூசப்பட்ட கத்திகளால் ஈரக் கழுத்துக்களை அறுக்கும் சக்தி வாய்ந்தவர்கள். இருந்தாலும் உனக்கொன்றும் பயமில்லை. கடவுள் உன்னைக் காப்பாற்றுவார்'' என்றேன்.

என் பேச்சு அவளுக்குப் புரிந்திருக்காது. வியப்படைந்து நின்றாள்.

''ஆம், ஜானகி! இவை நான் சொன்ன வார்த்தைகள் அல்ல. என்னையும் மீறிய ஏதோ ஒரு சக்திதான் என்னை இவ்வாறு சொல்ல வைத்தது'' என்று பெட்டியை எடுத்துக் கொண்டு வெளியே வந்தேன்.

ஜானகி அறை வாசற்படியைப் பார்த்த வாறே, ''மறுபடியும் வருவா யல்லவா, அண்ணா? இந்த முறை நீ வரும்வரை இந்தக் கதவு இப்படியே இருக்கும். நீயே வந்து சேர்த்து கொள்ள வேண்டும்'' என்று கரகரத்த குரலில் கூறினாள்.

''அப்படியே ஆகட்டும், ஜானகி! கடிதம் எழுதுவாயல்லவா?'' என்று எதேச்சையாகத் தான் கேட்டேன்.

ஜானகி கம்பத்தின்மேல் சாய்ந்தவாறே எழுதுகிறேனென்று தலையாட்டினாள். நான் தலை குனிந்தவாறே வேகமாகத் தெருவோடு யோசனை செய்தவாறு நடக்கலானேன்.......

"இதோ பாருங்கள்! உங்களைத் தானே!" கதவைத் தட்டிய ஒலியுடன் குரலும் கேட்டது.

"யார்? என்ன? எதற்கு?" என்றவாறு எழுந்தான் சூரியா.

"ஐயோ ராமா! அதென்ன பதற்றம்? ஓரேயடியாக விடாமல் டெலிபோன் மணி அடித்தது. கூப்பிடுவோமென்று வந்தேன்" என்றாள் நீரஜா.

கதவைத் திறந்து கொண்டே, "யார் கூப்பிட்டது? தெரிந்துகொள்ளக் கூடாதா?" என்று அலுத்துக் கொண்டான் சூரியா.

"தெரிந்து கொள்ளாமலென்ன? பேசுவது டாக்டர் செட்டூர். 'அவசரம், மிக மிக அவசரம்' என்று அவர் முறையிட்டுக் கொண்டிருக்கிறார்."

சூரியா ஒரு தாண்டலில் நான்கு படிகள் வீதம் தாவிக் குதித்துப் படிகளைக் கடந்து, ரிஸீவரைக் கையிலெடுத்துக் கொண்டான்.

"ஹலோ டாக்டர்! சூரியநாராயணன் பேசுகிறேன். என்ன நடந்தது?"

"காலையில் நீங்கள் அனுப்பினீர்களே, அந்தக் கிழவன்...."

"சொல்லுங்கள். என்னவானான்?"

"அவன்நிலைமை அபாயமாக இருக்கிறது."

"இருக்கும். ஏன் இருக்காது? அவன் மனித குலத்துக்குக் கோடரிக் காம்பாகப் பிழைத்தான். மானவதிகளின் கற்புக்கு இடையூறாகப் பிழைத்தான். இதை நான் சொல்லவில்லை. என் தகப்பனார் சொல்கிறார். பாவங்கள் சும்மா விட்டுவிடுமா, டாக்டர்? பாம்புகள் தவளைகளைத் துரத்தும். பாவங்கள் மனிதர்களைத் துரத்தும். துரத்தட்டும். அதற்கு யாரென்ன செய்ய முடியும்? நீங்கள் ...நீங்கள்..."

கரத்தைச் சூரியாவின் வாய்க்குக் குறுக்கே நீட்டி, "என்ன இது உங்கள் பிதற்றல்?" என்று தடுத்தாள் நீரஜா.

சூரியா சிறிது சமாளித்துக் கொண்டு நீரஜாவின் கையைத் தள்ளி விட்டு, "உங்களால் முடிந்ததை நீங்கள் செய்யுங்கள், டாக்டர்! அதைவிட என்னால் வேறு என்ன சொல்ல முடியும்?" என்று கூறினான்.

"ஆல்ரைட். முயற்சி செய்கிறேன்" என்றது மறு பக்கத்திய குரல். சூரியா ரிஸீவரை அதன் இடத்தில் வைத்து விட்டு, மாடிப்படிப் பக்கம் திரும்பினான்.

"சற்று இருங்கள். காப்பி குடித்துவிட்டுப் போங்கள்" என்று கூறி விட்டு நீரஜா சமையலறைக்குள் சென்றாள்.

கைவிரல்களைக் கிராப்புக்குள் நுழைத்து, தலையை அழுத்திப் பிடித்தவாறே சூரியா நாற்காலியில் உட்கார்ந்தான். நீரஜா எப்போது வந்தாளோ, அதுவும் அவனுக்குத் தெரியாது. உதடுகளின்மீது சூடான 'கப்' பட்டு, 'சுருக்'கென்றதும் தூக்கிவாரிப் போட்டவாறே அவன் கண்களைத் திறந்தான்.

"காப்பியைக் குடியுங்கள்" என்றாள் நீரஜா.

சூரியா 'கப்'பைக் கையில் வாங்கிக்கொண்டு முகத்தை மேலே எடுத்துக் காப்பியை வாயில் ஊற்றிக் கொண்டான்.

"அதென்ன? இன்றைக்குக் காப்பியைத் தண்ணீரைப் போலக் குடித்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று வியப்படைந்து போய்க் கேட்டாள் நீரஜா.

'கப்'பை மேஜைமேல் வைத்துவிட்டுச் சூரியா அப்படியே எழுந்தான். தனக்கு எதிரில் அலங்காரமாக மாட்டப்பட்டிருந்த பெரிய புகைப்படத்தையே பார்த்தவாறு முன்னே நடக்கலானான்.

'சௌபாக்கியவதி ஜானகி' படத்தின் கீழே யார் எழுதினார்களோ! அந்த எழுத்துக்கள் முத்துக்களைப் போல ஒளிவிட்டன.

"உங்கள் போக்கைப் பார்த்து இன்றைக்கு எனக்குப் பைத்தியம்தான் பிடித்துவிடப் போகிறது! அது உங்கள் தாயாரின் புகைப் படம். இன்றைக்குப் புதிதாக அதில் என்ன தெரிகிறது?" என்று மிகுந்த கவலையோடு கேட்டாள் நீரஜா.

சூரியா திக்குத் திசை புரியாதவனைப்போல் நீரஜாவின் பேச்சைக் கேட்டான். மறுபடியும் புகைப் படத்தைப் பார்த்தான். அடுத்த கணம் மாடிப் படியில் வேகமாக ஏறித் தன் அறைக்குச் சென்றுவிட்டான்.

★

பட்டணங்களில் நேரம் செல்வதே தெரியாமல் காலம் ஓடிவிடும். நாட்டுப்புறங்களில் அன்ன நடைதான் போடும். ஊரில் மூன்று மாதக் கோடை விடுமுறை மூன்று யுகங்களைப் போலத் தோற்றமளித்தது.

என்னமோ! எனக்குத் தெரியாது. மூன்று மாதங்களாக ஒவ்வொரு நாளும் தபால்காரனுக்காக எதிர் நோக்கினேன். வந்தான், போய் விட்டான். ஜானகியிடமிருந்து மட்டும் கடிதம் இல்லை.

என் படிப்புக்காக அப்போதைக்கே என் தகப்பனார் ஐந்தாறு நூறுகள் கடன் வாங்கியிருந்தார். இன்னும் மூன்று வருடங்கள் படிக்காவிடில் என் படிப்பால் பிரயோசனம் ஒன்றுமில்லை. மாமியார் வீட்டிலிருந்து வரும் பெண்களுக்கு ஒவ்வொரு தடவையும் சீர் செய்து அனுப்ப வேண்டும். கடன் வாங்குவதற்கு மட்டும் இன்னும் எத்தனையோ அவசியங்கள் இருந்தன. ஆனால் ஒரு பத்திரத்திலாவது பத்து ரூபாய் 'செல்லுபடி' போட முடியுமென்ற அவகாசம் கண்ணுக் கெட்டிய வரை காணப்படவில்லை. நல்ல சமயத்துக்கு என் தகப்பனாருக்குப் புது வழி ஒன்று மூளைக்குத் தட்டுப்பட்டது. அவர் என்னை விவாக மார்க்கெட்டில் உட்கார வைத்தார். புத்திசாலித்தனம், படிப்பு, அழகு முதலிய என் யோக்கியதாம்சங்களைத் தெரிந்தவர்கள் மூலமாகவும், பந்துக்களின் மூலமாகவும் விளம்பரம் செய்வித்தார். இதன் பயனாக, ஒரு இடம் வந்தது. பெண் சிறியவள். என் படிப்பை இனி அவர்களே கவனித்துக்கொள்வார்கள். விவாகம் ஒரு வருடம் கழித்து நடந்தாலும் பாதகமில்லை. இந்த நிபந்தனைகளுடன் நடக்கப் போகும் அந்த விவாகத்துக்கு என் தகப்பனாருக்கும் அந்தப் பெண்ணின் தகப்பனாருக்கும் இடையே பேச்சு நடைபெற்று ஒப்பந்தங்கள் குதிர்ந்தன.

நாளை கல்லூரி திறக்கிறார்களென்றால் இன்று பகல் பன்னிரண்டு மணிக்கு அனந்தபுரத்தில் இறங்கினேன். ரங்கம்மா ஹோட்டல் ரயில் நிலையத்துக்கு அருகிலேயே இருந்தது.

ரயிலில் நெடுநேரம் உட்கார்ந்து நரம்புகள் பிடித்துக் கொண்டு விட்ட கால்களை இழுத்துக் கொண்டு தெருவில் நடந்துகொண்டிருந்தேன். அது கோடையல்ல. ஆனாலும் நெருப்புத் தழல்களைப் பரப்பியிருந்ததைப் போலக் கொதித்தது. கடந்து விட்ட கோடை காலத்தில் இப்படிப்பட்ட எரிக்கும் வெய்யில் இருக்கவில்லை. மேலும் மே மாதம் முழுக்க வானம் கறுத்து, பெரு மழை பெய்தது. சித்திரை வைகாசியைவஸந்த காலமென்று அழைக்கிறோம். சில செடிகள் சித்திரை வரும் முன்பே துளிர்த்து விடும். சில வைகாசி கழித்துத் தான் துளிர்க்கும். காலமென்ற சக்கரத்தில் நிலையாகப் பதிக்கப்பட்ட ருது தர்மங்களே காலம் மாறி வருகின்றன. இனி மனித சுபாவங்களைப் பற்றிக் கேட்க வேண்டுமா?

> **அருள் வாக்கு**
>
> இப்பொழுது பெரியோர்களிடந்தான் நமது தர்மம் கொஞ்சம் இருந்து வருகிறது. நாம் சமையல் பண்ண வேண்டியிருந்தால் அடுப்பில் செத்தை, புல் முதலியவைகளைப் போட்டு மூட்டுகிறோம். மழை நாளாக இருக்கிறது. நெருப்பு அணைந்து விடும்போலிருக்கிறது. கொஞ்சம் நெருப்புப் பொறிகள் மாத்திரம் பாக்கி இருக்கின்றன. அவைகளால்என்ன பண்ணுவோம் என்று நாம் விட்டு விட மாட்டோம். விசிறி, சிரமப்பட்டு முயற்சி செய்து மறுபடியும் பற்ற விடப் பார்ப்போம் அல்லவா? அதைப்போல் நம் முதியோர்களிடம் இருக்கும் ஆசாரத்தையும், தர்மத்தையும் எல்லோரிடத்திலும் பரவச் செய்யலாம் என்பதே எனது ஆசை.
>
> 
>
> — ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடி பீடம்.

"நன்றாக இருக்கிறாயா, அப்பா?" என்றாள் ரங்கம்மா கண்ணில் பட்டதும்.

"என்னமோ, இப்படி இருக்கிறேன்" என்று அலுப்புடன் கூறினேன்.

ரங்கம்மா அளித்த வரவேற்பை நான் அவ்வளவாக ரசிக்கவில்லை. இன்னும் சிறிது ஆதரவோடு அவள் என்னை வரவேற்றிருக்க வேண்டும். ஒன்றிரண்டு மாதங்கள் கழித்துத் தென்பட்டால் ரங்கம்மா வரவேற்கும் முறையே அலாதி. குடுகுடு வென்று அருகில் வந்து கண்களைப் பெரிதாக்கிக் கொண்டு, தலையோடு கால் உற்றுப் பார்த்துக்கொண்டே "இதென்ன ஐயா, இளைத்து விட்டாயே!" என்றோ, "உருளைக் கிழங்கைப் போல் ஊறி விட்டாயே பிள்ளைவாள்! கல்யாணத்தைப் பற்றி யோசிக்கக் கூடாதா?" என்றோ சிரித்தவாறு விசாரிப்பது ரங்கம்மாவின் வழக்கம். எனக்கு அது போன்ற மரியாதை எதுவும் நடக்கவில்லை. மரியாதை நடக்காததற்காக அல்ல என் கவலை! ரங்கம்மாவுக்கு ஏனோ என் மேல் சிறிது அலட்சியம் ஏற்பட்டிருக்கிறது. காரணம் என்ன?

ஹாலில் சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்கள் ஒவ்வொருவராக வெளியேறி விட்டார்கள். இரண்டாவது பந்திக்கு நானே எஞ்சி நின்றேன். ஹோட்டலில் புதிதாக வேலையில் சேர்ந்த சிறுவன் ஒருவன் பரிமாறிக் கொண்டிருந்தான். இரவு சமையலுக்காகக் கத்திரிப்பிஞ்சுகளை நறுக்குவதற்கு அரிவாள்மனை முன் உட்கார்ந்த ரங்கம்மா உற்றுப் பார்த்துவிட்டு, "மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கக் கூடாது" என்றாள்.

வானத்திலிருந்து இடியொன்று பெயர்ந்து தலை மேல் விழுந்தாற் போலிருந்தது எனக்கு. சாப்பிடுவதைக்கூட மறந்தவனாக அவளை வியப்புடன் நோக்கலானேன்.

"ஒரு வருட காலம் அந்த வீட்டில் இருந்தாய். உன்னை அங்கேயே சாப்பிடச் சொல்லியும் வற்புறுத்தினார்கள்! நீ அத்தனை தூரம் அவர்களுக்கு வேண்டியவனானாய். இந்த உலகத்தில் அவர்களுக்கு ஆண் துணை யென்றிருந்தால் அது நீ ஒருவனேதான்! ஆனால் நீ செய்ததென்ன?"

"என்ன செய்தேன்?" உண்மையில் நான் ஏதும் தவறு இழைக்கவில்லை. ஆனால் ஏனோ பயத்தின் மிகுதியில் என் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. அந்தக் கணத்தில் என் முகம் வெளிறிப் போயிருக்க வேண்டும்.

"இன்னும் என்ன செய்ய வேண்டும்? அந்தக் கிழவியின் பிராணன் போன சமயத்தில் நீ வந்திருக்க வேண்டாமா? பாவம், அந்தப் பெண் தன்னந் தனியாக என்ன செய்வாள்? போதாக் குறைக்கு வெறும் மனுஷியாகவும் இல்லை!"

"என்ன!!!"

என் பதட்டத்தைக் கேலி செய்வது போல் ஒரு தடவை எகத்தாளமாகச் சிரித்துவிட்டு, "என்னமோ அப்பா, உனக்குத்தான் தெரிய வேண்டும்! எங்களுக்கென்ன தெரியும்?" என்றாள் ரங்கம்மா.

"எனக்கொன்றும் தெரியாது" என்றேன். சொல்லவா சொன்னேன்? தெருவுக்கெல்லாம் கேட்குமாறு கத்தினேன்.

"உனக்கொன்றுமே தெரியாதா? நீ ஒரு பாவமும் அறியாதவனா?" என்று கண்டித்துக் கேட்டாள் ரங்கம்மா.

"ஆம். நான் ஒரு பாவமும் அறியாதவன். வேண்டுமென்றால் இதோ சாப்பிடப் போகும் இந்தச் சாதத்தைக் கையில் வைத்துக் கொண்டே பிரமாணம் செய்கிறேன்" என்று கூறினேன்.

ரங்கம்மா விசித்திரமான மனுஷி. ஒரே கணத்தில் அவள் கோபமெல்லாம் என் மேல் வெறுப்பாக மாறிவிட்டது. "தவறு செய்யாவிட்டால் உனக்கு எதற்குக் கோபம் வருகிறது? உன்னுள்ளே தோஷமில்லாவிடில் என் வாயிலிருந்து வார்த்தை வெளி வந்தும் வராமலும் இருக்கும் போதே நீ எதற்கு சத்தியத்தில் இறங்க வேண்டும்?"

இதென்ன விதண்டாவாதம்? ரங்கம்மாவுக்கு நான் எவ்வாறு சமாதானம் கூறுவேன்?

எவ்வாறு சொன்னால் இவள் நம்புவாள்? உலகமே காக்கைகளின் கூட்டம்தான். அந்தக் காக்கைகளின் பிரதிநிதி ரங்கம்மா. அவள் "கா, கா" என்கிறாள். இனி காக்கைகள் எல்லாம் சேர்ந்து கத்தும். என் காதுகள் ஓட்டை விழுந்து விடும். என்னால் கேட்க முடியாது. பொறுக்க முடியாது. கேட்க முடியாமல், அந்த வேதனையைப் பொறுக்க முடியாமல் என்னால் என்ன செய்ய முடியும்?

இலையில் சாதத்தை அப்படியே வைத்து விட்டு எழுந்தேன். "நீ நல்லவளென்று நினைத்தேன். நீ மலடி. உனக்குப் பிள்ளைகள் இருந்தால், அவர்கள் மீது இப்படிப்பட்ட அபவாதத்தை யாராவது சுமத்தியிருந்தால் அப்போது என் வேதனை உனக்குப் புரிந்திருக்கும்" என்று சொல்லிவிட்டுத் தொட்டியில் கையைக் கழுவிக் கொண்டேன்.

"இப்படிப்பட்ட அயோக்கியன் என் பிள்ளையாயிருந்தால் இப்படியும் அப்படியும் நான்கு அறைகள் விட்டு, இரண்டு மாதங்கள் முந்தியே அந்தப் பெண்ணை அவனுக்கு முடி போட்டு விட்டிருப்பேன்."

வாசற்படிகள் இறங்கியவாறு அந்த வார்த்தைகளைக் கேட்டு நின்றேன். இனி ரங்கம்மாவோடு வாதித்துப் பயனில்லை. தலை குனிந்தவாறே மெள்ளத் தெருவில் இறங்கினேன்.

நடந்து கொண்டிருந்தேன். போகும் இடம் தான் தெரியவில்லை. 'மனம் விட்டுப் பேசி, என் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளக்கூடியவர்கள் யார் இருக்கிறார்கள், ஜானகியைத் தவிர! ஜானகியாம் ஜானகி! தவறைச் செய்யவும் செய்து விட்டு, அபவாதம் ஒரு பாவமும் அறியாத என்மேல் விழுந்தும், பதறாமல் பேசாமல் மாறுதல்களுக்காக எதிர்நோக்கிக் கொண்டிருக்கும் ஜானகி! இந்த ஜானகியை என்ன செய்தாலும் பாவமில்லை. இனிமேல் கல்யாணம், கால்கட்டு செய்து கொள்ள வேண்டியவன். நான்கு பேர் நடுவில் தலைநிமிர்ந்து நடக்க வேண்டியவன். அவளை உடன் பிறந்தவளாகத் தவிர வேறு விதமாகப் பார்த்த பாவத்திலும் போகாதவன். என்னை இப்படி அவதூறுகளின் வசம் சிக்க வைத்து விட்டு, நான்கு சுவர்களுக்குள்ளே உட்காருவாளா அந்த ஜானகி! உண்மையை வெளிப்படுத்த வேண்டிய அவசியம் நேரிட்டபோது அதை வெளிப்படுத்தாமல் மௌனமாக இருப்பதைவிடப் பெரிய தவறு வேறொன்றும் கிடையாதென்று ஜானகிக்குத் தெரியாதுபோலும். கேட்பேன். கண்டித்துக் கேட்பேன். நான் அசடனல்ல. உண்மையைக் கக்க வைத்து இந்த உலகத்தின் வாயை மூட என்னால் முடியும்.'

இந்த முடிவுக்கு நான் வந்தபோது ஊரின் எந்தப் பாகத்தில் எங்கே இருந்தேனோ, அறியேன். பிறகு ஐந்து நிமிடங்களில் "ஜானகி! ஜானகி!" என்று கூப்பிட்டுக் கொண்டே கதவை இடித்துக் கொண்டிருந்தேன்.

அக்கம் பக்கத்துக்காரர்களில் சிலர் அப்போதே என் வரவை மோப்பம் பிடித்து விட்டனர். என் துணிச்சலுக்கு அதிசயப்பட்டு ஒருவர் காதை ஒருவர் கடித்துக் கொண்டார்கள். கண் ஜாடைகளாலும் என்னைப் பற்றிப் பலவாறு பேசிக் கொண்டார்கள்.

கதவு மெல்லத் திறந்தது. உள்ளே நுழைந்தேன். கண்களை நிமிர்த்தி ஜானகியைப் பார்ப்பதற்கு மனம் இடந்தரவில்லை. வேறு எங்கோ பார்த்துக் கொண்டே உள்ளே சென்று கட்டிலில் அமர்ந்தேன்.

"ஊரிலிருந்து எப்போது வந்தாய் அண்ணா?"

எதேச்சையாகத் தலை நிமிர்ந்து ஜானகியைப் பார்த்தேன். முகத்தில் ஒளி இல்லை. மலர்ந்து மலராமலிருக்கும் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை மலருக்குத் தண்டில் கடி விழுந்து விட்டது. அந்தக் கடி உலகத்துக்குத் தெரியவில்லை. ஆனால் மலர் வாடுவதை மட்டும் உலகம் மிக மிக ஊன்றிக் கவனிக்கிறது. கடைசியில் அது வாடிப்போய், சருகாகி, உலர்ந்து, இறந்து போவதையும் உலகம் சலனமேதுமின்றிப் பார்க்கிறது.

இடிந்துபோன மாளிகைகளில் கணக்கின்றி வளரும் புதர்களைப்போல் ஜானகியின் இதயத்தில் வேதனைகள் மண்டிக் கிடக்கும் விஷயம் யாருக்குத் தெரியும்?

"மத்தியானம் ரயிலில் வந்தேன். நேரே ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வருகிறேன்."

"பார்த்தால் சாப்பிட்டவனைப் போல் தெரியவில்லையே!"

"சாப்பிட வேண்டுமென்றுதான் உட்கார்ந்தேன். ஆனால் முழுக்கச் சாப்பிட முடியாமற் போனேன்."

"எதற்காக, அண்ணா!"

"எதற்காகவா? உன் அம்மா இறந்து விட்டால் ஒரு கார்டு போடுவதற்குக் கூடப் பொறுமையில்லாமல் போயிற்றா உனக்கு? அவசியமில்லாத போதெல்லாம் வாரத்துக்கு ஒரு கடிதம் எழுதுவாய். என்னமோ, பெண்களின் மனம் யாருக்குப் புரிகிறது?"

"நான் முன்போல் இருக்கிறேனா, அண்ணா? இல்லை. கெட்டு விட்டேன். இப்போது நான் என்ன செய்தாலும் உலகத்துக்குத் தவறாகவே தான் தெரியும். அதனால்தான் உனக்குக் கடிதம் எழுத வில்லை."

ஜானகி இத்தனை தெளிவாகத் தன் தவறைப் பற்றிப் பேசுவாளென்று நான் எதிர்பார்க்கவேயில்லை! அவள் தவறு செய்வதில் எவ்வளவு தைரியத்தைக் காட்டினாளோ, அதை வெளிப்படுத்துவதிலும் அதே தைரியத்தைக் காட்டினாள்.

வெளியில் வெப்பம் இன்னும் குறையவில்லை. ஆனால் வீட்டுக்குள்ளே குளிர்ந்திருந்தது. வெயிலில் காய்ந்து காய்ந்து பளுவேறிய என் தலை என்னையறியாமலேயே கட்டிலின்மேல் சாய்ந்து விட்டது. கண்களை மூடியவாறு யோசனையில் ஆழ்ந்தேன். நான் ஜானகியை நன்றாகக் கண்டிக்க வேண்டுமென்று நினைத்திருந்தேன். ஆனால் எங்கே? எப்போது கண்டித்தேன்? அவள் கடிதம் எழுதாததை ஒரு குற்றமாக எடுத்துக்காட்ட மட்டும்தான் என்னால் முடிந்தது. அவள் கடிதம் எழுதியிருந்து, விடுமுறையில் நான் ஒரு முறை இங்கே வந்திருந்தால் அந்தச் சம்பவத்தால் உலகத்தாரின் சந்தேகம் இன்னும் சற்றுப்பலப்பட்டிருக்கும். ஜானகிக்கும் எனக்கும் தவறான சம்பந்தம் இருக்கிறதென்று உலகம் நினைத்தால் அதற்குப் பொறுப்பாளி ஜானகி மட்டு

## இதன் பரிசுத்தம் தோலில்



பாதுகாக்கப்படுகிறது.

# துஷார்

**விடமின் கொண்ட**
**வனஸ்பதி**

**இதன் பரிசுத்தம்**
**சீல் செய்யப்பட்ட**
**டப்பாவில்**
**பாதுகாக்கப்படுகிறது.**




**2 பவுண்டு,**
**5 பவுண்டு,**
**10 பவுண்டு**
**டின்களில்**
**கிடைக்கிறது**

**துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட்., கர்நூல்**

மல்ல. நான் இந்த வீட்டில் ஏழெட்டு மாதங்கள் குடியிருந்தேன். ஆனால் நான் வாடகைக்குக் குடியிருந்தேனென்று யார் நினைத்தார்கள்? என் நடத்தை எல்லை மீறிற்று. அப்போது ஜானகியையும் என்னையும் பார்த்தவர்கள் எவ்வளவு தூரமாவது ஊகித்துக்கொள்ள இடமிருந்தது. அவர்களுக்கு அப்படி இடம் அளித்ததில் ஜானகியின் தவறு எவ்வளவோ, என் தவறும் அவ்வளவே! உண்மை இவ்வாறு இருக்க ஜானகியை நான் என்னவென்று கண்டிக்க முடியும்?

ஜானகி இப்போது வெறும் மனுஷியல்ல. ரங்கம்மா சொல்லாமல் இருந்தாலும், இந்த விஷயம் இப்போதைக்கு எனக்குத் தெரிந்திருக்கும். இப்போது ஜானகி வெட்கத்தை உதறிவிட்டுத் தன்னை இந்தக் கதிக்கு ஆளாக்கியவன் யாரென்பதை உலகத்துக்குத் தெரியப்படுத்தினால் நான் இந்தப் பிரச்னையினின்றும் வெளிவர இயலும். ஆனால் தன் சந்தேகங்களும் ஆதாரங்களும் வேறுவிதமாக இருக்கையில் ஜானகி கூறும் அந்த உண்மையைத் தர்க்கவாதங்களின்றி உலகம் நம்பிவிடுமென்ற நம்பிக்கை ஏது? நானும் ஜானகியும் சேர்ந்து கொண்டு இந்த அவதூறை மூன்றாவது மனிதன்மேல் சுமத்துகிறோமென்று அது நினைத்து விட்டால்? . . .

"எழுந்து முகம் கழுவிக்கொள், அண்ணா! ஒரு பிடி சாதமாவது சாப்பிடு" என்றாள் ஜானகி அருகில் நெருங்கி.

"உனக்கு நினைவிருக்கிறதா, ஜானகி! அன்று நான் சுச்சிதமாகச் சொன்னேன்" என்று எழுந்து உட்கார்ந்து கொண்டேன். "மனிதர்களுக்கு இவ்வளவு நல்ல மனசு உபயோகப்படாது. மனிதர்களில் பகக்கள் இருக்கிறார்கள். அவர்கள் தேன் பூசப்பட்ட கத்திகளால் சுரக் கழுத்துக்களை அறுக்கும் சக்தி வாய்ந்தவர்கள்."

"உண்மைதான், அண்ணா!" என்றாள் ஜானகி. அவள் குரல் கம்மி விட்டது. "மோசம் போய் விட்டேன். தவறாமல் விவாகம் செய்து கொள்கிறேன் என்றான். நான் ஒப்புக் கொண்டால் கெட்ட வழக்கங்கள் எல்லாவற்றையும் விட்டு விடுகிறேன் என்றான். இப்படி மோசம் செய்வானென்று எனக்குத் தெரியவில்லை."

நான் அந்தக் கணம் மௌனம் வகித்திருக்க வேண்டும். ஒவ்வொரு சமயம் சமய சந்தர்ப்பம் தெரியாமல் பேசி விடுவது எனக்கே அல்ல, மனிதர்கள் எல்லோருக்கும் வழக்கம் தான். ஏற்கெனவே நெருப்பு ஜ்வாலை. அதில் நான் நெய்யை ஊற்றினேன்.

"இப்படி மோசம் நடக்குமென்று எனக்கு முதலிலிருந்தே தெரியும், ஜானகி! அன்று காலை எழுந்து நான் புழக்கடைக்கு வந்தேன். 'ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்' என்று நீ பேச்சுக் கொடுத்தாய். இரவு எனக்குப் பைத்தியம் பிடித்திருந்தது என்றேன். 'பேய் பிடிக்கவில்லையல்லவா?' என்றாய் நீ. அப்போதே சொல்ல வேண்டுமென்று நினைத்தேன்; அந்தப் பேய் உன்னைத்தான் பிடித்திருக்கிறது என்று. ஆனால் சொல்லவில்லை."

"நமக்கு ஏன் வம்பு என்று சும்மா இருந்து விட்டாயல்லவா?" சட்டென்று கேள்வியைத் தொடுத்தாள் ஜானகி.

அவனுக்கு அன்று ஒரு ரூபாய் தேவையாக இருந்தது.

அதைப் பற்றியே சிந்தித்துக்கொண்டு நடந்தான். 'கீழே கிடந்து ஒரு ரூபாய் கிடைத்தால், விநாயகருக்குப் பாதிக்குப் பாதி' என்று தீர்மானித்துக் கொண்டான்.

கொஞ்ச தூரம் சென்றதும் அவனுக்குப் புத்தம் புதிய அரை ரூபாய் நாணயம் கிடைத்தது.

அதைக் கையில் எடுத்துக் கொண்டவன், 'பகவான் பலே கெட்டிக்காரராகப் போய்விட்டார்! மனிதன் மனம் மாறி விடுவானோ என்று எண்ணித் தம் பங்கை முன்கூட்டியே எடுத்துக் கொண்டு விட்டார்!' என்று கூறி நடந்தான்.

"ஆம்!"

"உண்மைதான். உன் தங்கையாக இருந்தால் நீ அவ்வாறு சும்மா இருந்திருப்பாயா? அந்தக் கணத்திலேயே சரிப்படுத்தியிருப்பாய். எலும்புகளை முறித்து அறையில் தள்ளிப் பூட்டியிருப்பாய். நான் யார்? நான் எப்படிப் போனால் உனக்கு என்ன கவலை? இந்த உலகத்தின் நியாயமே இவ்வளவுதான், அண்ணா!

எனக்குஉண்மையாகவே பைத்தியம் பிடித்து விடுமோ என்றாகிவிட்டது! ஒரு மணி நேரத்துக்கு முன் என் கண்களுக்கு ஜானகி குற்றவாளி. ஆனால் இதற்குள் விஷயம் தலைகீழாகி விட்டது. நான் குற்றவாளியாகி விட்டேன்.

"அதெல்லாம் இப்போது எதற்கு, அண்ணா? சாப்பிட எழுந்திரு" என்றாள் ஜானகி.

எழுந்து முகத்தைக் கழுவிக் கொண்டு உள்ளே சென்று மணையின்மீது அமர்ந்தேன். சாதம் பரிமாறிக் கொண்டே கூறினாள் ஜானகி. "அம்மாவுக்குப் பத்து நாட்கள் ஜுரம் அடித்தது. நான்கு நாட்கள் அவளுக்குச் சுய நினைவே இல்லை."

"மருந்து வாங்கிக் கொடுக்கவில்லையா?"

"டாக்டர் வந்து இரண்டு ஊசி போட்டார். குணம் தெரியவில்லை. உதட்டைப் பிதுக்கி விட்டுப் போய்விட்டார். ஜுரம் வந்த புதிதில் 'சந்துருவுக்காவது கடிதம் எழுதக் கூடாதா, ஜானகி?' என்பாள் அம்மா."

"அதற்கு நீ என்ன சொன்னாய்?"

"யார் வந்தாலும் செய்ய முடியப் போவது என்ன என்று நினைத்துக்கொண்டு சும்மா இருப்பேன். இன்னும் இரண்டு நாட்களில் நினைவு தவறிவிடப் போகிறது. அன்றைக்கு அம்மா என் அருகில் வரச் சொன்னாள். கட்டிலின்மேல் உட்காரச் சொன்னாள். என் தலையைத் தன் மார்பின் மேல் சாய்த்துக்கொண்டு, 'இந்தப் பொல்லாத உலகத்தில் தனியே எவ்வாறு பிழைப்பாய், ஜானகி?' என்று கேட்டுவிட்டு அழுதாள். 'கடவுள் இருக்கிறார் அம்மா' என்றேன். இரவில் தூக்கமே வராது. அடிக்கடி எழுந்து பாலைக் குடிக்கச் செய்வேன். சிலநாட்கள்வரையில்தான் ஒவ்வொரு முழுங்காகப் பாலைக் குடிப்பாள். அதன் பிறகு வாயில் ஊற்றிய

பால் அப்படியே வெளியே வந்துவிடும். ஒரு நாள் விடியற்காலையில் பாலைக் காய்ச்சிக் கட்டில் அருகே எடுத்துக்கொண்டு போனேன். அம்மா ஆடவில்லை, அசையவில்லை. இறந்து போய் விட்டாள்.''

ஜானகி விக்கி விக்கி அழுதாள்.

''அம்மா மட்டுமல்ல ஜானகி! நாமெல்லோரும் ஒரு நாளைக்கு இறந்துபோக வேண்டியவர்கள்தான்'' என்று எழுந்து கையைக் கழுவிக் கொண்டேன். ஜானகி இலையை எடுத்துப் போய்ப் புழக்கடையில் போட்டு விட்டுப் பிறகு உள்ளே வந்தாள்.

''ஒருதடவை நான் வாசுவுடன் பேசிப் பார்க்கிறேன், ஜானகி'' என்றேன் ஆகாயத்தைப் பார்த்தவாறே.

ஜானகி இரண்டு கணம் நிலைப்படியருகில் நின்றாள். பிறகு மௌனமாகச் சமையலறைக்குள் சென்று விட்டாள். அந்த நிலைமையில் மௌனமாக இல்லாமல் வேறுவிதமாக எவ்வாறு அவளால் தன் சம்மதத்தை வெளிக்காட்ட முடியும்?

கதவைத் திறந்துகொண்டு சரசரவென்று தெருவுக்கு வந்து விட்டேன். வாசுதேவன் தனியாகக் குடியிருக்கும் வீட்டை நான் ஒன்றிரண்டு முறைகள் பார்த்திருக்கிறேன். ஆனால் அவன் வீட்டில் தங்கும் மனிதனல்ல. அதிருஷ்டவசமாக அன்று மாலை வீட்டிலேயே இருந்தான். பார்க்கப் போனால் அதை வீடு என்று சொல்வது நன்றாக இருக்காது. அது ஆங்கிலேயர்களின் நடுநிசி 'கிளப்'பைப்போன்றது. நண்பர்களோடு சேர்ந்து அவன் சீட்டு ஆடிக் கொண்டிருந்தான். என்னைப் பார்த்த உடனே அவர்களில் ஒருவன் ''ஆட்டத்துக்கு வந்தாயா?'' என்று கேட்டான். ''இல்லை. பேசுவதற்கு வந்தேன்'' என்று வாசுவைக் காட்டினேன். என்னை விந்தையோடு பார்த்து, ''என்னோடு பேசவேண்டுமா?''என்றான் வாசு. ''ஆம்'' என்றேன். ''இங்கேயே பேசலாம்'' என்றான். ''ரொம்பநேரம் பிடிக்காது. ஐந்தே நிமிடங்கள். அந்த அறைக்குப் போகலாம்'' என்றேன். வாசு நான்கு ஆட்டங்கள் ஆடி விட்டுப் பிறகு எழுந்தான். அறையில் உட்கார்ந்து சொல்ல வேண்டியதைச் சுருக்கமாகத் தெரிவித்தேன். பெண்களை நம்பச் செய்து பிறகு மோசம் செய்வது மிகவும் சுலபமென்றும், காலணுவுக்கு வகையில்லாதவன்கூட அந்த வேலையைச் செய்வானென்றும், செய்த தவறை உணர்ந்து பிராயச்சித்தம் செய்துகொள்வது இகத்துக்கும் பரத்துக்கும் நல்லதென்றும் கூற முயற்சித்தேன். ''அந்தப் பெண்ணின் சார்பில் வக்காலத்து வாங்கிக் கொள்வதற்கு உனக்கும் அவளுக்கும் உள்ள சம்பந்தம் என்னவென்று தெரிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டான் வாசு. ஐந்து நிமிடகாலம் பெருமழைபோல அவன் பேசிய வார்த்தைகளில் பண்புள்ள உலகம் கேட்கத் தகுந்தது ஏதாவது இருந்ததென்றால் அது இந்த வார்த்தையொன்றுதான்.

திரும்பி வந்துகொண்டிருந்த எனக்கு அந்த அறையிலிருந்து 'கெக்கெக்கே' என்ற கேலிச் சிரிப்புகளும், 'ஹஹ்ஹஹ்ஹா' என்ற அட்டகாசச் சிரிப்புகளும் வெளி வந்து விடையளித்து வெளியேற்று தோஷமாக அனுப்பின.

வீடு சேரும்போது மணி எட்டரை. அந்த வேளைக்கு ஜானகி மூலையில் உட்கார்ந்து குடம் குடமாய்க் கண்ணீர் விட்டுக் கொண்டிருப்பாளென்று நினைத்தேன். என் எண்ணம் இதிலும் தலைகீழாயிற்று. அறைகள் எல்லாவற்றிலும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. கூடத்தில் பாய் விரித்துக் கொண்டு ஜானகி கண்ணாடியின் முன் அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். கூந்தலை நன்றாக வாரி, அழகாகப் போட்டுக்கொண்டு தலை நிறைய மல்லிகைப் பூவை வைத்துக் கொண்டாள். விழிகளுக்கு மைதீட்டிக்கொண்டாள்.இவள் நான் இரண்டு மணி நேரத்துக்கு முன்பு பார்த்த ஜானகியல்ல! இப்போது அவள் முகத்தில் கவலை மேகங்கள் சூழ்ந்து கொண்டிருக்கவில்லை. ஆனால் அந்த முகத்தில் வேறு எந்த பாவமும் புலனாகவில்லை. அது உணர்ச்சியின்றித்தான் இருந்தது.

''என்னவாயிற்று அண்ணா நீபோனவேலை?'' என்று கேட்டாள் ஜானகி.

''பழமல்ல, ஜானகி! காய்தான்'' என்று பெருமூச்செறிந்தேன்.

''இப்படியாகுமென்று எனக்குத் தெரியும்'' என்றாள் ஜானகி.

மலைகளை மாவாக அரைத்து விட்டவனைப் போல என்றுமில்லாத் தூக்கம் வந்தது. எப்போது கட்டிலின் மேல் சாய்ந்தேனோ, எப்போது தூக்கம் வந்ததோ, தெரியாது. இருந்தாற்போலிருந்து தூக்கம் கலைந்து எழுந்தேன். வெண்ணிலா பால் போல் காய்ந்து கொண்டிருந்தது. வீடு நிச்சப்தமாக இருந்தது. தாகத்தால் நாக்கும் நெஞ்சும் வறண்டு போயின. ''ஜானகி, ஜானகி'' என்று கூப்பிட்டேன். பதிலில்லை. ஜானகி எங்கே படுத்துக் கொண்டிருக்கிறாள்? அறைக் கதவைத் திறந்து வெளியே வந்து பார்த்தேன். பாய் காலியாக இருந்தது. என் நெஞ்சில் ரயில்கள் ஓடின. ஜானகியைக் கையார மரண தேவதைக்கு ஒப்படைத்த பாவத்திலிருந்து நான் எவ்வாறு மீள்வேன்? சுற்றிலும் நோக்கினேன். வாசலுக்குப் போகலாமென்று நினைத்தேன். ஆனால் வாசற் கதவுக்குப் போட்ட தாழ்ப்பாள் போட்டவாறே இருந்தது. அப்படியென்றால் ஜானகி புழக்கடைப் பக்கம் தான் போனாள் போலும்! நாலே எட்டில் புழக்கடைக்கு ஓடினேன். கிணற்றுக்குப் பத்து கஜத்தில் பூவரச மரம் ஒன்று இருந்தது. அதன் கீழே நின்று கொண்டு ஜானகி சூன்யமான பார்வையுடனும், வெளிறிவிட்ட முகத்துடனும் மரத்தின் கிளைகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இந்த நடுநிசியில் இங்கே என்ன செய்கிறாய்ஜானகி?'' என்றுபெரிதாகக்கத்தினேன்.

''ஒன்றுமில்லை, அண்ணா! நான் ஒன்று கேட்கிறேன். நான் பிழைத்திருந்து மட்டும் லாபமென்ன, சொல்!'' என்றாள் ஜானகி மிகுந்த துயரத்துடன்.

''லாப நஷ்டக் கணக்குகள் எனக்குத் தெரியாது, ஜானகி! இந்த உயிர்கள் நாமாகச் சம்பாதித்துக் கொண்டவை யல்ல. இவற்றையெல்லாம் இஷ்டப்படி உதறித் தள்ளுவதற்கு நமக்குச் சிறிதும் உரிமை கிடையாது.''

''நீ பைத்தியக்காரன், அண்ணா!''





# காந்தி

டாய்லெட் சோப்

காந்தியை நீங்
கள் தேர்ந்
தெடுப்பீர்கள்.
புதிய அலங்
கார உடையில்
பளிச்சிடும்
வெண்மையான
சோப், காலை
இளங்காற்றைப்
போல் நறு
மணமும் புதிது.

## ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்

**உயர்தர சோப், வாசனை சாமான்கள் தயாரிப்பவர்கள்**

(இந்திய மூலதனம், நிர்வாகத்துடன்
இந்தியாவில் தயாரிக்கப்பட்டது)

S.O.M-384-A TAM

# 'அனஸின்'

## ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பான நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளது

1. க்வினையின் சல்பேட் 2. காப்பின்
3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரிதநிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை... அனஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
**'அனஸின்'**
வேண்டுமென்றே
கேளுங்கள்




V 61.

> **அருள் வாக்கு**
>
> மனம் ஒரு பூதம் போன்றது. விக்ரமாதித்யன் கதையில் சொல்லப் பட்ட வேதாளத்தைப் போன்றது. வேதாளம் கட்டுப்பட்டபின்பு எவ்வளவு காரியங்களைச் செய்ததோ, அதைப் போலவே மனமும் செய்யும். அந்த மனத்தை நம் வசப்படுத்துவது தான் யோகமென்பது. அந்த யோகத்திற்கு அங்கம்
>
> 
>
> அஹிம்ஸை. மனத்தை வசப்படுத்தியவர்கள் அஹிம்ஸையை அநுசரித்தோம், மனம் வசப்பட்டது என்று சொல்லுகிறார்கள்.
>
> —ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடிபீடம்.

''இல்லே, இந்த உலகம்தான் பைத்தியக்காரஉலகம். அண்ணன் தங்கையைப் போல நாம் பழகினோம். ஆனால் உலகம் என்ன வென்று நினைத்தது? எது எப்படி யாயினும் சரி ஜானகி, நான் உலகத்தாரைச் சட்டை செய்ய மாட்டேன். இந்தக் கணத்தி லிருந்து நீ என் உடன் பிறந்த தங்கை. எத்தனை கஷ்டங்கள் எதிர்ப்பட்டாலும் நான் உனக்கு ஆதரவாக நிற்பேன். ஆனால் எனக்கு நீ ஒரு வாக்கு அளிக்க வேண்டும்.''

''வாக்கா, அண்ணா?''

''ஆம். எந்த நிலைமையிலும் நீ தற்கொலையைப் பற்றி நினைக்கவேகூடாது.''

ஜானகியின் இதழ்களில் அவளையும் மீறிப் புன்சிரிப்பொன்று மலர்ந்தது.

ஜானகிக்கு ஒன்பது மாதங்கள் நிறைந்தன. ஆஸ்பத்திரியில் சேர்த்தேன். சுகப்பிரசவம் ஆயிற்று. ஆண் குழந்தை. தாயையும் குழந்தையையும் பார்த்துப் போவதற்கு மிகச் சிலரே வந்தார்கள். அவர்களில் ரங்கம்மா ஒருத்தி. ''உன் குடித்தனத்தைச் சேர்த்து வைத்தவள் நான் தான்'' என்று ரங்கம்மா ஜானகியிடம் கர்வத்துடன் சொல்லிக்கொண்டாள். குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு மூக்கையும் விழியையும் பரிசீலனையாகப் பார்த்துவிட்டு, ''குழந்தை முழுக்க முழுக்கச் சந்திரன் ஜாடை தான்'' என்றாள். நான் சிரித்தேன். ஜானகி சிரிக்க வில்லை. புடவைத் தலைப்பால் முகத்தை மூடிக்கொண்டு உள்ளத்துள் குமுறிவரும் துக்கத்தை எப்படியோ மறைத்துக் கொள்ள முயன்றாள்.

ஊரிலிருந்த அப்பாவுக்குச் சங்கதி எப்படித் தெரிந்ததோ, அவர் ராம பாணத்தைப் போன்ற கடிதம் எழுதினார். ''நீ செய்த மகத்தான வேலையைப்பற்றி மிகவும் சந்தோஷம். இப்போதாவது புத்தி தெளிந்து கொண்டு, நீ இந்தக் கடிதம் கிடைத்த வுடனேயே வீடு வந்து சேர்ந்துவிட்டால் நல்லது. இல்லாவிடில் நான் அப்பாவும் அல்ல, நீ எனக்குப் பிள்ளையும் அல்ல.''

கல்லூரியில் இரண்டாவது தவணைச் சம்பளம் கட்ட வேண்டிய காலம் தாண்டி விடும் போலிருந்தது. கையில் தம்பிடி கிடையாது. சம்பளம்கட்டாவிடில் பெயரை அடித்து விடுவார்கள். குட்டி போட்ட பூனையைப் போல் வீடு, கல்லூரி, ஆஸ்பத்திரிகளின் நடுவே அலைந்து கொண்டிருந்தேன். என் போக்கை உணர்ந்து கொண்டு, ''என் அண்ணா! ஹோட்டல் சாப்பாடு உடம்புக்கு ஒத்துக்கொள்ள வில்லையா,என்ன?'' என்று கேட்டாள் ஜானகி.

''சாப்பாடு சங்கதியல்ல ஜானகி! படிப்பை விட்டு விட்டு ஏதாவது வேலையில் சேரலாமென்று நினைக்கிறேன்'' என்றேன்.

''ஏன்? எதற்காக அண்ணா?''

''எதற்காகவா? பணம் அவசியமல்லவா?''

''படிப்பை நிறுத்துவதா? என்மேல் ஆணை, அண்ணா! ஆறு நூறாகட்டும், நூறு ஆறாகட்டும். நீ படிப்பை விடக்கூடாது. அம்மா எனக்கு இந்தச் சங்கிலியை மிச்சம் வைத்து விட்டுப் போனாள். இதை யெடுத்துப் போய் விற்றுவிடு. முந்நூறு ரூபாயாவது கைக்கு வரும். இந்த வருடம் கழிந்துவிடும். அதன் பிறகு கடவுள் இருக்கிறார். அவசியமானால் இருக்கும் நிலத்தில் சிறிதளவு விற்றுவிட்டால் சரியாகிவிடும்'' என்றாள் ஜானகி.

''உன் நகைகளையும், உன் நிலத்தையும் விற்று என்னைப் படிக்கச் சொல்கிறாயா, ஜானகி? அதுவும் இல்லாவிட்டால் உன் கதி-உன் குழந்தையின் கதியென்ன?'' என்றேன்.

''இவனை என் குழந்தையென்று நான் நினைப்பதே இல்லை, அண்ணா! இவனுக்கு நீ இருக்கிறாய். நான் இல்லை. எத்தனைதான் இழுத்துப் பிடித்தாலும் இவன் பால் மறக்கும் வரையிலாவது நான் பிழைத்திருப்பேனா, மாட்டேனா?''

''அப்படிச் சொல்லாதே, ஜானகி! என்னால் கேட்க முடியாது'' என்றவாறு முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டேன். ஆனால் எந்த நிகழ்ச்சியைப் பற்றிய பேச்சையே என்னால் கேட்க முடியாமற் போயிற்றோ, அதே நிகழ்ச்சியை இரண்டு வருடங்கள் கூட முடியு முன்பே கண்களால் காணவேண்டி வந்தது. அந்த இரண்டு வருட வாழ்க்கையில் நான் ஜானகியி னுள்ளே ஜானகியைப் பார்க்க வில்லை! வைராக்கியம் மனித உருவில் இருப்பதைத்தான் பார்த்தேன்.

அன்று பௌர்ணமி. ஆனால் எனக்கு அமாவாசை. மலைவாயிலில் சிவந்த நிறத்தின் ரேகைகள் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டிருந்தன. ஜானகி எலும்புக் கூட்டைப் போல் கட்டிலில் ஒட்டிக் கொண்டிருந்தாள். நான் பாபுவை எடுத்துக் கொண்டு கட்டில் பக்கத்தில் நின்றேன். ஜானகி என்னைத் தலையணை யருகில் உட்காரச் சொன்னாள். உட்கார்ந்து கொண்டேன். தன் தலையை எடுத்து என் மடிமேல் வைத்துக் கொள்ளச் சொன்னாள். ''அண்ணா! நாம் பாபுவுக்கு இன்னும் பெயர் வைக்கவில்லை. என்னவென்று கூப்பிடுவாய்?'' என்று கேட்டாள்.

''என்னவென்று கூப்பிடச் சொல்கிறாய், ஜானகி?'' என்று கேட்டேன்.

"என் அப்பாவின் பெயர் சூரிய நாராயணன். அப்படியே கூப்பிடுகிறாயா, அண்ணா!"

"அப்படியே கூப்பிடுகிறேன், ஜானகி! கட்டாயம் கூப்பிடுகிறேன்."

சிறிது நேரம் மௌனம். மறுபடியும் ஜானகி வாயைத் திறந்தாள்.

"அண்ணா! நீ கட்டாயம் கல்யாணம் செய்து கொள்வாயல்லவா?"

"நான் என்ன சொல்வேன்?" மேல் பற்களால் உதட்டை இறுக்கிக் கடித்தவாறு கண்ணீர் ததும்பும் கண்களால் ஜானகியைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"இன்னும் ஒரே ஒரு வாக்கு மட்டும்தான் வேண்டும் அண்ணா!"

"சொல், ஜானகி!" என்றேன்.

"எனக்குத் தெரியும், அண்ணா! வாசுவுக்கு எப்போதாவது புத்தி வரும். அவன் ஆஸ்தியைக் கரைத்து விடுவான். ஓடு கைக்கு வரும். அப்போது மனிதனாக மாறுவான். அதுவரையில் நீ அவனை மன்னிக்கா விட்டாலும் பரவாயில்லை! அவன் மனிதனாக மாறிய பிறகாவது அவனை மன்னிக்க மாட்டாயா?"

"இதென்ன விசித்திரமான கோரிக்கை, ஜானகி? இந்த உலகில் உன்னைவிட அவனை வெறுக்க வேண்டியவர்கள் எவரும் இல்லை. நீயே அவனை மன்னித்துக் கொண்டிருக்கிறாய். இனி என்னுடையதென்ன இருக்கிறது?"

பாபுவைத் தன் அருகில் படுக்க வைக்கச் சொன்னாள் ஜானகி. சக்தியிருந்த வரையில் தன் மெலிந்த கரங்களால் அவனுடைய உடம்பெல்லாம் தடவிக் கொடுத்தாள். கிரமமாக அவள் கண்கள் மூடிக் கொண்டன. நான் அறைக்குள் சென்று பழரசம் எடுத்து வந்தேன். பலவந்தமாக வாயைத் திறந்து இரண்டு வாய் குடிக்கச் செய்தேன். மூன்றாவது வாய்க்கு ஜானகி மலங்க மலங்க விழித்தாள். வாய் இறுக இழுத்துக் கொண்டது. என் கரத்தினின்றும் கண்ணாடி தம்ளர் கீழே விழுந்து சுக்கல்களாயிற்று.

ஜானகி இறந்து விட்டாள்!

ஜானகியின் வாழ்க்கை ஒரு துயரமயமான கீதம்! ஆனால் அது மிகமிக இனிமையான துயர கீதம்! கேட்டுக் கொண்டிருந்தால் ஏதோ விவரிக்க முடியாத துயரச்சுமை நெஞ்சை அழுத்தும். ஆனால் எத்தனை நேரம் கேட்டாலும் இன்னும் கேட்கலாமென்றே இருக்கும்.

கதை முடிந்து விட்டது. சூரியா! ஜானகி இறந்து போய் இருபத்தெட்டு வருடங்களாகின்றன. உனக்கு இப்போது முப்பது வயது.

பி. எல். படிப்பை முடித்துவிட்டு, விவாகம் செய்து கொண்ட புதிதில் ஒருமுறை அனந்தபுரம் சென்றேன். ஒரு மூலையிலிருந்த ஹோட்டலிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்த வாசுவைப் பார்த்தேன். நன்றாக இளைத்து விட்டான். கண்கள் ஆழத்தில் விழுந்திருந்தன. பாதங்களின் அருகில் கிழிசல்கள் விழுந்த பைஜாமாவின்மேல் அழுக்குப் படிந்த குட்டையான கைகள் கொண்ட சொக்காய் போட்டுக் கொண்டிருந்தான். உதடுகளின் நடுவில் பீடி புகைந்து கொண்டிருந்தது.

ஒரு நண்பன் மூலமாகத் தெரிய வந்தது. வாசுவின் ஆஸ்தி பாஸ்தியெல்லாம் சீட்டாட்டத்திலும், மற்றும் அட்டகாசங்களிலும் கர்ப்பூரத்தைப் போல் கரைந்து விட்டனவாம்.

ஒரு தடவை திருப்பதியிலிருந்து தர்மாவரத்துக்குப் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். கதிரி ஸ்டேஷனில் இன்ஜினுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொள்வதற்காக ரயில் பதினைந்து நிமிடங்கள் நின்றது. சிறிது சிறிதாக உலகத்தை இருள் கவ்விக் கொண்டிருந்தது. பிளாட்பாரத்தின்மேல் பீடி, சிகரெட், வெற்றிலை பாக்கு விற்றுக்கொண்டே ஒருவன் நடந்து கொண்டிருந்தான். நன்றாகக் கூர்ந்து பார்த்த பிறகே அவனை அடையாளம் புரிந்து கொள்ள முடிந்தது. தாடி வளர்ந்திருந்தது. பொத்தான்கள் இல்லாத சொக்காய்க்குள்ளிருந்து எலும்புக் கூடுபோன்ற மார்பு காட்சியளித்தது. தலை அப்போதே நரைத்துக் கொண்டிருந்தது.

நான்கு வருடங்களுக்கு முன்பு என்று நினைக்கிறேன். கொதிக்கும் வெயிலில் ஒரு நாள் பிற்பகல் ஹிந்துபுரம் பஸ் ஸ்டாண்டில் புளிய மரத்தின் கீழே நின்று பஸ்ஸுக்காக எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். ஒரு கிழவன் அருகில் வந்து கையை நீட்டினான். "ஐயா! முடவன்" என்றான். உண்மைதான். இடது கை முழங்கை வரை இல்லை. காலணாவுக்காக ஜேபியில் கையை விட்டுக்கொண்டே, பிச்சைக்காரனின் முகத்தைப் பார்த்தேன். காடு போல் மண்டிக் கிடந்த தாடியுடன், கந்தல் கிழிசல்களுடன் கூடிய உடையுடன், இளைத்து உருமாறிவிட்ட அந்த உருவத்தில் கனவில் தென்படுவதுபோல் எனக்கு முப்பது வருடத்துக்கு முந்திய வாசு தென்பட்டான்.

"உன்னுடைய பெயரென்ன?" என்று கேட்டவாறே காசை நீட்டினேன்.

அவன் என்னைத் தெரிந்து கொண்டான். நீட்டிய கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு, திரும்பிப் பார்க்காமல் தூசியில் நடந்தவாறே தூரத்தில் போய் விட்டான்.

கடைசித் தடவை எட்டு மணிக்குப் புறப்படப்போகும் யாத்திரை ஸ்பெஷலுக்கு நல்ல வேளையென்று, நாம் வீட்டில் முன்னதாகவே புறப்பட்டோம். நானும் உன் சித்தியும் காரின் பின் ஸீட்டில் உட்கார்ந்திருந்தோம். நீ காரை ஓட்டிக் கொண்டிருந்தாய். நீ பார்த்தாயோ இல்லையோ, எனக்குத் தெரியாது. கார் 'கேட்'டைத் தாண்டித் தெருவுக்குள் வரப் போகிறது. வழியின் பக்கத்தில் வாசு காலதேவனின் விளையாட்டால் அநேக மாறுதல்களுக்குள்ளான குரூபமான உருவத்துடன் மறுபடியும் எனக்குத் தென்பட்டான்.....

★

**கா**கிதங்களை அலமாரியில் வீசிவிட்டு, சூரியா 'தடா'லென்று எழுந்தான். கதவைத் திறந்துகொண்டு கீழே ஓடினான். மாடிப்படியருகில் நீரஜா எதிரே வந்தாள். "உங்களுக்காகத்தான் மேலே வருகிறேன். நான் நினைத்தபடியேதான் ஆயிற்று. ஆஸ்பத்திரியிலிருந்து இப்போதுதான் 'போன்' செய்தார்கள்" என்று கூறினாள்.

"அதுவும் முடிந்து விட்டதா?" என்று துயரத்துடன் கூறியவாறே சூரியா வலுவிழந்து சாய்வு நாற்காலியில் விழுந்தான்.

தூரத்தே சாக்குருவி ஒன்று ஓலமிட்டது.

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited Managing Editor: T. Sadasivam.**

REGISTERED No. M. 4792
Registered as a Newspaper in Ceylon



